நு தமிழ்நாடு வரிசை (2)

# கோயம்புத்தூர் மாவட்டம்






'சோமலெ'





பாரி நிலையம்
59. பிராட்வே · சென்னை 1.

# முன்னுரை

இந்நூலுக்குச் செய்திகள் 'சேகரிக்க யான் கோவை ாவட்டத்திற்குச் செல்ல எண்ணியபோது, சென்னையி ுள்ள அமெரிக்கச் செய்தித்துறை அலுவலர்கள் யான் காவை மாவட்டத்தில் பல இடங்களில் சொற்பொழிவு ர் செய்ய வேண்டுமென விரும்பினர்; அதற்குரிய ற்பாடுகளைக் கோவை மாவட்ட நூலகக் குழுவினர் சய்தனர். இதன்பயனாக, 'புதிய நண்பர் பலரைப் பறவும் சிறு நகரங்களின் பிரச்னைகளையும் கோவை ாவட்டத்தின் தனிச் சிறப்புக்களையும் தெள்ளத் தெளி பத் தெரிந்துகொள்ளவும் வாய்ப்பு ஏற்பட்டது. இவ் வாய்ப்பை வழங்கிய நிறுவனங்களுக்கும் அன்பர் களுக்கும் நன்றி நவிலுவது என் கடமையாகும்.

யான் விரும்பிய விவரங்களை அனுப்பிய கல்லூரித் தலைவர்கள், தொழில்துறைத் தலைவர்கள், நகராண்மைக் ்க ஆணையர்கள், சட்டசபை உறுப்பினர்கள், தொழிற் ல்வி பயிலும் மாணவர்கள் ஆகிய அனைவர்க்கும் என் ன்றி உரியது.

இம்மாவட்டத்தைப் பற்றிய அரிய செய்திகளை னக்குத் தெரிவித்த கோவைகிழார் சி. எம். இராமச் ந்திரஞ் செட்டியார், பி. ஏ., பி. எல்., எப். ஆர். ஜி. எஸ். ண்டன்) அவர்களுக்கும், திருப்பூர் நகராண்மைக்கழக ணையர் இராமலிங்கம் அவர்களுக்கும், இந்நூலைப் டித்துப்பார்த்துக் கருத்துக்கூறி என்னை ஊக்குவித்த சதாப்பேட்டை ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி முதல்வர் . இரா. பெருமாள் முதலியார் எம். ஏ., எல். டி.

அவர்களுக்கும், நாட்டுப்பாடல் முதலியவற்றைத் தந்த
விய நண்பர் - சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்
துறையில் மதுரையில் பணியாற்றி வருபவரும் கோவ
யில் சில ஆண்டுகள் வாழ்ந்தவருமான — மெ. சுந்தர
எம். ஓ. எல்., எம். லிட். அவர்களுக்கும் கோயம்புத்து
அரசாங்கக் கலைக்கல்லூரித் தமிழாசிரியர் கே. எ
மகாதேவன், பி. எஸ். சி., பி. ஏ. (ஆனர்சு) அ
களுக்கும் கையெழுத்துப் படியை டைப்பு அடித்து
தந்த சுப. முத்தையா அவர்களுக்கும் இந்நூ
அச்சிட்டுத்தந்த ஜெனரல் பிரிண்டர்ஸ்க்கும் சிறப்புல
வழங்கியுள்ள அமைச்சர் சி. சுப்பிரமணியம் அவர்களு
கும் அரசாங்கச் செய்தி — விளம்பரத் துறையின் துணை
நெறியாளர் கு. ராஜவேலு அவர்களுக்கும் என் நன்
உரியது.

'சோமலெ'

## தமிழ்நாடு கல்வி–நிதி அமைச்சர்
## உயர்திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள்
## வ ழ ங் கி ய

# சி ற ப் பு ரை

தமிழ்நாடு தொன்மை மிக்கது. எனினும், நமக்கு முறையான வரலாறு இல்லை. கல்வெட்டுக்கள், இலக்கியங்கள், செப்பேடுகள் முதலானவற்றைக் கொண்டே ஒருவாறு நாம் கடந்த கால வரலாற்றினை அறிய முடிகிறது. இலக்கியங்களில் மிகைபடக் கூறும் வழக்கமுள்ளதால் சில நேரங்களில் உண்மை வரலாற்றை அவற்றிலிருந்து அறிவது கடினமாக இருக்கிறது. ஆகையினால், எதிர்காலச் சந்ததியினருக்கும் இத்தகைய சங்கடம் ஏற்படாதவாறு, முறையாக வரலாற்றைத் தொகுத்து உரைப்பது நமது கடமையாகும்.

தமிழ்நாட்டில் ஒவ்வோர் ஊருக்கும் ஒரு தனிச் சிறப்பு உண்டு. பல ஊர்களுக்குத் தல புராணங்கள் எழுந்தன. இவை பக்திக்கு முக்கியத்துவம் அளித்தாலும், தலங்களின் சிறப்பை விரிவாக வருணித்து, இலக்கியத்தை அணி செய்தன. எனினும், ஊரின் அமைப்பு, தட்பவெப்ப நிலை, மக்களின் வாழ்க்கை முறை, விளை பொருள்கள், கிளை மொழி முதலியவற்றைப் புதிய கண்ணோட்டத்துடன் ஆராய்ந்து கூறும் நூல்கள் தமிழில் எழுதப்படவில்லை. இந்தத் துறையில் ஆங்கிலேயர்கள் துருவி ஆராய்ந்து எழுதிய "மாவட்ட நூல்கள்" (District Manuals) நல் வழி காட்டின. அவை எழுதப்பட்டுப் பல்லாண்டுகள் ஆவதால், இன்றுள்ள நிலவரத்தை அவற்றால் சரிவர உணர்த்த முடியாது. அத்துடன் அவை அந்நியர் ஆட்சிக் காலத்தில் எழுதப்பட்டவை.

சுதந்திரத்திற்குப் பின்னர் ஐந்தாண்டுத் திட்டங்களினால் விளைந்துள்ள முன்னேற்றங்களை அவற்றில் காணவே இயலாது. எனவே, இன்று மாவட்ட வாரியாக ஒவ்வோர் ஊரின் வரலாறு, முன்னேற்றம் முதலானவற்றைத் தொகுத்து நூல் வடிவில் வெளியிடும் முயற்சி மிகவும் பாராட்டத் தக்கது ஆகும்.

"கொங்கு மலிந்தால் எங்கும் மலியும்"

என்றொரு பழமொழி உண்டு.

"பொற்பு மிகுகொங்கு நாடு செழித்திடப் பூமியெங்கும்
நற்பய னுற்றுச் சுகித்திடும்"

என்று கொங்கு மண்டலச் சதகமும் புகழ்கிறது. இக்கொங்கு நாடு, இன்றைய கோயம்புத்தூர்—சேலம் மாவட்டப் பகுதிகள் ஆகும்.

கோவை மாவட்டம், தமிழ்நாட்டின் பெரிய மாவட்டங்களில் ஒன்று. இங்கு வேளாண்மை, பஞ்சாலைத்தொழில், பொறி இயல் தொழில் ஆகியவை செழித்து வளர்ந்துள்ளன. வேளாண்மை வருமான வரி (Agricultural Income Tax) கூடுதலாகச் செலுத்தியிருப்பதும், அதிக உற்பத்திப் போட்டியில் மாநில, மத்திய அரசாங்கங்களின் பரிசைப் பெற்றிருப்பதும் கோவை மாவட்டமே ஆகும். இங்குப் பஞ்சாலைத் தொழிலும் பெருஞ் சிறப்பு எய்தியிருப்பதால், "தென்னிந்தியாவின் மான்செஸ்ட்டர்" என்று கோவை மாநகரம் போற்றப்படுகிறது.

இவ்விதச் செய்தி மலர்களையெல்லாம், அவற்றின் செவ்வி குறையாது தொடுத்து, நெஞ்சில் அணிவதற்குரிய நூல் மாலையாக்கியிருக்கும் ஆசிரியர் "சோமலெ" அவர்களின் பணி பாராட்டிற்குரியது. பல நூல்களைப் படித்துத் தெளிந்ததோடு, இம்மாவட்ட மக்களுடன் பழகி அவர்தம் பழக்கவழக்கங்கள், பேச்சு மொழி முதலியவற்றையும் நேரில் கண்டு அறிந்திருக்கிறார். ஆற்றொழுக்கான எளிய தமிழ் நடையில் எந்த விஷயத்தையும் அவரால் சிறப்பாகச் சொல்ல முடிகிறது.

"சீர்ப் பயணம்" (Tourism) பெரிதும் போற்றப்படும் இந்நாளில், கோவை மாவட்டத்தைப் பற்றிப் பயனுள்ள எல்லாத் தகவல்களையும் தமிழ் மக்கள் தெளிவாக அறிந்து கொள்ளும் வகையில் இந்நூல் அமைந்திருப்பது சிறப்பான அம்சமாகும். இதனால் இந்நூலுக்குத் தமிழ்நாட்டில் நல்ல வரவேற்பு இருக்கும் என்று நம்புகிறேன். நூலாசிரியர் திரு. "சோமலெ" அவர்கள் இச்சீரிய பணியில் மேலும் சிறந்தோங்க வாழ்த்துகிறேன்.

# உள்ளுறை

# கோயம்புத்தூர் மாவட்டம்

## 1. ஓங்குபுகழ் கொங்குநாடு

கொங்குநாடு வரலாற்றுப் புகழுடையது. அந் நாட்டின் தாயகம், உயிர்நாடி கோவை மாவட்டம். இதைப்பற்றிய செய்திகள் அனைத்தையும் தெரிவிப்பதே இந்நூலின் குறிக்கோள்.

ஆலைகளும் கல்விச்சாலைகளும் ஆராய்ச்சி நிறுவனங்களும் நிறைந்து அழகுக்கு அழகுசெய்யும் கோவை மாவட்டம் தமிழ்நாட்டின் எழில்நிறைந்த பகுதிகளில் ஒன்றாகும். "இயற்கையாக அமைந்த குறிஞ்சிநிலப் பகுதி கைபுனைந்து இயற்றாக் கவின்பெறுவனப்பை"க் கோவை மாவட்டத்துக்கு நாளும் நல்கிவருகிறது. கோடையிலே இளைப்பாற்றிக்கொள்ளக் குளிர்தருவாகக் கோவை மாநகர் காட்சிதருகிறது.

இனிமையும் சுவையும் மிகுந்த சிறுவாணி நீர் கோவை நகர்க்குப் பெருஞ்சிறப்பை நல்கிவருகிறது. "பார் முழுவதும் ஏர் முனையிலே" என்ற பதம்பாடி வளத்தை நிதம் வளர்க்கும் வேளாண்மைக் கல்லூரி கோவைக்கு அழியாப் புகழ் தருகிறது. அதன்கண்ணும் அதையொட்டிய நிலையங்களிலும் பெருக்கப்பட்டுவரும் கோயம்புத்தூர்ச் சம்பா நெல் விதையும் கோயம்புத்தூர்க் கரும்புவகையும் அவற்றின் அருமைக்குச் சான்று பகர்கின்றன. நீர்வளமும் நிலவளமும் சிறப்பப் பெற்றதாய், நாட்டுவளத்துக்கு நல்லதோர் எடுத்துக்காட்டாய், கோவைமாவட்டம் தனிச்சிறப்புடன் விளங்குகிறது.

மக்களுடைய நல்வாழ்வுக்கு அடிப்படையாக தொழில்வளத்தின் தொட்டிலாகவும் கோவை மாவட்டம் விளங்குகிறது. கமலா, லெட்சுமி, வசந்தா, சரோஜா, பங்கஜா என ஆரணங்குகளின் பெயரால் அமைந்த ஆலைகள், வாழவேண்டிய அரசாங்கத்துக்கு வழி வகுத்துத்தரும் வரிகளின் வான்முட்டும் தொகை, அயல்நாடுகளுக்குச் செல்லும் வணிகக் கோமான்களின் மிகுதி, ஊர்திகளின் எண்ணற்ற பெருக்கம், புன்னகையினும் மேலாகப் போற்றப்படும் பொன்நகை வாணிகம், ஆகாய விமானங்களை அச்சமின்றி ஓட்டும் வளர் இள மகளிர் கூட்டம், இன்னபிற சிறப்புக்களால் கோவை மாவட்டம் குன்றின்மேலிட்ட விளக்காக இலங்குகிறது.

'மொழிபெயர் தேயத்தார்' என்று தமிழ் இலக்கியங்கள் கூறும் மேற்கோளுக்கு இலக்காகப் பல இனத்தாரும் மொழியாளரும் கலந்த கேண்மையராகக் கோவைமாவட்டத்தில் காட்சியளிக்கின்றனர். வாழைப்பழமும் தேத்தண்ணீரும் மலையாளிகள் விற்க, உடையினைத் தெலுங்கு நாயுடுக்கள் நல்க, பஞ்சு பருத்திச்சந்தை குசராத்தியரோடு கொஞ்சிமகிழ, நிலமென்னும் நல்லாள் கன்னடியரோடு நேயக்கரம் நீட்ட, மலைபடுபொருள்களாகிய காப்பி, தேயிலை, ஏலக்காய் விளையும் தோட்டங்கள் வெள்ளையரால் தொடங்கப்பட,தேனிரும்புத் தொழிலும் செயற்கைப்பட்டுத் தொழிலும் மேலைநாட்டார் மேற்பார்வையிலும் கூட்டு முதலிலும் பெருகிவர, செந்தமிழ்ச் செல்வியாகிய கொங்கரசி வணிகச் சந்தையில் உலா வருகிருள். மொழிநூல் துறையில் தனிப்பட்ட சொல்லாட்சிகளை நடமாட விட்ட பெருமையும் கோவைக்கு உண்டு. இங்ஙனம் பன்னலமும் ஆர்ந்து நாளும் செழிப்புற்று வரும் கோவை மாவட்டத்தின் அருமையையும் பெருமையையும், வரலாற்றையும் வாழ்வையும் அடுத்துவரும் பகுதிகளில் ஆராய்வோம்.

## 2. மலைவளம்

கொங்குநாடு மலைநாடு; அதன் ஒரு பகுதியான காவை மாவட்டமும் மலைவளம் நிரம்பியது. மேற்குத் தாடர்ச்சி மலைக்கும் மைசூர் இராச்சியத்துக்கும் )டையே அமைந்தது; பொள்ளாச்சிக்கும் பாலக்காட்டுக் ம் இடையே மட்டும் சமவெளி காணப்படுகிறது.

சேலம், கோவை இரு மாவட்டங்களும் சேர்ந்த காங்கு நாட்டின் அமைப்பை ஊன்றிப்பார்த்தால், சுற்றி ம் மலைகளே அந்நாட்டின் எல்லையாக உள. அவற்றி ருந்து தோன்றும் சிற்றாறுகளின் நீரால் சோழநாட்டை ிருச்சி—தஞ்சை) வளமாக்குவதற்குக் காவிரி செல்லுவ ற்காகக் கிழக்குப் பக்கத்தில் மட்டும் பள்ளத்தாக்கு உளது.

'சென்னிமலை சிவன்மலை செஞ்சேரி மலையோ
செவணமலை மருதமலை சேர்வரையன் மலையோ
பன்னிமலை பவழமலை பழனிமலை இவையோ
பாலமலை கொல்லிமலை பலமலையும் எமதே'

என்பது கொங்கு நாட்டுக் குறவர் பாடல்.

பொள்ளாச்சி வட்டத்தில் ஆனைமலை இருக்கிறது. இது நீலகிரி மலையின் தொடர்ச்சியே; 32 கி. மீ. இடை வெளியே பாலகாட்டுக் கணவாய். ஆனைமலை உச்சியி லுள்ள ஆனைமுடிச் சிகரம் நீலகிரி மலையின் உச்சியாகிய தொத்தர் பெட்டாவைவிட 100அடி உயரமானது. இதன் உயரம் 8850 அடி அல்லது 2685 மீட்டர். எனவே இதுதான் தென் இந்தியாவில் மிக உயரமான இடம்.

இம் மலையின் உச்சியிலுள்ள அக்காமலையின் உயரம் (8167 அடி) 2491 மீட்டர்; தனக்கு மலையின் உயரம் (8244 அடி) 2516 மீட்டர். இங்கே ஆண்டுதோறும் (200 அங் குலம்) 5080 மில்லி மீட்டர் மழை பெய்கிறது. தமிழ் நாட் டில் மிகக் கூடுதலாக மழை பெய்யும் இடம் இதுவே.

கேரள எல்லையிலுள்ள இந்த மலையின் தொடர்ச்சியே மதுரை மாவட்டத்து ஏலமலை, பழனிமலை ஆகியவை ஆனைமலையின் மேற்கு எல்லையில் கொச்சிப் பகுதி மலைகளும் கொல்லங்கோடு மலைகளும், தெற்கிலும் கிழக்கிலும் திருவிதாங்கூர் மலையும் பழனிமலையும் இருக்கின்றன.

மலைகளின் பெயர்களையும் அவை உள்ள வட்டங்களையும் கீழே காண்க :

| எண் | மலையின் பெயர் | வட்டம் |
|---|---|---|
| 1. | மருதமலை | கோவை |
| 2. | குருடிமலை | |
| 3. | அநுமகுமாரர் மலை | |
| 4. | கணவாய்மலை | |
| 5. | சேவணம்பட்டிக்காடு (இரத்தினகிரி) | |
| 6. | ஓதிமலை | அவிநாசி |
| 7. | குருந்தமலை | |
| 8. | தோகைமலை | |
| 9. | தென்சேரிகிரி | பல்லடம் |
| 10. | அலகுமலை | |
| 11. | முத்துக்குமாரமலை | |
| 12. | மலைப்பாளையம் | |
| 13. | பொன்மலை<br>கிணற்றுக் கடவுமலை | பொள்ளாச்சி |
| 14. | கோலர்பட்டி | |
| 15. | ஆனைமலைக்கரடு | |
| 16. | திருமூர்த்திமலை | உடுமலைப் பேட்டை |
| 17. | ஊதியூர்மலை | தாராபுரம் |
| 18. | சிவமலை | |
| 19. | வட்டமலை | |
| 20. | திருமாங்காடு | |

| | மலை | |
|---|---|---|
| 1. | சென்னிமலை | ஈரோடு |
| 2. | மலைப்பாளையம் | |
| 3. | எழுமதூர்மலை | |
| 4. | எட்டிமலை | |
| 5. | அரச்சாலூர்மலை | |
| 6. | அரசண்ணாமலை | |
| 7. | ஊராய்ச்சிக்கோட்டை | பவானி |
| 8. | பருவாச்சிமலை | |
| 9. | தவளகிரி | கோபிச்செட்டிபாளையம் |
| 10. | பவளகிரி | |
| 11. | நாகமலை | |
| 12. | திடமலை | |
| 13. | ஒழல கோவில்மலை | |

## 3. காட்டுவளம்

" வெயில் நுழைபு அறியா குயில் நுழையு பூம் பொழில்" என்று தமிழ் இலக்கியத்தில் சிறப்பிக்க பெற்றுள்ளவாறு, இடைக்கள்ளி நுழைதற்கும் இடமின் அடர்த்தியாக வளர்ந்துள்ள காடுகளையுடைய பெருமை கோவை மாவட்டத்திற்கு உண்டு. காட்டுவளம் மிகு யாக இருப்பதால், காடுகள் நிர்வாகத்துறையின கோவையை இரண்டு மாவட்டங்களாகக் கணக்கி டுள்ளனர்.

### கோயம்புத்தூர் வடக்கு (காட்டியல்) மாவட்டம்

இது தலைமலை, சத்தியமங்கலம், அந்தியூர், பவானி, பார்கூர் பகுதிகளைக் கொண்டது. இங்கு 910 சதுர மைல் (2330 சதுர கி. மீ.) பரப்புக்கு நல்ல காடுகள் உள்ளன. அவை மைசூர் இராச்சியத்துக் காடுகளின் தொடர்ச்சி. அவற்றின் உயரம் 2500 முதல் 3000 அடி வரை (750 முதல் 910 மீட்டர் வரை). அக்காடுகளுக்குக் கோம்பைக் காடுகள் என்று பெயர்.

அவற்றில் வேங்கை, மஞ்சள் கடம்பை, சந்தன மரங் கள் மிகுதி. அவரைப்பட்டையும் ஏராளமாகக் கிடைக் கிறது. சத்தியமங்கலத்திலும் பவானியிலும் மூங்கில் உற்பத்தி கூடுதலாக உள்ளது. தீப்பெட்டித் தொழி லுக்கு வேண்டிய மரங்களையும், முந்திரிச்செடிகளையும் காட்டியல் அலுவலர்கள் பயிரிட்டுவருகின்றனர்.

இம் மாவட்டத்துக் கலியன் சோலைக் காடுகளில் வெள்ளைக்கோங்கு, நங்குல், மயிலை, சொக்லா, கீரி, நெடு நாரி முதலிய பலவகை மரங்கள் இருக்கின்றன. அட்ட

ாரி, காட்டுப்பூவன் ஆகிய மரங்களும் சிறிதளவு
ாணப்படுகின்றன. மேட்டுப்பாளையத்திற்கு அருகே
|ள்ள ஓடந்துறை 'ரிசர்வ்' காடுகளில் நீர்ப்பாசன
ைறையைக் கையாண்டு, ஆண்டுதோறும் 240 ஏக்கர்
ீதம் 20 ஆண்டுகளில் 4800 ஏக்கர்ப் பகுதியில் தேக்கு
ரம் நட அரசாங்கத்தார் தொடங்கியுள்ளனர். இந்த
ரங்கள் மின்சாரக் கம்பங்களாகவும் இரயில் பாதையில்
ரக்கட்டைகளாகவும் பயன்படும்.

மிஞ்சிக்குழிப் பள்ளத்தாக்கில் காட்டெருமைகள்
ராளமாகக் காணப்படுகின்றன.

## காயம்புத்தூர் தெற்கு (காட்டியல்) மாவட்டம்

அவிஞசி, கோயம்புத்தூர், பொள்ளாச்சி, உடுமலைப் பேட்டை, தாராபுரம் வட்டங்கள் இதில் அடங்கி யுள்ளன. இங்குள்ள முக்கியமான காடுகளின் பரப்பு 660 சதுர மைல் (1690 சதுர கி. மீ.). போளுவாம்பட்டி, தடாகம் பள்ளத்தாக்குகளிலும் ஆனைமலையிலும்தான் குறிப்பிடத்தக்க காடுகள் உள்ளன.

இக்காடுகள் கடல் மட்டத்திலிருந்து 300 மீட்டர் முதல் 1500 மீட்டர் உயரம் வரை உள்ளன. இவற்றில் 30 அங்குலம் முதல் 60 அங்குலம் (800 – 1600 மில்லி மீட்டர்) வரை மழை பெய்கிறது. வால்பாறைப் பகுதி எப்போதும் பச்சைப்பசேலென்று கண்ணுக்கினிய பசுமையான காட்சி நல்கும். துணைக்கடவுப் பகுதியில் தேக்கும் வேங்கும், மேட்டுப்பாளையப் பகுதியில் சந்தன மரமும் மிகுதியாக உள்ளன.

ஆனைமலையில் பல்வகை மரங்களும் செடிகளும் தோட்டங்களும் உள்ளன. இந்த வளமான பகுதிகள் காணத்தக்கன. கல்லாறு, பரம்பிக்குளம் ஆற்றுடன்

சேருமிடத்துக் கருகே இரு மலைகளுக் கிடையேயுள்
'நம்பர் பாறை'யும், கடுகுத் தோட்டங்களும், ஓர் ஆ
உயரம் வரை வளர்ந்து கொடிபோலப் படர்ந்து ஏலக்கா
காய்க்கும் செடிகளுள்ள தோட்டங்களும் காண
தக்கவை. இஞ்சி, மஞ்சள், தேன் ஆகியவையும் இங்
கிடைக்கின்றன. இவற்றைக் காணும்போது,

'தேனும் செந்தினை இடிகளும் தீஞ்சுவைக் கனியு
ஊனும் துய்ப்பன. உடுப்பன வுரித்தழைகள்;
வானும் தோய்சுனை ஆடுவ; மணிவரை இருப்ப,
ஏனும் சூழ்ந்தகுன்றவர்க்கொரு நல்குரவின்றே'

என்ற செய்யுளின் உட்பொருளை உணர்ந்து இன்பு
லாம்.

**மரங்கள்**

ஆனைமலையில் பலவகை மரங்கள் தோற்றப் பொலி வுடன் வளர்கின்றன. சவுக்கு மரங்கள், தோதகத்தி மரங்கள், சுருளி மரங்கள், வேங்கை மரங்கள், சடச்சி மரங்கள், குரங்குப் பலா மரங்கள், லாடப்பூ மரங்கள், பாலி மரங்கள், ஈச்ச மரங்கள், கொட்டாப்புளி மரங்கள் ஆகியவை மிக உயரமாக வானோக்கி வளர்ந்துள்ளன.

டாப்சிலிப்புக்கு அருகே பள்ளத்தாக்கிலுள்ள அடர்ந்த காடுகளில் தேக்கு மரங்களும், அவற்றோடு சேர்ந்து கருமருது, வேங்கை, வெண்தேக்கு மரங்களும் வளர்கின்றன. மஞ்சக் கடம்பை மரங்களும், தோதகத்தி மரங்களும் தென்படுகின்றன. இந்த மரங்களை இழுக்க, காட்டு நிர்வாகத் துறையினர் யானைகளைப் பயன் படுத்தி வருகின்றனர்.

இந்தியாவில் கிடைக்கும் தேக்குமரத்தில் மிக உயர்ந்த சாதி கேரளத்தில் நீலாம்பூர்ப் பகுதியிலும், அதற்கு அடுத்த தரம் ஆனைமலையிலும் கிடைக்கிறது. 200 ஆண்டுகளுக்கு முன்னர் பம்பாய்த் துறைமுகம் கட்டு

தற்கு இங்கிருந்துதான் ... அனுப்பப்பட்டது.
ட்டு வளம் தமிழ் நாட்டில் ஆனைமலையில் சிறந்து விளங்
ம் அருமையைக் கடந்த சில ஆண்டுகளாகத்
ான் நமது அரசாங்கத்தார் உணர்ந்திருக்கின்றனர்.
ம்மரங்கள் யாவும் காட்டியல் துறையினரால்
பாள்ளாச்சியில் விற்பனை செய்யப்படுகின்றன. இதனால்
பாள்ளாச்சி நகரில் மரம் அறுக்கும் ஆலைகள் பெருகி
ள்ளன. கோவை மாவட்டத்தில் காடுகளின் வாயி
ாகக் கிடைக்கும் வருவாய், தமிழகத்துக் காடுகளின்
நவாயில் பாதி ஆகும்.

அரக்கு மரங்களையும் தோல் பதனிடுவதற்குத்
தவையான பட்டைகளையும் ஆனைமலையில் காட்டியல்
றையினர் இப்போது பயிரிட்டு வருகின்றனர். சின்
ானு பயிரிடப்படும் 1000 ஏக்கர்ப் பகுதியில் மூங்கில்
வளர்க்கும் திட்டமும் இருந்து வருகிறது. அசாம் இராச்
சியத்தில் ஆனைமலை போன்ற உயரமுள்ள மலைப் பகுதி
களில் மூங்கில் நன்கு வளருவதால் அந்த முறைப்படியே
இங்கும் வளர்த்து, பிறகு மூங்கிலை மரக்கூழாக்கும்
தொழிற்சாலையை ஏற்படுத்த இயலும்.

**உயிரினங்கள்**




'கரடி அடர்ந்த வனம்
காட்டானை தூங்கும் வனம்
சிறுத்தை அடர்ந்த வனம்
சிறுபுலிகள் தூங்கும் வனம்

என்று ஆனைமலைக் காடுகளைச் சொல்லலாம். மரங்கள்
எத்துணை வகையுண்டோ அத்துணையும் இருப்பது
போலப் பலவகை உயிரினங்களும் ஆனைமலையில் நடமாடு
கின்றன. அவற்றுள் சிறந்து விளங்குவது தோற்றப்
பொலிவுள்ள வெள்ளை நிறமான காட்டெருமை. இது
மஞ்சம்பட்டியில் ஏராளமாக இருக்கிறது. இங்கு

(உருந்தா' பள்ளத் தாக்கில்) ஒரு தேசியப் பூங்கா அமை
கும் வேலை மேற்கொள்ளப்படுமென்று தெரிகிறது. இை
யொட்டி, கோவை நகரில் உயிரினக் காட்சிக்கூட
ஒன்றும் உருவாகும்.

ஆனைமலையிலுள்ள அடர்ந்த சோலைகளுள் கா
டெருமை தவிர, கோழிகளும் குள்ளநரிகளும், பாம்
களும், பன்றிகளும், சருகு மான்களும், சுண்டெ
போன்ற மான்களும், குரைக்கும் மான்களும், கேளையா
களும், கரடிகளும் கணக்கின்றியும் கவலையின்றிய
வாழ்கின்றன. ஆனல் இந்த மலையிலுள்ள உயிரின
களுக்கெல்லாம் அரசனுக விளங்குவது "ஆனை"; அத
பெயராலேயே இம்மலையும் குறிப்பிடப்படுகிறது.

வரகளியாறு என்னுமிடத்தில் யானை முகாம் ஒ
றையும் காட்டியல் துறையினர் நடத்திவருகின்றனர்.
ஆனைமலையிலுள்ள யானைகளைப் பற்றிச் சில சுவையான
கதைகள் உண்டு. ஓர் அலுவலர் யானைமீது சென்ருராம்
காட்டினுடே; அவரது தொப்பி கீழே விழுந்துவிட்டதாம்;
உடனே யானை அதை எடுத்துத் தும்பிக்கையை
உயர்த்தி அலுவலர்க்குக் கொடுத்ததாம். சிறிது
தொலைவு சென்றதும், நண்பரிடத்தில் 'இதோ இந்த
யானையை எப்படிப் பழக்கியிருக்கிறேன் என்று பாருங்
கள்' எனக் கூறித் தொப்பியை அந்த அலுவலர் கீழே,
போட்டாராம். உடனே யானை அந்தத் தொப்பியைத்
தும்பிக்கையால் எடுத்துக் காலால் மிதித்துச் சுக்கு
நூருக்கிற்ரும்.

ஒரு நாள் காட்டு அலுவலர் சுற்றிப்பார்த்தார்.
'நேற்றிரவு யானை பிடிக்கும் குழிகளுக்குள் 17 யானைகள்
விழுந்துவிட்டன' என்று அங்குள்ளவர்கள் சொன்ஞர்
களாம். உடனே கயிறுகளும் சங்கிலிகளும் வரவழைத்து
யானைப்பாகர்கள் நான்கு பெரிய யானைகளை மேலே

ற்றி, யானை முகாமுக்கு அழைத்துச் சென்று அங்கு
பற்றை அடைத்து வைத்திருந்தனராம். மறுநாள் காலை
 சென்று பார்த்தபோது யானை முகாமில் யானைகளைக்
ணோம். குழிக்குள் இருந்த 13 யானைகள் இங்கு
து, இந்த நான்கு 'கைதிகளையும்' விடுவித்துக்
த்திக் கொண்டு சென்றுவிட்டனவாம்.

நமது மாநிலத்துக் காடுகள் நிர்வாகத் துறை
ரிடம் 27 யானைகளே உள்ளன. வெளி மாநிலங்
ளிலிருந்தும் வெளிநாடுகளிலிருந்தும் உயிரினக் காட்சிக்
டங்களுக்கு 'யானை' வேண்டுமென்று அடிக்கடி வேண்டு
கள் வருவதால் காடுகளில் உள்ள யானைகளைப் பிடிக்
 முயற்சியையும் இந்தத் துறையினர் மேற்கொண்
ளனர்.

## துன்னல்கள்

ஆனை மலைக்காடுகளில் மலேரியா, பெருமழை, காற்றின் கொடுமை, போக்குவரத்து வசதியின்மை, யானை, புலி முதலிய விலங்குகளால் ஏற்படும் தொல்லை—இவை போன்ற பல துயரங்களைப் பொறுத்துக்கொண்டு காட்டியல் துறை அலுவலர் சமீப காலம் வரை (இப்போது எவ்வளவோ மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன; பெரும்பாலும் இவற்றை மனிதன் சமாளித்து வருகிறான்) பணியாற்றி வந்திருக்கின்றனர். அவர்களுக்கு அங்கே துணையாக இருப்பவர்கள் 'ஜெயின் குறும்பர்' என்னும் மலைச்சாதியார். இவர்களில் சிலர் காட்டியல் துறையில் சிறு அலுவலர்களாகவும் யானைப்பாகர்களாகவும் வேலை பார்த்து வருகின்றனர்.

# 4. ஆற்று வளம்

காவிரி, பவானி, நொய்யல், அமராவதி, சோலையா ஆளியாறு ஆகியவை இந்த மாவட்டத்தில் ஓடும் ஆ களுள் குறிப்பிடத்தக்கவை. இவற்றுள் காவிரியே பெ ஆறு; ஏனையவற்றுள் மூன்று அதன் துணையாறுகளே.

## காவிரி

மைசூர் இராச்சியத்துக் குடகுப் பகுதியில் தலை காவிரியில் தோன்றிச் சேலம் மாவட்டத்து ஒகனே அருகே தமிழ்நாட்டில் புகுந்து மேட்டூர் அணையை நிரப் பிறகு இது கோவைமாவட்டத்துக்கு வருகிறது. கோ மாவட்டத்தில் காவிரி 180 மைல் (290 கி. மீ) தொலை குச் செல்லுகிறது. இம்மாவட்டத்திற்குள் நுழையும் போது காவிரியின் அகலம் 1385 அடி (417 மீட்டர்). ஈரோடு நகரருகே அதன் அகலம் 1540 அடி (465 மீட்டர்). இவ்வாறு மேலும் அகன்று, திருச்சி மாவட்டத்திற்குச் சென்றதும் அகன்ற காவிரியாகிவிடுகிறது. சேலம், கோவை மாவட்டங்களின் எல்லையாகக் காவிரி அமைந் திருக்கிறது. பவானி, ஈரோடு என்னும் இரு வட்டங் களும் காவிரியால் வளமடைந்துள்ளன.

## பவானி

மேற்குத் தொடர்ச்சிமலையில் கேரளத்தில் தோன்றி நீலகிரி வழியாக, கோவை மாவட்டத்து அவினாசி வட்டத்தில் வந்து பவானி ஆறு காவிரியுடன் கலந்து விடுகிறது. இந்த ஆற்றின் ஓட்டத்தில் பெரும் பகுதி இந்த மாவட்டத்திலேயே ஆகும். தென்மேற்கு வட கிழக்கு என்னும் இரு பருவக்காற்றுக்களாலும் இதில் நீர் நிரம்புகிறது; எனவே இந்த ஆறு, ஆண்டு முழுவதும்

# கோயம்புத்தூர் மாவட்டம்

ஆறுகளும் நகரங்களும்

திம்பம்
பவானி ஆறு
பவானி
காவேரி ஆறு
பவானி சாகர்
ஈரோடு
மேட்டுப்பாளையம்
அவனுசி
திருப்பூர்
நொய்யல் ஆறு
பல்லடம்
கோயம்புத்தூர்
போத்தனூர் சந்திப்பு
பேரூர்
தாராபுரம்
பொள்ளாச்சி
உடுமலைப் பேட்டை
ஆனைமலை
அமராவதி ஆறு
வால்பாறை

வற்று ஓடும் இயல்பினது. அவினசி, கோபிச் செட்டி பாளையம், பவானி, ஈரோடு வட்டங்களில் 2376 சதுர மைல் (6083 சதுர கி. மீ.) பரப்புள்ள நிலத்தை இந்த ஆறு வளப்படுத்துகிறது.

இரு மலைகளுக்கிடையே பவானி ஓடும் இடத்தில், அணை கட்டப்பட்டிருக்கிறது. இதுவே, கீழ்பவானி அணை என்பது; மலைகளுக்கிடையேயுள்ள ஐந்தரை மைல் (8·8 கி. மீ.) தொலைவுதான் அணையின்நீளம். (விவரம் பிறிதொரு கட்டுரையில் 'பவானி சாகர் அணை' என்ற தலைப்பில் காண்க).

### நொய்யல்

கோயம்புத்தூர் நகருக்கு மேற்கேயுள்ள வெள்ளிங்கிரி மலையில் பேருருக்கு அருகே தோன்றி இந்த மாவட்டத்தின் நடுவே கோவை, பல்லடம், தாராபுரம் வட்டங்கள் வழியாக 173 கி. மீ. க்கு ஓடித் திருச்சி மாவட்டத்துக்குச் சென்று காவிரியுடன் கலந்து விடுகிறது.

### அமராவதி

மேற்குத் தொடர்ச்சிமலையில் கேரள இராச்சியத்திலுள்ள மூணாறு என்னும் இடத்திற்கு அருகே தோன்றி அடர்ந்த காடுகளுக்கிடையே பாய்ந்து ஆனைமலைவழியே உடுமலைப்பேட்டை வட்டத்தில் நுழைந்து தாராபுரம் வழியாகத் திருச்சிமாவட்டத்திற்குச் சென்று காவிரியுடன் இரண்டறக் கலக்கிறது. அமராவதியின் மீது உடுமலைப்பேட்டை வட்டத்தில் ஓர் அணை கட்டப்பட்டிருக்கிறது.

### பிற ஆறுகள்

இவைபற்றி, பரம்பிக்குளம் திட்டம் என்ற கட்டுரையில் விவரம் காண்க.

## 5. கனி வளம்

சேலம், திருச்சி மாவட்டங்களைப் போன்று கோவை மாவட்டத்தில் உலோகச் செல்வங்கள் மிகுதியாக இல்லை. எனினும், குறிப்பிடத்தக்க சில உலோகங்கள் இங்கே சிறு அளவில் உள்ளன. அவையாவன :—

**சுண்ணும்புக்கல் :**

கரடுமுரடான கிரிஸ்டலைன் சுண்ணும்புக்கல் கோவை நகரையடுத்த மதுக்கரையில் கிடைக்கிறது. "கால்சியம் கார்பைடு" என்னும் இரசாயனப் பொருள்களைச் செய்ய இது பயன்படுகிறது. இந்தச் சுண்ணும்புக்கல் கிடைக்கும் பகுதி அசோசியேட்டட் சிமெண்டுக் கம்பெனிக்கு உரிமையானது.

**ஜிப்சம் :**

இது, அனுப்பட்டியிலுள்ள பணிக்கம்பட்டிச் சுரங்கத்தில் கிடைக்கிறது. சிமெண்டு செய்ய இந்தக் கனிப் பொருள் உதவுகிறது.

**மைகா :**

மாதூரில் சிறிதளவு கிடைக்கிறது. கண்ணடிப் பொருள்கள், தொலைக்காட்சிக் கருவிகள், மோட்டார் காரின் சில உறுப்புக்கள் ஆகியவை செய்ய மைகா தேவைப்படுகிறது.

**ஆஸ்பெஸ்டாஸ் :**

காரமடை இரயில் நிலையத்திற்குத் தெற்கே முத்தம் பாளையத்தில் கிடைக்கிறது. தீப்பிடிக்காத தன்மை இருப்பதால், இப்பொருள் கட்டிடங்களில் பயன்படுத்தப்

படுகிறது. போதனூர் அருகே ஆஸ்பெஸ்டாஸ் தகடுகள் செய்யும் தொழிற்சாலை உள்ளது.

**வைரக்கற்கள் :**

தாராபுரம் வட்டத்துச் சுரங்கங்களில் காங்கேயத்தில் பச்சை, நீல, மஞ்சள் நிறங்களில் வைரக்கற்கள் கிடைக்கின்றன. இந்த வட்டத்திலுள்ள படியூர் (பட்டலை) அருகே பெரில், அகுவாமரைன் சுரங்கங்கள் உள்ளன. விலை உயர்ந்த இந்த நவமணிகளை 19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஜோசையா மார்ஷல் ஹீத் என்பவர் தோண்டினார். பல நூற்றாண்டுகளாக கொங்குநாட்டுக்குப் புகழ் தந்திருப்பவை இப்பகுதியில் கிடைக்கும் பெருமதிப்புள்ள கற்களே. இச்சுரங்கங்களுக்கு அருகே (ஈராயிரம் ஆண்டுக்கு முந்திய) உரோமாபுரிச் சக்ரவர்த்திகளுடைய நாணயங்கள் கண்டெடுக்கப் பட்டுள. இங்கிருந்து 'இந்திய பெரில்' (Indian Beryl) கிடைத்ததாக, பிளினி என்னும் மேனாட்டறிஞர் கூறியுள்ளார். இது மிக விலையுயர்ந்த கல்; அணு ஆற்றல் உற்பத்திக்கு உதவுவது; இதன் வழியே ஊடுருவிப் பார்க்கலாம்.

**பெக்மடைட்(Pegmatite):**

விலையுயர்ந்த கனிப்பொருள்கள் பலவற்றைக் கொண்ட.இவ்வகைப்பாறை காவிரி ஆற்றுப் படுகையில், ஈரோடு இரயில் நிலையத்துக்கு அருகே இருக்கிறது.

**மிக்மடைட் (Migmatite) :**

இது அணு ஆற்றலை உண்டாக்க உதவும் கனி வளப் பாறை. இம் மாவட்டத்தில் ஓரிரு இடங்களில் கிடைக்கிறது.

**குருந்தக்கல் (Corundum) :**

வைரத்திற்கு அடுத்தாற்போல், பொருள்களில் எல்லாம் மிக உறுதியான கனிப்பொருள் இது; அலுமினிய

ஆக்சைடால் ($Al_2O_3$) ஆனது. இதன் படிக வகைகள் செம்பு, பதுமராகம் போன்ற மணிகளாகின்றன. படிகம் கலப்பின்றித் தூயதாயின் நிறமற்றிருக்கும். சிறிய அளவிலுள்ள மாசுகளே இதற்கு நிறத்தைக் கொடுக்கின்றன. உறுதியான இயற்கைக் குருந்தம் கடிகாரங்களிலும் மின்சாரக் கருவிகளிலும் பயன்படுகிறது. இது மெருகேற்றும் பொருளாகவும் உதவுகிறது.

காங்கேயம், கோபிச்செட்டி பாளையம், கருத்தப் பாளையம் பகுதிகளில் குருந்தக்கல் தோண்டி எடுக்கப் படுகிறது.

**இரும்புத் தாது :**

தரத்தில் சிறந்த இரும்புத்தாது கோபிச்செட்டி பாளையம் பகுதியில் சிறு அளவு இருக்கிறது.

**செம்பு :**

மின்சாரக் கம்பிகள் செய்யவும், 'ரிவெட்டு' ஆணி செய்யவும் இந்த உலோகம் இன்றியமையாதது. செம்பு, துத்தநாகம், வெள்ளீயம் மூன்றையும் கலந்து வெண்கலம் செய்கின்றனர். செம்பு நிக்கல் துத்தநாதம் – இவற்றின் கலப்பு ஜெர்மன்சில்வராக ஆகிறது. வெள்ளீயமும் செம்பும் கலந்தது கன் மெட்டல்; இது பெரிய இயந்திரங்களின் பகுதிகளைச் செய்யத் தேவைப்படுகிறது.

தனித்த கனிவளமாகவும் கலப்புக் கனிவளமாகவும் இவ்வாறு பயன்படும் செம்பு, இந்த மாவட்டத்தில் சில இடங்களில் கிடைக்கிறது.

## 6. நாட்டு வளமும் விவசாயமும்

"தருவளரும் மருதமொடு தண்குறிஞ்சி முல்லை
தனிப்பருத்தி வேர்க்கடலை சாலிவளர் நிலமாம்
உருவளரும் பலதளிகள் உளமுப்பத் தாருய்
உட்சமயம் மலர்ந்துவர உளோம் கொங்குநாடே"

பஞ்சாலைத்தொழிலிலும் பொறியியல் தொழில்களி லும் பெருஞ்சிறப்பு அடைந்துள்ள கோவை மாவட்டம் விவசாயத்துறையிலும் உயர்நிலையில் உள்ளது. உழைத்து உழைத்துப் பெரும்பயன்பெறும் உடல்வலு வும் உள்ளத்திடமும் கொண்டவர் கொங்கு நாட்டு மக்கள் என்பது 200 அடி (60 மீட்டர்) ஆழத்திலிருந்தும் நீர் இறைப்பதாலும் அதற்கான பொறிகளும் குழாய் களும் கோவைநகரில் செய்யப்பட்டு விற்பனையாவதாலும் தெரிகிறது. 1959-60இல் தமிழ் நாடு முழுவதும் வசூ லான வேளாண்மை வருமான வரி (Agricultural Income-tax) 154 இலட்சம் ரூபாய் ஆகும். இதில் 46·47 இலட்சம் ரூபாய் கோவை மாவட்டத்தில் வசூலிக்கப் பெற்றது. தமிழ் நாட்டின் வேறு எந்த மாவட்டத்தையும்விட இங்கேதான் அரசாங்கத்துக்குக் கூடுதலான வருவாய் கிடைத்திருக்கிறது. புதிய நீர்ப்பாசனத் திட்டங்களால் இந்த மாவட்டத்தில் நெல் வேளாண்மை கூடுதலாக இருக்கிறது. விவசாய உற்பத்திக்கான மாவட்டப் பரிசு, தமிழ் நாட்டில் கோவை மாவட்டத்திற்கே வழங்கப் பெற்றிருக்கிறது.

பருத்தி, புகையிலை, கரும்பு ஆகியவையும் குறிப் பிடத்தக்க அளவு பயிராகின்றன. பொள்ளாச்சி, திருப்பூர், துடியலூர், அவிநாசி, புஞ்சைப்புளியம்பட்டி,

மேட்டுப்பாளையம் ஆகிய ஊர்களில் கூடும் சந்தைகளும் கொங்குநாட்டின் வேளாண்மைச் சிறப்புக்குச் சான்று பகர்கின்றன.

புகழ்பெற்ற காங்கேயம் மாடுகளும் இம்மாவட்டத்தைச் சேர்ந்தனவே. கானப்புல் பயிராவதும் மணமுள்ள (பசுவின்) நெய் தட்டின்றிக் கிடைப்பதும் இம்மாவட்டத்தின் இயல்புகளாகும்.

### தட்ப வெப்ப நிலை

இந்த மாவட்டத்தில் ஈரக்காற்று என்பது கிடையாது. தென் மேற்கு, வட கிழக்கு ஆகிய இரு பருவக் காற்றுக்களாலும் மழை பெய்துங் கூட இவையிரண்டும் சேர்ந்து மொத்தம் 25 அங்குலம் (640 மில்லி மீட்டர்) அளவுதான் மழை உண்டு.

பல்லடம், தாராபுரம், உடுமலைப்பேட்டை வட்டங்களில் 23 அங்குலம்தான் (585 மி. மீ.) மழை உண்டு. இவையே இந்த மாவட்டத்தின் பஞ்சப் பகுதிகள். கோயம்புத்தூர், கோபி வட்டங்களில் சராசரி மழை 30 அங்குலம் (760 மி. மீ.) ஆகும். பொள்ளாச்சியில் தென் மேற்குப் பருவக்காற்றால் நல்ல மழை பெய்கிறது. பிற வட்டங்களில் நீர்வளம் இல்லாத இடங்களில் சோளம் பயிரிடப்படுகிறது. என்ன தான் சோம்பேறியாக இருந்தாலும் சோளத்தையாவது வேளாண்மை செய்யக் கூடாதா என்று கொங்கு நாட்டில் சொல்லுவதுண்டு.

மலைப்பாங்கான பகுதிகளை, அதாவது கல் நிறைந்த நிலத்தை உழுவது கொங்கு நாட்டு வேளாளர் இயல்பு. "காடு அறியாதவன் கல்லாங்காட்டை உழவேண்டும்" என்பது இங்குள்ள ஒரு பழமொழி. வேளாண்மைக்கு ஏற்ற நிலம் கிடைக்காததால் காடுகளை உழுது பயிரிடும் வழக்கம். இங்குவாழும் விவசாயிகளிடையே தொன்று

தொட்டு உண்டு. 'அருகங்காட்டை விட்டவனும் கெட்டான்; ஆனமாட்டை விற்றவனும் கெட்டான்' என்பது கொங்கு நாட்டுப் பழமொழி.

பல தலைமுறைகளாகப் புஞ்சைத் தானியங்களையே பயிரிட்டு வந்த கோவை மாவட்டத்து உழவர்கள் 1947க்குப்பின் (புதிய பாசனத் திட்டங்கள் ஏற்பட்டிருப்பதால்) நெல்லையும் பயிரிட்டு வருகின்றனர். இம்மாவட்டத்தின் நெற் களஞ்சியமாக, கோபிச்செட்டிபாளையம் வட்டம் விளங்குகிறது. பரம்பிக்குளம் திட்டம் முற்றும் நிறைவேறிய பின்னர், நெல் வேளாண்மைத் துறையில் கோவை, தஞ்சையையும் விஞ்சினால் வியத்தற்கில்லை.

ஆலைத்தொழிலின் உயர்வுக்குக் கம்மா நாயுடு சமூகத்தினர் காரணமாக இருக்கின்றனர்; அதுபோல உழவுத் தொழிலின் உயர்வுக்கு உறுதுணையாக உள்ளவர்கள் கவுண்டர் சமூகத்தினராவர். இவர்களில் இரு பிரிவினர் உண்டு. கொங்கு வேளாளர், உக்கிலியக் கவுண்டர் என்று இவர்களுக்குப் பெயர்கள் உண்டு. ஒய்சாளர் ஆட்சியில் மேற்கு மலைத் தொடர்ச்சியருகே செம்மண் பகுதியில் குடியேறிய உக்கிலியக் கவுண்டர்கள் புஞ்சைத் தானியங்களை விளைவிப்பதில் ஒப்பாரும் மிக்காரும் இன்றிச் சிறந்துள்ளனர்.

இந்திய அரசாங்கத்து வேளாண்மைத் துறையின் தலை சிறந்த நிபுணராகிய, என் நண்பர் எம். எஸ். ராந்தாவா, ஐ. சி. எஸ். 1960-இல் எழுதிய ஒரு கட்டுரையில் பின்வருமாறு கூறியுள்ளார்:

"இந்தியாவிலேயே மிகவும் முற்போக்கான மாவட்டமென்று கோயம்புத்தூரைச் சொல்லலாம். விவசாயக் கல்லூரியின் பல்லாண்டு ஆராய்ச்சி இம்முன்னேற்றத்துக்கு ஓரளவு உதவியாக இருந்ததென்று சொல்

லலாம். என்றாலும் இம்முன்னேற்றத்துக்கு முக்கிய காரணகர்த்தர்கள் விவசாயிகள்தாம். நாயுடுகளும் கவுண்டர்களும் அபிவிருத்திக்கான சாதனங்களைக் கையாள ஒருபோதும் தயங்கியதில்லை.

"எதிர்மாறான இயற்கைச் சூழ்நிலையோடு மனிதன் போராடிப் பெற்ற வெற்றியென்றே இந்த மாவட்டத்தின் விவசாயத்தைச் சொல்ல வேண்டும். எனவே, அதன்புகழ் மேலும் உயர்வுடையதாகிறது. கடினமான பாறைகளைப்பிளந்தெடுத்துத்தடாகம் போன்ற கிணறுகளை வெட்டித் தங்கள் நிலங்களுக்கு நீர் பாய்ச்சி வருகிறார்கள். இந்தக் கிணறு ஒன்று வெட்ட நாற்பதினாயிரம் ஐம்பதினாயிரம் ரூபாய் செலவழித்திருக்கிறார்கள். உயரமான தண்ணீர்த் தொட்டிகளைக் கட்டியும், நிலத்துக்குள் சிமெண்டுக் குழாய்களைப் பதித்தும் பள்ளமான எல்லா நிலங்களுக்கும் ஒரே காலத்தில் ஒன்று போல் நீர் பாய ஏற்பாடு செய்துள்ளார்கள். கோயம்புத்தூரிலுள்ள வேடபட்டிப் பண்ணைகளில் ஓரிடத்தில் பதினைந்து நீர்த் தொட்டிகள் அமைத்தும் இணைத்தும் விவசாயம் செய்து வருகிறார்கள்.

"விதைகளையும் நாற்றுக்களையும் வரிசை வரிசையாக நடுவது, பசுந்தாள் உரமிடுவது, குளத்து மண்ணும் பிற உரங்களும் இடுவது ஆகிய முறைகள் இங்கு மிகச் சாதாரணமாகும்.

"தரிசாகக் கிடக்கும் நிலத்தை ஒரு நாயுடுவிடம் கொடுத்துப் பாருங்கள். அவர் கவனத்தோடும் அக்கறையோடும் பாடுபட்டு அதனை அழகிய தோட்டமாக மாற்றிவிடுவார்.

"பெரிய விவசாயிகளில் பலர் சிறு சிறு தொழிலதிபர்களாகவும் இருக்கின்றனர். தொழிலில் வரும் ஆதா

*யத்தை அவர்கள் விவசாய அபிவிருத்தியில் பயன் படுத்துவதோடு, தொழில் நுணுக்கங்களையும் விவசாயத்தில் புகுத்தி வருகின்றனர். சிறிய விவசாயிகளும் வாழை, கரும்பு, பருத்தி, நெல் போன்ற பலதரப் பட்ட மகசூல்களைச் செய்கின்றனர்.''*

*தமிழ் நாட்டிலுள்ள அரசாங்க விதைப் பண்ணைகளுள் மிகப் பெரிய பண்ணை இந்த மாவட்டத்தில் பவானியில் இருக்கிறது. இதன் பரப்பு 108 ஏக்கர். இங்கே பாசன வசதி இருப்பதால் 110 நாளில் விளையக் கூடிய நெல் வகைகள் தயாராகின்றன. பல இடங்களில் விதைப்பண்ணைகள் செம்மையாக நடைபெருது மூடப் பட்டு வரும் நிலையில் இப்பண்ணை நன்ருகவும் திறமையாகவும் நடத்தப்பட்டு வருவது குறிப்பிடத் தக்கது.*

## பிற பயிர்கள்

### பருத்தி

*இந்த மாவட்டம் கரிசல் மண் பூமியாக இருக்கிறது. சிறிதளவே மழை பெய்தாலும், இங்குள்ள நிலங்கள் ஈரத்தைத் தாங்கும் ஆற்றல் பெற்றுள்ளன. இதனல் பெரிய அளவில் பருத்தி பயிரிடப்படுகிறது.*

*இம்மாவட்டத்தில் பருத்தி சாகுபடியாகும் பரப்பின் அளவு 4 லட்சம் ஏக்கர். சாதாரணமாக ஒன்றரை லட்சம் பேல் பஞ்சு (ஒரு பேலுக்கு 392 பவுண்டு அல்லது 178 கிலோ) விளைகிறது.*

*இங்கே பயிராகும் பருத்தி வகைகளாவன: தண்ணீர் பாய்ந்த கம்போடியா, தண்ணீர் பாயாத கம்போடியா, உகண்டா, தண்ணீர் பாய்ந்த கருங்கண்ணி, தண்ணீர் பாயாத கருங்கண்ணி, உப்பம். நூல் ஆலைகள் இந்த மாவட்டத்தில் மிகுதியாக இருப்பதால், பருத்திப் பஞ்சின் தேவை கூடுதலாக இருக்கிறது.*

இங்கே சாகுபடியாவது போக, வெளிமாவட்டங்கள் வெளி மாநிலங்கள், வெளி நாடுகள் ஆகியவற்றிலிருந்து ஏறத்தாழ இரண்டரை லட்சம் பேல் பஞ்சு ஆண்டு தோறும் இம்மாவட்டத்துக்கு வருகிறது.

இம்மாவட்டத்துப் பருத்தியில், கோபிச் செட்டி பாளையத்தில் பல வண்ணங்களில் பருத்தி பயிரிடப் படும் முறை அமெரிக்க விவசாய மாணவரும் வந்து ஊன்றிப்பார்த்து அறியும் அருமையுடையது. பிற பருத்தி களில் புகழ் பெற்றவை அவிஞசிப் பருத்தியும் அதற் கடுத்தபடியாகக் கோபிப் பருத்தியும் ஆகும். பருத்தி பயிரிடும் தொழில் இருபதாம் நூற்றுண்டில் இம் மாவட்டத்தில் பல மடங்கு பெருகியிருக்கிறது.

**நிலக்கடலை**

இம்மாவட்டத்து விளைபொருள்களுள் நிலக்கடலை யும் முக்கியமானது. வட ஆர்க்காடு தென் ஆர்க்காடு மாவட்டங்களில் நிலக்கடலை ஏராளமாகக் கிடைத்து அவை "மல்லாக்கொட்டை நாடு" என்று பெயர் பெற்றி ருந்தாலும், பொள்ளாச்சிப் பகுதியில் விளையும் நிலக் கடலை அவற்றிலுஞ் சிறந்தது என்று கொங்கு நாட்டார் கூறுவர். தென்மேற்குப் பருவக்காற்று முன்னதாகவே தொடங்கிவிடுவதால், ஏனைய மாவட்டங்களுக்கு ஓரிரு மாதங்கள் முன்னரே இங்கு நிலக்கடலை விளைந்து விடு கிறது. பொள்ளாச்சிக்கும் பாலக்காட்டுக்கும் இடையே யுள்ள 43 கி. மீ. வெளியில், 10 நாளைக்கு ஒரு தடவை யாக ஒரே அளவாகப் பெருமழை பெய்வதால் இங்கு நிலக்கடலை மகசூல் நன்ருக இருக்கிறது.

இம்மாவட்டத்தில் ஏறத்தாழ மூன்று லட்சம் ஏக்கர் பரப்பில் நிலக்கடலை சாகுபடி ஆகிறது. ஒன்றரை லட்சம் டன் நிலக்கடலை உற்பத்தியாகிறது. பொள்ளாச்சியில்

நிலக்கடலை ஆராய்ச்சிக்கூடம் இருக்கிறது. கடலை எண்ணெய் ஆலைகளுக்கும் மரச் செக்குகளில் ஆட்டுவதற்கும் விதைக்காகவும் உணவுப் பொருளாகவும் செலவானது போக எஞ்சியது 25,000 டன் வெளி மாவட்டங்களுக்கு ஏற்றுமதியாகிறது.

பூ விடும் காலம் முதல் அறுவடை வரையிலும் மழை இல்லாததால் சில இடங்களில் வேளாண்மை மிகவும் பாதிக்கப்படுகிறது. பொள்ளாச்சிப் பகுதியில் கோடைப் பயிராகவும் பிற பகுதிகளில் மழைக்காலப் பயிராகவும் நிலக்கடலை சாகுபடி செய்யப்படுகிறது. சில சமயம் பேன், கம்பளிப் பூச்சி ஆகியவற்றின் தாக்குதல்களாலும் வேறு சில சமயம் அளவுகடந்த மழையாலும் நிலக்கடலை வேளாண்மை மிகவும் பாதிக்கப்படுகிறது.

## புகையிலை

இம்மாவட்டத்தில் 30,000 ஏக்கர்ப் பரப்பில் புகையிலை சாகுபடியாகிறது. இங்கு விளையும் புகையிலை சுருட்டுப் புகையிலை, வாய்ப்புகையிலை என இருவகைப் படும். வாய்ப்புகையிலையில் மூன்று வகைகள் உள்ளன. அவற்றுள் முக்கியமானது மீனம்பாளையம் புகையிலை. இது மிகவும் உயர்ந்த தரமானது; அண்ணூருக்கும் மேட்டுப்பாளையத்துக்கும் இடையேயுள்ள பகுதியில் விளைகிறது. மிகவும் புகழ்பெற்ற இப்புகையிலையை யாழ்ப்பாணத்து முறையில் பண்படுத்த இந்த மாவட்டத்திலிருந்து விவசாய அலுவலர் ஒருவர் அங்கேபோய்ப் பயிற்சி பெற்று, அதன்படி ஒரு திட்டம் உருவாக்கப்பட்டிருக்கிறது.

வெய்யிலில் பதம் செய்யப்பட்ட புகையிலை, குழியில் பதனிடப்பட்ட புகையிலை என்ற வகைகளும் உண்டு. பொதுவாக இந்த மாவட்டத்தின் வாய்ப்

புகையிலே மலேயாளத்து மக்களால்தான் பெரிதும் உபயோகிக்கப்படுகிறது. புகையிலே வரி விதிப்புக் கொள்கையால் கோயம்புத்தூர் மாவட்டத்தில் புகையிலே பயிரிடுவோர் அதன் சாகுபடியில் உரிய அளவு உற்சாகம் காட்டுவதில்லே.

கோபிச்செட்டிபாளேயம், பல்லடம், தாராபுரம், ஆகிய இடங்களில் பயிராகும் புகையிலே பாலக்காட்டுக்கு ஏற்றுமதியாகி, அங்கிருந்து பாலக்காட்டு வாசனேப் புகையிலே என்ற பெயரில் எங்கும் விற்பனே ஆகிறது.

### பாக்கு

இந்தியாவில் பாக்கு உற்பத்தி கேரளம், மைசூர், ஒரிசா, அ்சாம், மேற்கு வங்கம் ஆகிய மாநிலங்களில் மிகுதியாக உண்டு. தமிழ்நாட்டில் பாக்கு விளேயும் மாவட்டங்களில் குறிப்பிடத்தக்கது கோவை மாவட்டம் ஆகும்.

ஓர் ஏக்கர் பரப்புள்ள பாக்குத் தோப்பிலிருந்து ஆண்டு தோறும் 5000 ரூபாய் வருமானம் கிடைக்கிறது, என்பது நம்பமுடியாத செய்தியாக இருக்கலாம். ஆனல் அது உண்மை.

மேட்டுப் பாளேயத்தில் கமுகு (ஒரு வகைப் பாக்கு) மரங்கள் தென்னேபோல் வளர்ந்துள்ளன. கமுகுத் தோப்பில் தொழிலாளர் மரத்துக்கு மரம் தாவி பாக்கு எடுக்கும் காட்சி காணத் தக்கது. கமுகுக் குலேயிலிருந்து பச்சைப் பாக்குக் கிடைப்பதைத் தொண்டாமுத்தூர், சுண்டப்பாளேயம் பகுதிகளில் காணலாம். பச்சைப் பாக்கு எடுத்து களிப்பாக்குச் செய்கின்றனர்.

### மஞ்சள்

ஈரோடு, கோபிச்செட்டிபாளேயம் பகுதிகளில் மஞ்சள், ஒரு முக்கிய விளேபொருளாக இருக்கிறது.

ஈரோட்டு மஞ்சள் இந்திய நாடெங்கும் பெரும்புகழ் பெற்றிருக்கிறது. ஒரிசாவில் உதயகிரி என்னுமிடத்தில் இந்திய விவசாய ஆராய்ச்சிக்குழுவினர் நடத்திவரும் மஞ்சள் ஆராய்ச்சி நிலையத்தின் கிளை ஈரோடு நகரில் அமையவேண்டுமென இவ்வூரினர் விரும்புகின்றனர்.

## மலைநாட்டு விளைபொருள்கள்

தேயிலை, காப்பி, சின்கோனு, ஏலக்காய் போன்ற பல பொருள்கள் கோவை மாவட்டத்தில் விளைகின்றன.

### தேயிலை

தமிழ்நாட்டில் தேயிலை உற்பத்தியின் அளவு ஓராண்டுக்கு 6 கோடி 80 லட்சம் பவுண்டு. இதில் சரிபாதி, அதாவது 3 கோடி 40 லட்சம் பவுண்டு (இரண்டு கோடி கிலோ) கோவைமாவட்டத்து ஆனைமலைப் பகுதியில் விளைகிறது.

ஆனைமலையிலுள்ள வால்பாறை அருகே, தென்னிந்தியாவுக்கென தேயிலை ஆராய்ச்சி நிலையம் அமைக்க, 150 ஏக்கர் பரப்புள்ள இடத்தில் ஆராய்ச்சி நிலையத்துக்கான கட்டிட வேலை 1960 இறுதியில் தொடங்கப்பெற்றது. இந்திய அரசாங்கமும் மத்திய தேயிலைக்குழுவும் இதற்காக 15 லட்சம் ரூபாய்வரை செலவிடுகின்றனர். அசாம் மாநிலத்து டோக்ளெய் என்னும் இடத்திலுள்ள தேயிலை ஆராய்ச்சி நிலையத்தைப்போன்று இந்த நிலையம் அமையும். தேயிலைச் செடிவகைகள் இங்கே சேகரித்து வைக்கப்படும். ஆனைமலையின் தட்ப வெப்ப நீர்நிலைகளுக்கேற்பத் தேயிலை பயிரிடுவது பற்றியும் தேயிலையை உற்பத்தி செய்வது பற்றியும் இங்கே ஆராய்ச்சிகள் நடைபெறும்.

### காப்பி

கோவை மாவட்டத்தில் காப்பி மிகச்சிறு அளவில் பயிராகிறது. நீலகிரி மாவட்டத்திலிருந்து வரும் காப்பி

யைத் தக்கவாறு அடைத்து வெளியூர்களுக்கு விற்பனை செய்யும் வேலை கோயம்புத்தூர் நகரில் நடைபெறுகிறது.

### சின்கோனு

ஒருசில சின்கோனுத் தோட்டங்கள் ஆனைமலைப் பகுதியில் உள்ளன.

### ஏலக்காய்

வால்பாறையில் ஏலக்காய்த் தோட்டங்கள் இருந்து வருகின்றன. இப்பகுதியிலுள்ள அரசாங்கக் காடுகளிலும் ஏலக்காய் பயிரிடும் வேலை மேற்கொள்ளப்பட்டிருக்கிறது.

### மருத்துவ எண்ணெய் ஆராய்ச்சி

ஆனைமலைப் பகுதியில் கிடைக்கும் சில தாவரங்களிலிருந்து எடுக்கப்படும் மூலிகைச் சாறுகளும் எண்ணெய்களும் சோடா, ரொட்டி, மிட்டாய், மருந்துகள் ஆகியவற்றில் சேர்க்கப்படுகின்றன. அவைபற்றி ஆராய்ச்சி செய்ய ஓர் ஆராய்ச்சி நிவறுனம் அரசாங்கத்தாரால் 1960-இல் அமைக்கப்பட்டிருக்கிறது.

### பாலும் நெய்யும்

பல இடங்களிலிருந்து பாலை வாங்கி அதைக்குளுமையாக்கி அவற்றில் சத்துள்ள பொருள்களைச் சேர்த்து நாள்தோறும் 14,000 கிலோ பால் வழங்குவதற்கேற்ற ஓர் இயந்திரம் (Milk Pasteurisation Plant) எட்டு லட்சம் ரூபாய் செலவில் கோயம்புத்தூர் கூட்டுறவு பால்வழங்கு நிறுவனத்தால் அமைக்கப்பட்டு வருகிறது.

சென்னை நகருக்கு நாள்தோறும் பால் அனுப்புவதற்காக ஈரோடு நகரின் சுற்றுப்புறப் பகுதிகளில் பால்

சேமிக்கப்படுகிறது. இந்தப் பால் சென்னைக்கு வரும் வரை கெட்டுவிடாதபடி இதைப் பக்குவப்படுத்தும் இயந்திரங்கள் ஈரோடு நகரில் பொருத்தப்பட்டுள்ளன.

வெண்ணெய், நெய் ஆகியவற்றைச் சோதித்துப் பார்த்து அவற்றிற்கு "அக்மார்க்" என்னும் அடையாளம் போடுவதற்காக, நெய் பரிசோதனைக் கூடங்கள் இம் மாவட்டத்தில் மூன்று உள்ளன. ஊத்துக்குழி என்னும் ஊரில் நல்ல மோர் கிடைக்கிறது. ஈரோட்டுப் பகுதியி லிருந்து நல்லெண்ணெய்யும் தேங்காய் எண்ணெய்யும் பொள்ளாச்சிப் பகுதியிலிருந்து கடலை எண்ணெய்யும் ஏற்றுமதியாகின்றன.

## கல்லாறு பழ ஆராய்ச்சி நிலையம்

இது உதகமண்டலத்திற்குச் செல்லும் சாலையில் மேட்டுப்பாளையத்திலிருந்து 10 கிலோமீட்டர் தொலைவில் வரிக்கழுதையை நினைவூட்டுவதுபோன்ற வடிவத்தில் அமைந்த பல கற்கள் நிறைந்த இடத்தருகே அமைந்தது.

வெள்ளைக்காரர்கள் தங்களுக்கு வேண்டிய பழவகை களையும், சாதிக்காய் கிராம்பு இலவங்கைப்பட்டை முதலியவற்றையும் உண்டாக்க 1900-இல் இத்தோட் டத்தை ஏற்படுத்தினர். 1947-இல் இந்தியா சுதந்தரம் அடைந்தபிறகு இது பழ ஆராய்ச்சி நிலையமாகவும் அமைந்திருக்கிறது.

இந்த இடம் 22 ஏக்கர் பரப்புடையது. ஆண்டு தோறும் 45 அங். (1125 மி. மீ.) மழை பெய்கிறது. மிகு தியான வெப்பம் 35 C. பகாசுர மலைக்கும் அடர்த்தியான காடுகளுக்கும் அருகே அமைந்திருப்பதால் இங்கே ஆண்டுமுழுவதும் தட்டின்றித் தண்ணீர் கிடைக்கிறது. சுவைநிறைந்த தண்ணீர் சிறு வாய்க்கால்களில் குதித் தோடி வரும் காட்சி கண்டோர் மனத்தைவிட்டகலாது.

புளிக்குப் பதிலாகப் பயன்படுத்தப்படும் ஐவிரலி என்ற ஐந்துவிரல்களையுடைய இனிப்பான பழம், மங்குஸ் தான், பறவைகள் விரும்பும் லிச்சி என்ற பழம், பெரிய சப்போட்டா மரம், ரப்பர் மரம், அரை நெல்லிக்காய், சிங்கப்பூர் பலாப்பழம், கேசரி பவுடர் செய்ய உதவும் சாயவிதை, கொடி எலுமிச்சை, விதையில்லாத எலு மிச்சை ஆகியவை இங்கே காணத்தக்கன. கல்லின் கண்ணே ஆற்றோட்டம் அமைந்திருப்பதால் 'கல்லாறு' ஆகிய இவ்வூரை 'கல்லார்'(படியாதவர்என்ற பொருளில்) எனத் தவருகப் பலர் எழுதி வருவது வியப்பூட்டு கிறது.

விவசாயத்துறையில் உயர்கல்வி படிப்பவர்களும் பழ ஆராய்ச்சியில் ஈடுபாடுள்ளவர்களும் இங்கே வருகிருர் கள். பொழுதுபோக்கவரும் பெருமக்கள், சைக்கிளில் வரும் இளைஞர் ஆகியோர் தொகையும் பெருகி வருகிறது

## விவசாயக் கல்லூரியின் பழ ஆராய்ச்சிப் பகுதி

"அனுய் சி சாஹி" என்ற ஐதராபாதுத் திராட்சை பயிரிடுவதில் நான்கு அல்லது ஐந்து கணுக்கள்விட்டு கொம்புகளை வெட்டும் முறை அவற்றின் மகசூலை மிகுதி யாக்கும் என்று இந்த ஆராய்ச்சி நிலையத்தார் கண்டு பிடித்துள்ளனர். அனுய் சி சாஹி என்ற திராட்சை, பச்சைத் திராட்சையைவிடத் தரத்திலும் குணத்திலும் சிறந்தது. இதன் குலைகள் அடர்த்தியாகவும் பெரியதாக வும் இருக்கும். கனிகளின் உருவமும் பெரிது. கெட்டி யான தோலும் உள்சதையும் உடைய இவை பல நாளானலும் கெடா. மதுரை மாவட்டத்துப் பட்டிவீரன் பட்டியில் இவ்வகைத் திராட்சை பயிராகிறது.

கோவை மாவட்டத்திலுள்ள ஊத்துக்குழியில் நல்ல மாதுளைப் பழம் கிடைக்கிறது.

## கரும்பு ஆராய்ச்சி நிலையம்

கோயம்புத்தூரில் விவசாயக்கல்லூரிக்கு அருகே இந் நிலையம் இருக்கிறது.

இது 1912-இல் நிறுவப்பட்டது. இந்தியாவில் நிகழும் கரும்பு ஆராய்ச்சி அனைத்துக்கும் தலைமை நிலையம் இதுதான். வெப்பமான நாடுகளுக்கேற்ற புதுவகைக் கரும்புகளைப் பயிரிடுவது, பூச்சிநோய்களைத் தடுப்பது, இவைபற்றி ஆராய்ந்து மாநில அரசாங்கங்களின் விவசாயத்துறையினர்க்கு ஆண்டுதோறும் புதுப்புதுக் கரும்புவகைகளை அனுப்புவது ஆகிய வேலைகளை இங்கே செய்கிறார்கள்.

கரும்பின் தாவர சாத்திரம், உடற்கூறு, பயிராகும் இயல்பு இவற்றை இங்கு ஆராய்கிறார்கள். உலகின் சிறந்த கரும்புவகைகள் யாவும் ஆராய்ச்சிச் சோதனைக்காக இங்கு வரவழைக்கப்படுகின்றன. குளிர்மிகுந்த பஞ்சாபில் கரும்பு பயிரிடுவதன் விளைவுகளைத் தெரிந்து கொள்ள கர்னால் என்னுமிடத்திலும், மழை மிகுந்த மலையாள நாட்டில் கரும்பு பயிரிடுவதன் விளைவுகளை ஆராய தல்லிபரம்பாவிலும் இந்த ஆராய்ச்சி நிலையம் கிளைகளை நிறுவியிருக்கிறது.

இந்த நிலையத்தார் பரப்பிவரும் கரும்புவகையைக் "காலேஜ் கரும்பு" என்று கொங்குநாட்டு விவசாயிகள் குறிப்பிட்டு வருகின்றனர். ஆராய்ச்சி முறையால் கரும்பு வகைகள் அமைந்த வரலாறு வருமாறு :

நாணல் கரும்புடன் மற்ற கரும்புவகைகளைக் கலந்து புதுவகைக் கரும்பு உண்டாக்கும் முயற்சியில் சர் டி.எஸ். வேங்கடராமன் என்ற பேரறிஞர் 1916-இல் கோயம் புத்தூர் ஆராய்ச்சி நிலையத்தில் வெற்றிகண்டார். இங்கே கண்டுபிடித்த கரும்புகள் எகிப்து, நேட்டால், பிரிட்டிஷ்

கயானு, சீனு, ஆஸ்திரேலியா, தென் அமெரிக்க நாடுகள் ஐக்கிய அமெரிக்காவின் இராச்சியங்கள் ஆகியவற்றி லெல்லாம் பயிரிடப்பட்டுச் செழித்து வளர்ந்து வருகின்றன. உலகிலுள்ள எந்த நாட்டுக்கும் எத்தகைய தட்பவெப்ப நிலைக்கும் ஏற்றதான 600 வகைக் கரும்புகள் இங்கே கண்டுபிடிக்கப் பட்டிருக்கின்றன. கரும்பு, மூங்கில், புல்ஆகிய மூன்றையும் கலந்து புது வகைக் கரும்பு உண்டாக்க இயலுமென்பதையும் சர் டி. எஸ். வேங்கடராமன் கண்டுபிடித்திருக்கிறார்.

சி. ஓ. 419 என்ற கரும்புவகை, ஏக்கருக்கு 152 டன் விளைவிக்கக்கூடியதாக இருக்கிறது. இதுபோன்ற பல வகைக் கரும்புகளை இந்த ஆராய்ச்சி நிலையத்தார் கண்டு பிடித்ததன் விளைவாகத்தான் இன்று நாடெங்கும் சர்க் கரை ஆலைகள் பெருகியுள்ளன. 1950-க்கு முன் இந்தியா வில் சர்க்கரை ஆலைகள் உத்தரப்பிரதேசத்திலும் பீகாரி லுந்தான் இருந்தன. அந்த நிலைமாறி இப்போது தமிழ் நாடு உட்படத் தென்னிந்திய மாநிலங்களிலும் பல புதிய ஆலைகள் தோன்றியுள்ளன.

இந்த நிலையத்தைக்காணச் செல்பவர்கள் இங்கே வைக்கப்பட்டிருக்கிற 40,000 வகைக் கரும்பு விதைகளை யும் உலகெங்குமிருந்து வரவழைக்கப்பட்டிருக்கிற 2,200 வகைக் கரும்புகளையும் காணலாம்.

இந்நிலையத்தின் ஆராய்ச்சிமுறைகளைப் பயன்படுத்து வதாலும் கோவை மாவட்டத்தின் இயற்கை அமைப்பு களும் உற்பத்திக்கு உகந்ததாக இருப்பதாலும் இம் மாவட்டத்தில் பல இடங்களில் உழவர்கள் ஓர் ஏக்க ருக்கு 120 டன் வரை கூடக் கரும்பு மகசூல் செய்திருக் கின்றனர். கோவை, தாராபுரம், பொள்ளாச்சி, கோபி வட்டங்களில் பயிராகும் கரும்பைப் பயன்படுத்தப் புதிய

சர்க்கரை ஆலைகள் தேவைப்படுகின்றன. உடுமலைப் பேட்டை வட்டத்தில் விளையும் கரும்பில் ஒரு பகுதி மட்டுமே அமராவதி ஆலையில் அறைக்கப்படுகிறது.

## உரத் தொழிற்சாலை

விவசாயவளர்ச்சிக்கு இன்றியமையாத உரத்தை உற்பத்தி செய்யும் தொழிற்சாலை ஒன்று இம்மாவட்டத்தில் உருவாகிவருகிறது. நாள்தோறும் ஓராயிரம் டன் சல்பூரிக் ஆசிட்டும் சூப்பர் பாஸ்பேட்டும் உற்பத்திசெய்யும் ஓர் உரத்தொழிற்சாலை 1962-க்குள் பி. எஸ். ஜி. குடும்பத்தினரால் பெரிய நாயக்கன் பாளையத்துக்கும் காரமடைக்கும் இடையே தொடங்கப்படும். இதன் விளைவாகக் கோவை மாவட்டத்தின் விளைவு பெருக வாய்ப்பு ஏற்படும்.

## கால்நடைச் செல்வம்

பிற மாவட்டங்களில் அரசாங்கப் பண்ணைகள் இருக்க, இம்மாவட்டத்தில் மட்டும் அரசாங்கத்தார் கால்நடைப்பண்ணைகள் தொடங்கவில்லை. அதற்குக் காரணம் தனிப்பட்டவர்களால் சிறந்த முறையில் கால்நடைப் பண்ணை நடத்தப்பட்டு வருவதேயாகும். காங்கேயம் மாடுகள் பற்றியும் கால்நடைப்பண்ணை பற்றியும் இந்நூலின் பிறிதொரு பகுதியில் விவரமாகக் குறிப்பிட்டுள்ளோம்.

நிலத்தின் ஒரு பகுதியை மேய்ச்சலுக்கென்று ஒதுக்கும் ஆந்திர நாட்டு வழக்கம் தமிழ்நாட்டில் கோவை மாவட்டத்தில் நிலவுகிறது.

## கிணறு

கோவை மாவட்டத்து விவசாயத்திற்கு, கிணறு மிக முக்கியமாக இருக்கிறது. மலைப்பகுதியாக இருப்பதால்,

கல்லைக்குடைந்து கிணறு உண்டாக்கி நீர் எடுக்கிறார்கள் என்று சொல்லுவது பொருந்தும். இதனால் மிக ஆழமாக வெட்ட வேண்டியதிருக்கிறது. பல ஆயிரம் ரூபாய் செலவு செய்யவும் நேரிடுகிறது. ஆகையால், மூன்று அல்லது நான்கு பேர் சேர்ந்து தங்களுக்குப் பொதுவாக ஒரு கிணறு வெட்டுவர். கிணறு வெட்டப்படும் இடத்திற்கும் கிணறு வெட்டுவதற்கும் ஏற்படும் செலவுக்கும் ஆகும் தொகையைத் தங்கள் தேவைக்கேற்பப் பகிர்ந்து கொள்வர். அதற்குச் சமமாக, ஒவ்வொருவரும் இன்ன இன்ன கிழமைகளில் கிணற்றைப் பயன்படுத்திக் கொள்ளுவது என்று தங்களுக்குள் பத்திரம் எழுதிக் கொள்கின்றனர்.

## 7. வரலாறு

இன்றைய தஞ்சை—திருச்சி மாவட்டங்களைச் சோழ நாடு என்றும், மதுரை—இராமநாதபுரம்—திருநெல்வேலி மாவட்டங்களைப் பாண்டி நாடு என்றும், சென்னை செங்கற்பட்டு—வடஆர்க்காடு மாவட்டங்களின் பெரும் பகுதியைத் தொண்டை மண்டலம் என்றும் பொதுவாகச் சொல்லலாம். இவ்வாறே கொங்குநாடு என்பது இக்காலத்திலுள்ள கோயம்புத்தூர்—சேலம் மாவட்டப் பகுதிகள் எனலாம். திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்த கரூர், குளித்தலை வட்டங்கள் மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த பழநி வட்டம் இவற்றின் சில பகுதிகளும் கொங்கு நாட்டில் இருந்தன.

### எல்லை

மதிற்கரை கீட்டிசை தெற்குப்பழநி மதிகுடக்குக்
கதித்துள் வெள்ளை மலைபெரும் பாலை கவின் வடக்கு
விதித்துள நான்கெல்லை சூழ வளமுற்று மேவிண்ணோர்
மதித்திட வாழ்வு தழைத்திடு நீள்கொங்கு மண்டலமே

என்பது கொங்கு மண்டல சதகப் பாடல். கொங்கு நாட்டின் கிழக்கெல்லை (மதுக்கரை என இப்போது வழங்கும்) மதிற்கரை, தென் எல்லை பழநி, மேற்கு எல்லை நீலகிரி மலை, வட எல்லை சேலம் மாவட்டத்துத் தொப்பூர் மலை அருகேயுள்ள பெரும்பாலை என்னும் ஊர் என்பது இதிலிருந்து தெரிகிறது.

மதுக்கரையிலுள்ள செல்லாண்டியம்மன் கோவில் சேர, சோழ, பாண்டியரின் எல்லையாக இருந்தது என்றும் கூறுவர்.

வடக்குத் தலைமலையாம் வைகாவூர் தெற்கு
குடக்குவெள்ளிப்பொருப்புக் குன்று—கிழக்கு
கழித்தண்டலைசூழும் காவிநன் ஞடா
குழித்தண்டலையளவும் கொங்கு.

என்பது மற்ருெரு பாடல்.

## வாணிபப் பண்ணை

கொங்கு நாடு குறிஞ்சி நிலம் நிறைந்தது.* இங்குள்ள மலைகள் எண்ணிறந்தன. இந்நாட்டைச் சுற்றிலும் மலைகள் உள்ளன. இக்காரணத்தால் கொங்கு, ஏனைய தமிழகத்துடன் தொடர்பின்றித் தனிநாடாகவே இருந்து வந்திருக்கிறது. இராட்டிரகூடர், கங்கர், பல்லவர், சேர சோழ பாண்டியர், விசயநகர மன்னர், ஐதர், திப்புசுல்தான் இவர்கள் ஒவ்வொருவரும் கொங்கு நாட்டை ஆண்டனர். இந்த நாட்டின் பொருள்வளம் இவர்களிடையே மண்ணைசையை வளர்த்தது. புதை பொருள் ஆராய்ச்சியாளர் இந்தியாவெங்கும் தோண்டியெடுத்த ரோமாபுரி (கி. பி. முதல் நூற்ருண்டில் வெளியிடப் பெற்ற) நாணயங்களில் மிகுதியானவை கோயம்புத்தூர் மாவட்டத்திலேயே கிடைத்துள்ளன. நவரத்தினங்கள் நிறைந்த கோவை ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் இன்றைய இத்தாலி, கிரீஸ், எகிப்து நாடுகளின் வாணிபப் பண்ணையாக இருந்தது தெளிவு.

## பெயர்க்காரணம்

மலைவளம் மிகுந்த நாட்டில் தேன்வளமும் மல்கியிருத்தல் இயல்பு. கொங்கு என்னும் தேன் மிகுந்த

*'இவளோ, கொங்கச் செல்வி குடகுமலை யாட்டி
தென்தமிழ்ப் பாவை செய்த தவக் கொழுந்து'
—சிலம்பு 1796-1797.

நாடு என்பதே கொங்கு நாடு என்ற சொற்றொடரின் பொருள். கங்கு என்பதன் மரூஉ தான் கொங்கு என்று சொல்லுபவர்களும் உள்ளனர். விளிம்பு, ஓரம் என்ற பொருள்களில் கங்கு என்ற சொல் ஆளப்படுகிறது. கங்கு கரையில்லை என்பது பேச்சு வழக்கு. இந்நாடு சேர, சோழ, பாண்டிய, தொண்டை, மைசூர் நாடுகளின் கங்கில் இருந்ததால் கங்குநாடு என்று பெயர் பெற்று, பிறகு கொங்கு நாடு எனத் திரிந்ததாம்.

### மாலவர்

ஒரு காலத்தில் குறும்பர், எயினர், வேடர் ஆகியோர் இங்கு இருந்தனர் என்பர் வரலாற்று நூலோர். சங்க காலத்தில் மாலவர், கோசர், கொங்கர் என்போர் இப்பகுதிகளில் ஆட்சி செலுத்தினர்.

சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்படும் **மாலவ வேந்தர்** என்னும் குறுநில மன்னர் காவிரி, பவானி ஆற்றோரங்களில் வாழ்ந்தனர். காவிரியின் வட கரையில் வாழ்ந்தமையால் இவர்கள் வடகரையர் எனப்பட்டனர். இன்றும் கோபிச்செட்டிபாளையப் பகுதியில் இவர்கள் வழி வந்தவர் வாழ்கின்றனர். மாலவர் குதிரை, யானை, தேர்ப்படைகளுடன் சிறந்து விளங்கினர். தகடூர் அதிகமானும் ஓரியும் மாலவரே.

### கோசர்

கோசர் என்ற மக்கள் இன்றும் இம்மாவட்டத்தில் ஏறமலைக்கு அருகேயுள்ள பட்டாலி என்னும் இடத்தில் வாழ்கின்றனர். அவர்களுக்குக் 'காலியுரிமை' உண்டு. கொங்கு நாட்டை ஒரு தனிநாடாக ஆண்ட முதற் குடி கோசர். கல்வெட்டுக்களில் கோவன்புத்தூர் என்று குறிப்பிடப்பட்ட போதிலும், கோசர் ஆண்ட நாடாக இருந்ததால் கோசன்புத்தூர் என்று பெயர் ஏற்பட்டிருத்

தல் வேண்டும் என்ற கருத்து இப்போது நிலவி வருகிறது.

கொங்கு நாட்டுக் கோசர் கற்புக்கரசி கண்ணகிக்கு விழா எடுத்தனர்; இதனுல் வளம் பெருகியதைச் சிலப்பதிகாரம் உரைபெறு கட்டுரை :

> 'அது கேட்டுக் கொங்கிளங் கோசர் தங்கள் நாட்டகத்து நங்கைக்கு விழாவொடு சாந்தி செய்ய, மழை தொழில் என்றும் மாருதாயிற்று'

என்று கூறும்.

### கொங்கர், கங்கர்

கொங்கர் எனப்படுவோர் குடகு நாட்டிலிருந்து வந்து சேலம்-கோவை மாவட்டங்களை ஆட்சிபுரிந்தவர். சேர மன்னர் 'கொங்கர்கோ' என்று இலக்கியங்களில் சிறப்பிக்கப்பெறுவதால், கொங்கர் சேரரின் உறவினர் என்பர்.

கங்கா என்ற வம்சத்தார் கொங்கு நாட்டை ஆண்டனர் என்று இந்நாளில் ஆராய்ச்சியாளர் உறுதியாகக் கூறுகின்றனர். 5-ஆம் நூற்ருண்டில் பல்லவர் ஆதரவுடனும் பிறகு கடம்பர் ஆதரவுடனும் பின்னர், கி. பி. 725 வரை மேலைச் சாளுக்கியர் உதவியாலும் கங்கர்கள் கொங்குநாட்டை ஆட்சி புரிந்திருக்கின்றனர்.

"காங்கேயம்" என்ற பெயரே கங்கர்களைப்பற்றி வந்தது. "கவுண்டன்" என்ற கொங்கு நாட்டுப் பெயரும் இவர்கள் வழியாகவே தமிழ் நாட்டுக்கு வந்தது. இராட்டிரக்கூடர், கங்கர் என்ற மன்னர்கள் தமிழ் நாட்டில் ஆண்டபொழுது சமண சமயம் புதுவலிமை பெற்றது. கோயம்புத்தூர் மாவட்டத்திலுள்ள பேரூர், விசயமங்கலம் என்ற ஊர்களில் சமண ஆலயங்கள் ஏற்பட்டன. சமண சமயம் பெரிதும் பரவியிருந்தது.

கங்கர்களைப் பகைத்துக் கொண்ட பல அரசர்கள் இவர்களது காலடியில் வீழ்ந்ததாகக் 'கொங்கு தேச ராஜாக்கள்' என்ற நூலிலிருந்து தெரிகிறது. இவர்களுடைய ஆட்சியில் இருந்த பகுதி பரந்து விரிந்தமையால் மூன்றும் கொங்கனிவர்மன் காலத்தில் அது சிறு பகுதிகளாகப் பிரிந்து, அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களிடம் ஒப்புவிக்கப்பட்டது; இவ்வாறு தகடூர் அதிகமான் ஆட்சியிலும் ஒரு பகுதி இருந்தது. அதே நேரத்தில் பல்லவர், சோழர், பாண்டியர் ஆகியோர் வலுப்பெற்றனர். கொங்கு நாட்டின் ஒரு பகுதியில் பாண்டியர் படையெடுத்தனர். பிறிதொரு பகுதியில் பல்லவர், நேரடியாகப் படையெடுக்காவிட்டாலும், தம் செல்வாக்கை உறுதிப்படுத்தி வந்தனர்; சிறுசிறு தொல்லைகள் கொடுத்துக் குழப்பமான இந்த நிலையை அவர்கள் பயன்படுத்திக் கொண்டனர்.

### சோழர்

சோழர்க்குக் கொங்கு நாட்டுத் தொடர்பு மிகுதி. முதலாம் கரிகாலச் சோழன் ஓடி மறைந்து வாழ்ந்தது கொங்கு நாட்டிலேயேயாகும். அவனை அரியாசனத்தில் மீண்டும் அமர்த்திய வீரத் தலைவர் இருப்பிடத்தலை பெரியான் என்ற பெருங்குடிவேளிர். இவருடைய வழித்தோன்றலே இன்றும் செல்வாக்குப் பெற்று விளங்கும் சங்கராண்டம் பாளையம் பட்டக்காரர் ஆவார்.

முதலாம் பராந்தகச் சோழன் காலத்தில் காவிரிக் கரைக்கு அருகில் (கொங்கு நாட்டில்) கோயில்கள் கட்டப்பெற்றன. சோழ நாட்டிலிருந்து கொங்கு நாட்டுக்குப் போய் வரப் பெரு வழிகள் அமைக்கப்பெற்றன. கொங்கு நாட்டில் தங்கம் மிகுதியாகக் கிடைத்தது என்றும் அதைக் கொண்டுதான் பராந்தகச் சோழன் தில்லைக் கோயிலுக்குத் தங்கச் சிற்றம்பலமுகடு (கனக

சபை) போட்டான் என்றும் கூறுவர். கொங்கு நாட்டை ஆளத் தொடங்கிய பின்னரே சோழர்கள் பொன் நாணயம் வெளியிட்டனர் என்பதும் வரலாற்று அறிஞர் சிலர் கருத்து.

பராந்தகன் தன் ஆட்சியின் கடைசிப் பகுதியுல் பல சிற்றரசர்களுடன் போரிட்டுத் துன்பப்பட்டான். இராட்டிரகூடரும் கொங்கரும் சேர்ந்து இவனுக்கு இன்னல் விளைவித்த வண்ணமாக இருந்தனர்.

இவனுக்குப்பின் வந்த முதல் இராஜராஜன் பத்தாம் நூற்றூண்டின் இறுதியில் குடகு, மைசூர், நீலகிரி ஆகிய பகுதிகளையும் தலக்காட்டுப் போர் வாயிலாகத் தன்வயப்படுத்தினன். கி. பி. 1004-இல் அவன் கொங்கு நாட்டில் தனக்குட்பட்ட சிற்றரசர்களான கொங்குச் சோழரிடம் கொங்கு நாட்டின் ஆட்சியை ஒப்புவித்தான். இச்சிற்றரசர்கள் ஒய்சாளரோடும் பிறருடனும் ஓயாது போரிட்டுக் கொண்டிருந்தமையால் கொங்கு நாட்டின் ஆட்சி சீர்குலைந்தது. கி. பி. 1014வரை சோழர் ஆட்சி கொங்கு நாட்டில் செம்மையாக நடைபெற்றது. அதற்குப் பிறகு மூன்று நூற்றூண்டுகள் கொங்கு நாடெங்கும் குழப்பம் நிலவிற்று.

ஆட்சி செய்வதற்கு வசதியாகச் சோழர் கொங்கு மண்டலத்தை (கொங்குநாடு இவ்வாறுதான் அப்போது பெயர் பெற்றிருந்தது) 24 நாடுகளாகப் பிரித்திருந்தனர்.*

---

*அரைநாடு, ஒடுவங்க நாடு, வரகநாடு, காங்கேய நாடு, பேரூர் நாடு, தென்கரை நாடு, வையாபுரி நாடு முதலியன.

ஒவ்வொரு நாட்டிலும் கூற்றம், கோட்டம் என்ற உட்பிரிவுகள் இருந்தன. அரசனின் ஆணைகள் திருவாய்க் கேள்வி எனப்பட்டு, எழுத்து வடிவம் பெற்றுத் திருமந்திர ஓலை என்று வழங்கின. இவற்றை நிறை வேற்றவும், வரி வசூலிக்கவும் பல அதிகாரிகள் இருந் தனர். குடி வரி, திருமண வரி, உள்ளூர்க் கோயில் வரி என்பன வசூலிக்கப் பெற்றன.

கொங்குச் சோழரின் ஆட்சி பற்றிய செய்திகள் 300 கல்வெட்டுக்கள் மூலம் தெரிகின்றன. பொன், காசு, வராகன், அச்சு, கழஞ்சு என்ற நாணயங்கள் கொங்குச் சோழரால் வெளியிடப் பெற்றன. கைக்கோளர் (என்ற உடல் வலிமை பெற்ற) படையினர் நாட்டைக் காக்கவும் பிறர்மீது போரிடவும் பயன்பட்டனர். வேளாளர், செட்டி, பறையர், வாணிகர், நாவிதர் என்ற ஐந்து சாதியார் கொங்கு நாட்டில் இருந்தனர். ஒவ் வொரு சாதியும் பெயருக்குமுன் 'கொங்கு' என்பதைச் சேர்த்துக் கொண்டனர் (தொண்டை மண்டலம் துளுவ வேளாளர் என்பது போல) கொங்கு வேளாளரே இன்றைய கவுண்டர் ஆவர்.

வெளிநாடுகளுடன் கொங்கு நாட்டுக்குப் பல தொடர்புகள் இருந்தன. மலைநாட்டில் போக்குவரத்துக் குக் குதிரை தேவை; அராபியர் இங்கே குதிரைகள் விற்ற னர். இன்றும் தென் இந்தியாவில் சிறந்த நாட்டுக்குதிரை கள்பொள்ளாச்சியில்தான் கிடைக்கின்றன. இப்பகுதி யில் கிடைத்த சூடம். சந்தனம், மூங்கில், தந்தம், நவரத்தி னங்கள் நறுமணப் பொருள்கள் (மலைவளம்) சீனவுக்கு ஐநூற்றுவர் என்னும் வணிகப் பெருங்குடியினரால் விற்பனை செய்யப்பெற்றன. இவர்கள் கொடும்பாளூர் மணிக்கிராமத்தில் சில தருமங்கள் செய்ததாகச் சேலம் பகுதிக் கல்வெட்டு ஒன்று கூறுகிறது. வைசிய வாணிய

நகரத்தார் கோயில்களுக்கு (தாங்கள் விற்கும்) சில பொருள்களைத் தொடர்ந்து அன்பளித்ததாக தன நாயகன் கோட்டைக் கல்வெட்டுத் தெரிவிக்கின்றது. இதிலிருந்து இப்பாது கோவை மாவட்டத்தில் வாழும் ஐநூற்றுன் செட்டியார்கள் சோழர் காலத்தில் பெரு வாணிபம் செய்தது தெரிகிறது.

**சோழருக்குப்பின்**

சிறிது காலம், பாண்டியர் செல்வாக்கு கொங்கு நாட்டில் இருந்து வந்தது. ஆனல் கி. பி. 1190-இல் கொங்கு நாட்டை மூன்றும் குலோத்துங்கன் வென்று விஜய முடியும் வீரமுடியும் அணிந்து கருரில் விஜயாபி ஷேகமும் செய்து கொண்டான். தகடூர் அதிகமானும் அவன் வழியினரும் சோழருக்குக் கொங்கு நாட்டில் வலக்கரமாக விளங்கினர். 13-ஆம் நூற்றுண்டின் இறுதி யில் மாதந்தனநாபக என்ற ஒய்சாளப் படைவீரன் பாண்டியரைப் போரில் முறியடித்தான். புகழ்பெற்ற தன நாயகன் கோட்டையை அமைத்தவன் இவனே.

**விசயநகர ஆட்சி**

16-ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் கொங்குநாடு விசயநகர ஆட்சிக்கு உள்ளாயிற்று. விசயநகர ஆட்யிசின் போது தெலுங்கர் கோவை மாவட்டத்தில் வந்து குடி யேறினர். அவர்களின் வழித்தோன்றல்களே இப்போது இங்குள்ள தெலுங்கு பேசும் தமிழர்கள் ஆவர். விசயநகர மன்னர்களின் பிரதிநிதியாகத் தெற்கே மதுரையை ஆண்ட விசுவநாத நாயக்கர் ஆட்சி நடத்தினர். 1530 முதல் 1682 வரை கொங்கு நாட்டில் நாயக்கர் ஆட்சி உறுதியாகவும் செம்மையாகவும் நடந்தது. இவர்கள் (நாயக்கர்கள்) தங்களைப் பாண்டியர் வழியினர் என எண்ணித் தாங்களும் நாணயங்களிலும் கோயில்களிலும் மீன் உருவம் பொறித்தனர். ஆண்டுதோறும் 40 லட்சம்

ரூபாய் வரை விசயநகரப் பேரரசுக்கு மதுரை நாயக்கர்கள் கப்பம் கட்டினர். இதற்காக நாயக்கர்கள் ஆங்காங்கே வரி வசூலைச் செம்மையாகச் செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டது. கொங்கு நாட்டில் 72 பாளையக்காரர் நியமன மாயினர். பாளையக்காரர் தம் வருவாயில் மூன்றில் ஒரு பகுதியும் தேவைப்படும்போது போர்ப்படைக்கு ஆட்களும் நாயக்கர்களுக்குத் தரவேண்டுமென்பது நாயக்க மன்னர்களின் ஏற்பாடு.

## மைசூர் ஆட்சி

இக்காலத்தில் மைசூர் மன்னர்கள் தென்னிந்தியா முழுவதும் செல்வாக்கும் வெற்றியும் பெற்றனர். திருமலை நாயக்கர்க்கும் இராமநாதபுரம் சேதுபதிக்கும் போர் நடைபெற்றுக் கொண்டிருந்தபோது (இன்றைய சேலம் மாவட்டத்தின் வடபகுதி) கொங்குநாடு சிறிதளவு மைசூர் நாட்டின் உடையார் மன்னர் ஆளுகைக்கு உட்பட்டது. மதுரை திருமலைநாயக்கர்க்கும் மைசூர் மன்னர்க்கும் 1655-இல் போர் முற்றி. மதுரையை அவர்கள் படையெடுத்தனர் ; அவர்கள் வயப்பட்டவர்களின் மூக்கு யாவும் அறுத்து மைசூருக்குக் கொண்டுபோய் மன்னரிடம் காட்டப்பெற்றது என்றும் கல்வெட்டுச் செய்தி உண்டு.

1670-இல் ஈரோடு போர்க்களமாயிற்று. மதுரை நாயக்கரும் மைசூர் மன்னருமே எதிரிகள். அக்காலத்தில் மதுரை மன்னர்கள் இராமநாதபுரத்து மறவர்களைக் காவல் படையாக, கோவை மாவட்டத்தின் பல பகுதிகளுக்கு அனுப்பினர். மறவ வீரர்கள் தங்கியிருந்த பகுதிகள் 'இராமநாதபுரம்' என்று குறிப்பிடப்பட்டன. கோவை நகரிலும் மாவட்டத்தின் பிற இடங்களிலும் பல இராமநாதபுரங்கள் இருப்பதற்குக் காரணம் இதுவே.

மைசூர் உடையார் அரசர்களின் ஆட்சியில் கன்னடம் பேசும் மக்கள் கொங்கு நாட்டில் குடியேறினர். கன்னடப் பிராமணர்க்கு, அரசர்கள் காவிரிக் கரையில் நிலம் அன்பளித்தனர். கன்னட நாட்டில் லிங்காயத் என்று குறிப்பிடப்படும் மலைவேளாளர் கோபிச் செட்டி பாளையத்துக்கு வடக்கேயுள்ள பகுதிக்குப் பெருந் தொகுதியாக வந்து இன்றளவும் வாழ்ந்து வருகின்றனர்.

## ஆங்கிலேயர் வருகை

திருமலை நாயக்கர் காலத்தில் கிறித்தவ மதத்தைப் பரப்ப மதுரையில் தங்கிய பாதிரிமார்கள் அவருடைய ஆதரவால் கோவை மாவட்டத்துக்கும் சென்றனர். நீலகிரி மலைக்குச் செல்லும் வழியாக இருந்ததால், கோவை மாவட்டம் வெள்ளைக்காரர்களின் கவனத்தை ஈர்த்தது.

18-ஆம் நூற்றாண்டில் ஹைதர் அலியும் திப்பு சுல்தானும் போர் வீரராக விளங்கினர். கோயம்புத்தூர் சத்தியமங்கலம், காவேரிபுரம், ஈரோடு ஆகிய இடங்களில் தந்தையும் தனயனும் தளராது அமைத்த கோட்டைகள் யாவும் வெள்ளைக்காரர்களுடன் போரிடப் பயன்பட்டன. 18-ஆம் நூற்றாண்டின் இறுதியில் வெள்ளையர் ஆட்சி வலிமை பெற்று நிலைத்தது.

## அயலவர் ஆட்சி

வெள்ளையர் ஆட்சியில் கோவை நகரம் முக்கியத்துவம் பெற்றது; பருத்தி பயிரிடப் பெற்றது; பஞ்சாலைகள் பல்கிப் பெருகின; பைக்காராவிலிருந்து மின்சாரம் வழங்கப் பெற்றது; தொழிற்சாலைகளிலும் வீடுகளிலும் மின்சாரத்தைப் பயன்படுத்த முன் வந்தவர்களுக்கு அரசாங்கம் பல சலுகைகளைக் கொடுத்தது.

ஆனைமலைப் பகுதியில் காப்பி, தேயிலை, ஏலத் தோட்டங்கள் ஏற்பட்டு வால்பாறை ஊராட்சி மன்றம் இந்தியாவிலேயே செல்வம் மிகுந்த ஊராட்சி மன்றம் என்ற பெயரைப் பெற்றிருக்கிறது. இரயில், விமானப் போக்கு வரத்துக்கள் அமைந்தன; கொச்சித் துறை முகத்துக்கு நீலகிரி மாவட்டத்து விளை பொருள்களை அனுப்பக் கோயம்புத்தூரிலிருந்து கொச்சிக்குப் போக்கு வரத்து வசதிகள் பரவின. இம்மாவட்டம் புத்துயிரும் புது வாழ்வும் பெற்றது. வெளிநாடுகளிலிருந்து துணி வாங்கிய பொதுமக்களுக்கும், இந்தியப் படை வீரர்களுக் கும் துணியை விற்று, இரண்டாம் உலகப் போரால் கோவை செல்வம் கொழிக்கும் மாவட்டமாக ஆயிற்று.

### உரிமைக்குப்பின்

1947–இல் இந்தியா உரிமை பெற்ற பிறகு, இம் மாவட்டத்தில் தொழில் வளர்ச்சி விரைவாக நடைபெற்று வருகிறது. இரண்டாவது, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் விவசாய உற்பத்தியிலும் கோவை மாவட்டம் ஒப்பற்ற உயர்வை அடைந்திருக்கிறது. சென்னை நகருக்கு அடுத்தபடி தமிழ் நாட்டில் இந்த மாவட்டத்தில்தான் இந்திய அரசாங்கத்துக்கும் மாநில அரசாங்கத்துக்கும் கூடுதலான வருவாய் கிடைக்கிறது. அரசாங்க அலுவல கங்களின் எண்ணிக்கையும் மிகவும் பெருகியிருக்கிறது. கல்வி மருத்துவத் துறைகளிலும் கோவை மாவட்டம் நிகரற்ற நிலையை எய்தியிருக்கிறது. பல ஆராய்ச்சி நிலையங்கள் நிறுவப் பெற்றுள்ளன. உரிமைபெற்ற பின் நம் நாட்டிலும் நம் மாநிலத்திலும் ஏற்பட்ட முதல் அமைச்சரவையில் கோவை மாவட்டத்தினர் இடம் பெற்றனர். எல்லாத் துறைகளிலும் இம்மாவட்டம் நாளும் வளர்ந்து நலம்பெற்று வருகிறது.

## 8. வாழும் மக்கள்

வரலாறு தொடங்கிய காலந் தொட்டு வழி வழியாக வாழ்ந்து வரும் மக்கள் இனங்கள் பல்வகையினர் கொங்கு நாட்டில் உள்ளனர். அவர்களில் இப்பகுதிக்கே சிறப்பாக உரிய சமூகங்களும் உண்டு. அவர்களைப்பற்றி இக்கட்டுரையில் குறிப்பிடுவோம். எல்லாச் சமூகத்தினரையும் பற்றிக் குறிப்பிட இடம் போதியதாகாது; எனவே, ஒரு சில சமூகங்களைப்பற்றி மட்டும் கூறியுள்ளோம்.

### கம்மவார் நாயுடுக்கள்

கோவை மாவட்டத்தில் சிறப்புடன் வாழ்ந்து, தமிழ் நாட்டின் பொருளாதாரத்தையே சில துறைகளில் ஆக்கவும் அழிக்கவும் ஆற்றல் படைத்தவராக விளங்குபவர்கள் கம்மவார் நாயுடுக்கள். ஆலை அரசர்களாக இருந்து நாளும் செல்வம் பெருக்கி வரும் இச்சமூகத்தார் அண்மைக் காலத்தில் பொது அறங்கள் பலவற்றையும் செய்து வருகின்றனர். வீட்டில் தெலுங்கு மொழி பேசினாலும், தமிழுக்குப் பணியாற்றவும் இவர்களில் பலர் முன் வந்திருக்கின்றனர்.

இவர்கள் பேசும் தெலுங்கு ஆந்திர மாநிலத்தில் வழங்கும் சுந்தரத் தெலுங்கிலிருந்து பல தலைமுறைகளாக மருவியும் மாறியும் சிதைந்தும் சீர்குலைந்தும் விட்டமைக்கு ஒரு நிகழ்ச்சியைக் குறிப்பிடலாம். ஆந்திரமும் தமிழ் நாடும் பிற பகுதிகளும் சேர்ந்த சென்னை இராசதானியின் கவர்னராக 1936–இல் சர் கூர்மா வேங்கட ரெட்டி நாயுடுகாரு நியமனம் செய்யப் பெற்றார். அவர் கோவை நகருக்கு வருகை புரிந்தபோது, கம்மவார்

நாயுடுக்கள் அவருக்குப் பாராட்டு விருந்து நல்கி, "அவர் நம் இனத்தவர், மொழியினர்" என்று ஆங்கிலத்தில் கூறினர். கவர்னர்காரு இன உணர்ச்சியும் மொழிப் பற்றும் தூண்டப் பெற்றவராய், ஆர்வத்தோடு தெலுங்கு மொழியிலேயே நன்றி கூறினர். தெலுங்கையே தாய் மொழியாகக் கொண்டு அதையே நாளும் பேசி வரும் கோவை வாழ் நாயுடுக்கள், "அவர் என்ன மொழியில் பேசுகிறார்?" என்று ஒருவரையொருவர் கேட்டுக்கொண்டனர். அவர் பேசியதும் இவர்களுக்குப் புரியாததுமாகிய தெலுங்கு மொழி இருவர்க்கும் தாய்மொழியாக அமைந்தது ஒரு வேடிக்கையே!

## தேவாங்கர்

கோவை மாவட்டத்திற்கே சிறப்பாக உரிய சமூகங்களுள் தேவாங்கர் குறிப்பிடத் தக்கவர்கள். இவர்களில் தெலுங்கு, கன்னடம், மராத்தி மொழிகளைப் பேசுபவர்கள் இருக்கின்றனர். இவ்வாறு மூன்று மொழிகளைப் பேசியபோதிலும் பழக்க வழக்கங்கள், கடவுள் வழிபாடு தொழில் முறை ஆகியவற்றில் இவர்களுக்குள் ஒற்றுமை உண்டு.

திருமணம் முதலிய சடங்குகளை ஒவ்வோர் ஊரிலும் தங்கள் குலத்தைச் சேர்ந்த சமயப் பெரியோர்கள் வாயிலாக நடத்துகின்றனர். சாவு ஏற்பட்டால் சவத்தை நீராட்டி, வழிபட்டு, பாடையில் எடுத்துச் சென்று இடுகாட்டில் குழி தோண்டி, உட்காரும் நிலையில் புதைப்பர். திருநீறு மிகுதியாகக் குவிப்பது உண்டு. கல் சமாதி; கல் சாசனம் ஆகியவற்றைப் போடுவதும் வழக்கம்.

இவர்களுடைய குலதெய்வம் சௌடாம்பிகை அம்மன். இந்த அம்மனுக்குக் கோவையிலும் தமிழ் நாட்டில் தேவாங்கர் குடியிருக்கும் நகரங்கள் சிற்றூர்கள்

அனைத்திலும் கோயில்கள் உள்ளன. ஆந்திரம், கேரளம், கருநாடகம், மகாராட்டிரம், கலிங்கம், வங்கம், சௌராஷ்டிரம் ஆகிய பகுதிகளிலும் சௌடாம்பிகை அம்மன் கோயில்கள் இருக்கின்றன.

இவர்கள் நெசவு நெய்தலையே தம் தொழிலாகக் கொண்டவர்கள். நெசவு மட்டும் தங்களுக்குப் போதிய வேலைகளைக் கொடுக்காததால் இவர்கள் இப்போது இயந்திர விசைத்தறிகளைப் பயன்படுத்தல், உழவுத் தொழில் செய்தல், அரசியல் அலுவல்கள் பார்த்தல் ஆகியவற்றிலும் ஈடுபட்டுப் பிற சமூகத்தினரைப் போலவே பொருளாதார மேம்பாடு அடைய முயன்று வருகின்றனர்.

கோவை நகரிலுள்ள வணிகரில் இவர்கள் தொகை கணிசமானது. முப்பது அல்லது நாற்பது ஆண்டுகளுக்கொருமுறை, இவர்கள் சௌடாம்பிகை அம்மன் பண்டிகை நடத்துவர்; இவ்விழா கடைசியாக 1958–இல் நடைபெற்றது.

### ஒக்கிலியர்

கோவை மாவட்டத்தில் இவர்கள் ஒரு முக்கியமான சமூகமாக இருந்து வருகின்றனர். இது ஒரு கன்னடச் சொல். இச்சொல்லுக்கு, "குடியேறியவர்" என்று பொருள். கால்பிடிக்கக் கால் நூறு கன்னிப் பெண்கள், தோள் பிடிக்கத்தொன்னூறு தோகையர், மகிழ்ந்து பேச மங்கையர் கூட்டம் ஆகியோருக்கு நடுவே திப்புசுல்தான் மைசூரை ஆண்டுவந்த காலத்தில் அவனுடைய அலுவலர்களின் இன்னல்களினின்றும் விடுதலைபெற மைசூர் நாட்டை விட்டுக் குடியேறியவர்களே இவர்கள்.

கொள்ளேகாலம் வட்டம் மைசூரில் சேர்க்கப்பட்ட பிறகு, கோவை மாவட்டத்தில் இவர்கள் தொகை அதன் காரணமாகக் குறைந்துவிட்டது. பிற வட்டங்களில் இருப்பவர்களும் இன்னும் மைசூர்த்தொடர்பு மிகுதியாக வைத்துக்கொண்டிருக்கின்றனர். வேளாண்மையே இவர்களுடைய சிறப்பான தொழில். மைசூர்க்காரர்கள் போல இவர்கள் பெயரும் அப்பா, ஐயா என்ற ஈற்று சொற்களுடன் கூடியதாக இருக்கிறது. 'குரும்பக்கவுடர்' என்றும் இவர்கள் அழைக்கப்படுவதுண்டு. இவர் தம் தாய்மொழி கன்னடம.

## கொங்கு வேளாளர்

கோவை மாவட்டத்தில் மற்றொரு முக்கியமான சமூகம் கொங்கு வேளாளர்கள். இவர்கள் வேளாண்மைத் தொழிலில் சிறந்து விளங்குகிறார்கள்.

இவர்களுடைய திருமணங்கள் ஒரே நாளில் நிகழ்வன. "வேளாளன் கல்யாணம் விடிந்தால் தீர்ந்தது" என்பது ஒரு பழமொழி. திருமணங்களை அருமைக்காரன் என்ற பெரிய குடித்தனக்காரன் முன்னின்று நடத்துவான். திருமணச் சடங்குகளைப்பற்றிக் குறிப்பிடப் பெற்ற ஓர் அகவற்பாவால், புலவன் மணமக்களை வாழ்த்துவது வழக்கம். "மாமுது பார்ப்பான் மறைவழி காட்ட" என்று சிலப்பதிகாரம் கூறுவது கொங்கு வேளாளரின் திருமணச் சடங்கு முறையையே என்று புலவர் சிலர் விளக்கம் கூறுகின்றனர்.

அருமைக்காரனுக்குப் பதிலாக, புரோகிதரை வைத்துத் திருமணம் நடத்தும் 'நாகரிகம்' செல்வர் சிலரால் அண்மையில் பரவி வருகிறது.

கொங்கு வேளாளர், கவுண்டர் என்றும் குறிப்பிடப் படுவர். கொங்கு நாட்டின் 24 உள்நாடுகளுக்கும் 24 பட்டக்காரர்கள் இருப்பது இச்சமூகத்தின் தொன்மையை வலியுறுத்துகிறது. பட்டக்காரர்கள் சமூகத் தலைவர்கள். பரம்பரைச் செல்வாக்கு உள்ளவர்கள். இப்பட்டக்காரர்களுள் பழையகோட்டை, சங்கராண்டம்பாளையம், புதூர், காடையூர் ஆகிய நான்கு பட்டக் காரர்கள் மிக முக்கியமானவர்கள்.

பழையகோட்டைப் பட்டக்காரர்கள் கரியான் சர்க்கரை என்னும் படைத்தலைவனின் வழியினர். எனவே இன்றும் இவர்கள் 'சர்க்கரை' என்னும் தங்கள் குல முதல்வன் பெயரையும், 'உத்தமிக் காண்டன்' என்னும் பட்டப் பெயரையும் 'மன்ருடியார்' என்னும் தலைமைப் பெயரையும் வைத்துக்கொண்டு வருகின்றனர். ஏனைய பட்டக்காரர்களுக்கும் இவ்வாறே தொன்மைப் புகழும் சிறப்புப் பெயர்களும் உள்ளன.

கொங்கு வேளாளரின் செம்மையான அறமுறையை உணர்த்தும் ஒரு நிகழ்ச்சியை இங்கே தெரிவிக்கலாம். ஊத்துக்குழி நிலக்கிழார் குடும்பத்தார் 400 ஆண்டு களுக்கு முன் பவானியிலிருந்து கொடுமுடிவரை காளிங்க ராயன் வாய்க்கால் வெட்டினர். தர்மம் செய்த பிறகு அந்த வாய்க்கால் நீரைத் தாம் குடிப்பதால், செய்த அறத்தின் புனிதத் தன்மை குறைந்துவிடலாகாதென்று, தாம் வேறு இடத்தில் போய்க் குடியேறினராம். இன்றைய நாள் வாழ்நரின் மனநிலைக்கும் இதற்கும் என்னே வேற்றுமை!

கொங்கு வேளாளர்கள தங்கள் குடும்பங்களில் நொண்டி அல்லது முடமாகப் பிறக்கும் குழந்தைகளை வளர்க்க நொண்டிகள் விடுதி ஒன்றை இலங்கர்காறு

என்ற பெயரில் பல ஆண்டுகளுக்கு முன் கோவை நகரில் நிறுவினர். அதன் செலவுகளுக்காக அக்காலத்து அரசர்கள் ஒரு சிற்றூரையே இலங்கர்காறுவுக்கு மானியமாக வழங்கினர். வெள்ளைக்காரர் ஆட்சியில் இந்நிலையம் சீர்கேடடைந்தது. இப்போது இது ஏழைகள் விடுதியாகக் கோயம்புத்தூர் நகராண்மைக் கழகத்தாரால் நடத்தப்பட்டு வருகிறது.

வேளாளரைப்பற்றிய ஒரு தனிப்பாடல் "மேழி பிடிக்குங்கை மேதினியை ஆளுங்கை" என்று அவர்களுடைய தொழிலைச் சிறப்பிக்கிறது. அந்த இலக்கணத்திற்கு இலக்கியமாகக் கொங்கு வேளாளர் விளங்குகின்றனர்.

## பழங்குடி மக்கள்

கோவை மாவட்டத்தில் பழங்குடி மக்களும் வாழ்கின்றனர். இவர்களில் குறிப்பிடத் தக்கவர்கள் காடர், மலாசர், முதுகர், புலையர் ஆகியோர். இவர்கள் வாழுமிடம் ஆனைமலைப்பகுதியாகும்.

### காடர்

இவர்கள் பழங்குடியிலும் பழங்குடியினர். இவர்களின் எண்ணிக்கை 600 இருக்கலாம். குட்டையான உருவம், அகன்ற மூக்கு, துருத்திக்கொண்டிருக்கும் உதடு ஆகியவற்றாலும் இவர்கள் பேசும் ஒரு வகையான கொச்சைத் தமிழாலும் இவர்களை அடையாளம் கண்டு கொள்ளலாம்.

தோற்றத்தில் பல வகைகளில் இவர்கள் ஆப்பிரிக்கரைப் போன்றே இருக்கின்றனர். கொடிய உயிரினங்களிடமிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்ளுவதற்காக இவர்கள் சில வகையான நாய்களை வளர்க்கிறார்கள். இவர்களுடைய பெண்கள் சிலர் ஐரோப்பியப் பெண்

களைப்போன்று தலைமயிரை வளர்த்துக்கொள்ளுகின்றனர். சில செடி கொடிகளையும் சில உயிரினங்களையும் உண்டு இவர்கள் வாழ்கின்றனர். இவர்கள் வாழும் இடம் "பட்டி" எனப்படும். தண்ணீர் வசதி மிகுந்த எந்த இடத்திலும் இவர்கள் மூங்கிலால் வீடு கட்டிக்கொண்டு குடியிருப்பர். வீட்டுக்குள்ளேயே உயரமான ஓரிடத்தில் கோரைப்பாயில் படுத்து உறங்குவர். குடிசையின் ஒரு மூலையில் எப்போதும் நெருப்பு எரிந்துகொண்டிருக்கும்.

காதல் திருமண முறை காடர்களிடையே காணப்படுகிறது. கருவுற்ற பெண் இன்ன உடை உடுத்திக் கொள்ள வேண்டும் என்ற பழக்கம் உண்டு. உட்கார்ந்திருந்த நிலையிலேயே பிள்ளை பெறுவது இவர்களுடைய வழக்கம். ஆடவரும் சரி, பெண்டிரும் சரி, தங்கள் மாமியாரைக் காண்பதோ அவருடன் பேசுவதோ கிடையாது. இவர்கள் வழிபடும் கடவுளர் காளியும் ஐயப்பனும். ஒவ்வொருவருடைய பெயருடனும் "ஆளி" என்ற சொல்லைச் சேர்த்துக்கொள்ளுவர். கத்தியாளி, முடியாளி, பூவாளி என்ற பெயர்கள் இவர்களுக்கு உண்டு. ஒவ்வொருவருக்கும் ஒரு பட்டப்பெயரும் இருக்குமாம்.

அழகிய மூங்கில் குடில்களை ஐரோப்பியர்க்கு அமைத்துக் கொடுத்து அவர்களுடைய பாராட்டுதலை, காடர் பெற்றுள்ளனர்.

**மலாசர்**

மலாசர் தொகை 1100 இருக்கும். அவர்களைத் தேயிலைத் தோட்டங்களில் காணலாம்.

மலாசர் என்பது மலை அரசன் என்பதன் மரூஉ என்பர். அவர்களுள் மருமக்கள் தாயமுறை நிலவி வருகிறது. மாமன் மகளை மணப்பதுமரபு. திருமணம் பேசி முடிவு செய்ய, பெண்வீட்டுக்குச் செல்லும்போது அவர்கள் எடுத்துச் செல்லும் சேலைக்கு, "கூரைப்

புடவை" என்று பெயர். குடும்பத் தலைவருக்கு மூப்பனூர் என்று பெயர். அவர்கள் காடுகளில் கூலிகளாகவும் விவசாயத் தொழிலாளராகவும் உள்ளனர். செல்லுமிடமெல்லாம் வில், அம்பு, கத்தி இவற்றோடு செல்லுவர். வீரபத்திரனையும் பத்திரகாளியையும் வழிபடுவர். சாப்பிடும் கஞ்சியில் சாமை, தினை, கம்பு ஆகியவற்றை மிகுதியாகச் சேர்ப்பார்கள். பசு, நாய், புலி, யானை இறைச்சிகளை விரும்பி உண்பர்.

## முதுவர்

இவர்கள் தொகை 3,000 இருக்கலாம். கண்ணன் தேவன் மலையிலும் ஏலமலையிலும் ஆனைமலையில் ஒரு சிற்றூரிலும் முதுவர் வாழ்கின்றனர்.

இவர்களுக்குத் தகப்பன்மார்கள் என்றும் பெயர், கணவனை "ஆளன்" என்றும் மனைவியைப் "பெண்டு" என்றும் குறிப்பிடுவர். குழந்தையில்லாத ஆளனும் பெண்டும் இன்னின்ன உணவு உண்ணவேண்டுமென்ற வரையறை உண்டு. பழநியாண்டவர், மீனுட்சி சொக்கநாதர், சூரியன் ஆகிய கடவுளரை இவர்கள் வழிபடுகின்றனர். இவர்கள் கொண்டாடும் முக்கியமான திருவிழா தைப் பொங்கல். தங்களுடைய கிராமத்துக்கு வருபவர் அனைவரையும் அகமகிழவரவேற்று அவர்களுக்கு விருந்து படைக்கும் பண்பு முதுவரிடம் உண்டு. துப்பாக்கியால் சுட்டு உயிரினங்களை வேட்டையாடுவதில் முதுவர் பலர் வல்லவராக உள்ளனர்.

## புலையர்

இவர்கள் உடுமலைப்பேட்டை வட்டத்தில் திருமூர்த்தி மலையில் கூட்டம் கூட்டமாக வாழ்கின்றனர்; தரையில் விழும் அளவுக்கு அவ்வளவு நீண்ட தலைமயிரை வளர்க்கின்றனர்; எலி, பன்றி, காட்டுக் கோழி, தேனில் திளைந்த தினைமாவுப் புட்டு ஆகியவற்றை விரும்பி

உண்ணுகின்றனர்; மூங்கிலால் வீடு கட்டி, புல்லால் கூரை மேய்ந்து கொள்ளுகின்றனர். வீட்டுக்கு முன்னால் ஒரு பந்தல் போட்டுக் கொள்ளுவதும் இவர்களுடைய வழக்கம். மாடு கோழி வளர்த்தும் வேளாண்மை செய்தும் பிழைக்கின்றனர் ; தமிழ் மொழி பேசுகின்றனர். இவர்கள் தங்களை 'மேல் நாட்டார்' என்றும் நம்மைக் 'கீழ் நாட்டார்' என்றும் கூறுவர். திருமணத்தின்போது சீர்தனமாக ஒரு நாய்க்குட்டியும் ஒரு சேவலும் ஒரு கொள்ளிக் கட்டையும் வழங்குவர்.

பழங்குடி மக்களின் குழந்தைகளுக்கென தமிழ்நாடு அரசாங்கத்தார் இம்மாவட்டத்திலுள்ள மாவுத்தன்பட்டியில் ஒரு பள்ளிக்கூடம் (Government Tribal Residential School) நடத்தி வருகின்றனர்.

## திட்டுப் பகுதித் தமிழர்

கேரள மாநிலத்துக் கொச்சிப் பகுதியில் திருச்சூர் மாவட்டத்தைச் சேர்ந்த சிற்றூர் வட்டம் கோயம்புத்தூர் மாவட்டத்துக்குள் இருக்கிறது. இவ்வட்டத்தின் மொத்த மக்கள் தொகை 1,44,088. இதில் 1,09,499 பேர் தமிழ் பேசுபவர். எனவே இது தமிழர் பெரும்பான்மையாக வாழும் திட்டுப் பகுதி என்றும் கோவை மாவட்டத்துடன் சேரவேண்டும் என்றும் மொழிவழி மாநில அமைப்புக்கான வாஞ்சு குழு ஏற்றுக்கொண்டிருந்தும், இப்பகுதி தமிழ் நாட்டுடன் சேர்க்கப்படவில்லை.

இங்குள்ள மக்களுக்குத் தமிழ்நாட்டுத் தொடர்பே மிகுதி. இங்கு விளையும் நெல், பருத்தி, நிலக்கடலை ஆகியவை பல நூற்றாண்டுகளாகக் கோயம்புத்தூரிலும் பொள்ளாச்சியிலுமே விற்கப்படுகின்றன.

## 9. தமிழ்ப்பணி

இம்மாவட்டத்தில் பல மொழிகளைப் பேசுகின்ற மக்கள் பெருந்தொகையினராக வாழ்கின்றனர். கிராமங்களில் கோயில் அர்ச்சகர் பெரும்பாலும் தெலுங்கு மொழியாளரே. கம்மாளர், வண்ணார் ஆகியோரிலும் தெலுங்கு, கன்னட மொழிகளைப் பேசுபவர் மிகுதியாக இருக்கின்றனர். தமிழ் மொழியைத் தாய் மொழியாகக் கொண்ட வண்ணாரைக் 'கொங்கு வண்ணார் என்று குறிப்பிடுவது இந்நாட்டு வழக்கம். ஒக்கிலியர் கன்னட மொழியும் கம்மவார் நாயுடுக்கள் தெலுங்கு மொழியும் பேசுகின்றனர். சக்கிலியர்களில் மைசூர் ஆட்சிக் காலத்தில் வந்தவர் கன்னடத்தையும் விசயநகர ஆட்சியில் வந்தவர் தெலுங்கையும் பேசுகின்றனர்.

மொழிவழியாக மாநிலங்கள் அமைக்கப் பெற்ற பிறகு, மலையாள மொழி பேசுபவர்கள் கோயம்புத்தூர், பொள்ளாச்சி இரு வட்டங்களிலும் பல்லாயிரக் கணக்கில் வந்து குடியேறியுள்ளனர்.

### தமிழறிஞர்கள்

தமிழ்த் தாய்க்கு அரும்பணியாற்றிய பேரறிஞர் பலரைக் கோவை மாவட்டம் தந்திருக்கிறது.

யாப்பருங்கலம் இயற்றிய அமிர்தசாகரர், வீரசோழியம், நேமிநாதம் ஆசிரியர்கள், இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் ஆகிய உரையாசிரியர்கள், பெரியவாச்சான் பிள்ளை, நம்பிள்ளை, செங்குன்றூர்க் கிழார், கொங்குவேல் மாக்கதை பாடிய நல்லாசிரியர், வேதாந்த தேசிகர், உரிச்சொல் நிகண்டாசிரியரான காங்கேயர், கொங்குமண்டலசதகம் பாடிய கார்மேகக்

கவிஞர், இடைஞானியர், மசக்காளி மன்ருடியார், பூங் கோதையார், இளையான் கவிராயர் இன்னபிற தமிழ்க் கொண்டல்கள் கொங்கு நாட்டுக் கோவை மாவட்டத் தவரே.

பெருங்கதை இயற்றிய கொங்குவேளிர் விசயமங் கலத்தைச் சேர்ந்தவர். நன்னூல் என்னும் இலக்கண நூலை எழுதிய பவணந்தி முனிவர் சீனபுரத்தைச் சேர்ந் தவர். சிலப்பதிகாரத்துக்கு உரை எழுதிய அடியார்க்கு நல்லார் பெருந்துறையை அடுத்துள்ள நிரம்பை என்ற ஊரினர். ஈரோடு வட்டத்திலுள்ள விசயமங்கலத்தில், நெடுங்காலமாக ஒரு தமிழ்ச் சங்கம் இருந்து வந்தது.

கடையெழு வள்ளல்களில் ஒருவனும் வில்லாளரிற் சிறந்த வீரனுமாகிய ஓரி என்பான் இம்மாவட்டத்தைச் சேர்ந்தவன் என்பதற்கு ஆதாரமாக ஓரி—சேரி என்னும் ஊர் பவானிக்கு அருகில் இருக்கிறது. சிறந்த கொடை யாளனுக விளங்கிய குமணன் வாழ்ந்த குமணம், கொழுமம் என மருவி உடுமலைப்பேட்டைப் பகுதியில் இன்றளவும் இருக்கிறது.

கோவை மாவட்டத்தில் வாழ்ந்த வெளிநாட்டினருள் ஒரு பெரியார் ரெவரண்டு பாப்ளி (1879—1960) என் பார். இவர் ஈரோடு இலண்டன் மிசனில் முப்பதாண்டுக் காலம் சமயப் பணியாற்றிய காலை, திருக்குறளை ஆங்கி லத்தில் மொழி பெயர்த்திருக்கிருர். தமிழில் சுருக் கெழுத்துமுறை தோன்றுவதற்கு உறுதுணையாக இருந்து அதற்குரிய அடிப்படை நூல்களை எழுதியவர் இம்மா வட்டத்தவரும் பேரறிஞரும் சென்னை இராசதானியின் சட்டசபைத் தலைவராக இருந்தவருமாகிய எல். டி. சாமிக்கண்ணுப்பிள்ளை (இ. 1925) ஆவார்.

நம் தலைமுறைப்பெருமக்களுள் பெரிய புராண உரை யாசிரியர் சிவக்கவிமணி சி.கே. சுப்பிரமணிய முதலியார்

(இ. 1961) பேரூர்ப் புராணத்தைப் பதிப்பித்தும் பல சிறந்தநூல்களை வெளியிட்டும் கோவைத் தமிழ்ச் சங்கத்தைத் தொடங்கியும் சைவ மாநாடுகளில் தலைமை தாங்கியும் பணியாற்றியுள்ளார். பல்துறை ஆராய்ச்சி அறிஞரும் பல நூல்களை ஆக்கியவருமான கோவை கிழார் சி. எம். இராமச்சந்திரன் செட்டியார், பவானி புலவர் குழந்தை, பேரூர் கந்தசாமிப்புலவர், தொல்காப்பிய ஆராய்ச்சியாளரும் மேற்கு ஜெர்மனியில் பான் பல்கலைக்கழகத்தில் பேராசிரியராக இருப்பவருமான டாக்டர் சி. ஆர். சங்கரன் ஆகியோர் நாடறிந்த நற்றமிழறிஞர் ஆவர்.

நமது தலைமுறையில் தமிழ்மொழியின் ஏற்றத்துக்காக ஆட்சியாளராக இருந்து அரும்பணி செய்த பெருமை இம்மாவட்டத்தினர்க்கு உண்டு. உயர்நிலைப் பள்ளிகளில் தமிழைப் பாடமொழியாக்கியவர் தி. சு. அவிநாசிலிங்கம் ஆவார்கள்; பல்கலைக்கழகப் படிப்பில் சிலபாடங்களையேனும் தமிழில் கற்பிக்க முயன்று ஆவன செய்துவருபவர் அமைச்சர் சி. சுப்பிரமணியம், தமிழைக் கல்லூரி மொழியாக்கும் பணியைச்செய்து வரும் அரசாங்கக் குழுவின் தலைவர் ஜி. ஆர். தாமோதரன், கலைச்சொல்லாக்க வேலையில் ஈடுபட்டுள்ள சைதை ஆசிரியர் கல்லூரித் தலைவர் மு. இரா. பெருமாள் முதலியார் ஆகிய அனைவரும் இம்மாவட்டத்தினரே.

கோவை மாவாட்டத்தில் பல கல்லூரிகள் தமிழில் கற்பிக்க முன்வந்து பிற மாவட்டங்களுக்கு வழிகாட்டியிருப்பதைக் கல்வி நிலையங்கள் என்ற பகுதியில் கூறுவோம்.

அவிநாசிலிங்கம் அவர்களின் அரிய முயற்சியால் தமிழில் கலைக்களஞ்சியம் வெளி வந்திருக்கிறது. இவ்வேலை இப்போது சென்னையில் நடைபெற்றாலும், இம் மாவட்டத்தில் தான் தொடங்கப்பெற்றது. கலைக் களஞ்சியத்

தின் பிரதம ஆசிரியர், ம. ப. பெரியசாமித் தூரன் இம்மாவட்டத்தினரே.

தமிழ் வளர்ச்சிக் கழகத்தார் நடத்திவந்த தமிழ்த் திருவிழா 1950இல் கோவை மாநகரில் மிகச்சிறப்பாக நடைபெற்றது. அதன் விளைவாகத்தான், 'தமிழ்மொழியைப் படிக்காமலேயே உயர்நிலைப்பள்ளி மாணவராக இருக்கலாம்' என்று அமைச்சர் மாதவமேனன் இட்ட ஆணையை அன்றைய முதலமைச்சர் குமாரசாமி ராஜா மாற்றினர். அம்மாநாட்டில் பேசியவர்கள் "கோவை மக்கள் பஞ்சுநயம் தெரிந்தவர்கள்; நூல் நயமும் தெரிந்தவர்கள் என்பதை இப்போது அறிந்தோம்" என்று இரு பொருள் நயம்படக் கூறினர்.

கோவை மாநகரிலிருந்து பல இதழ்கள் வெளிவருகின்றன. இவற்றுள் சிலவற்றை இங்கே குறிப்பிடுவோம்.

## நாள் இதழ்கள்

1938இல் ஈரோட்டிலிருந்து '**விடுதலை**' என்ற நாள் இதழைப் பெரியார் ஈ. வே. ரா. வெளியிட்டார். இது இப்போது சென்னையிலிருந்து வெளி வருகிறது.

**நவ இந்தியா** பூளைமேடு: வரலாற்றுச் சிறப்புடைய கதைகளையும் வெளியிட்டு வருவது இந் நாளிதழின் சிறப்பு. இது 1948 முதல் கோவையிலிருந்து (பின்னர் சென்னைப் பதிப்பும்) வெளிவருகிறது. நிர்வாக ஆசிரியர்: பி. ஆர். இராமகிருஷ்ணன், M.P., ஆசிரியர்: வி. என். இராமசாமி.

திருப்பூரிலிருந்து '**பஞ்சு வணிகக் குறிப்பு**' என்ற நாளிதழ் வெளிவருகிறது.

**கோவை மாலை முரசு** என்னும் நாளிதழ் கோயம்புத்தூரிலிருந்து 1960 முதல் வெளிவருகிறது.

## திங்கள் இதழ்கள்

இம்மாவட்டத்தில் ஆலை அரசர்கள் பலர் திங்கள் இதழ்களை வெளியிட்டு வருகின்றனர். இவற்றுள் முக்கியமானது "கலைக்கதிர்". 1949 முதல் வெளிவந்து, விஞ்ஞானத்துறையிலும் இலக்கியத்துறையிலும் இந்த இதழ் தமிழுக்குச் சீரிய தொண்டாற்றிவருவது பெரிதும் பாராட்டத்தக்கது. இதன் ஆசிரியர் ஜி. ஆர். தாமோதரன் ஆவார்.

தமிழ் ஆர்வத்தை வளர்த்து, தமிழில் எல்லாக் கலைகளையும் கற்பிக்க இயலுமென்ற எண்ணத்தை உறுதியாக ஊட்டித் தொண்டாற்றிய தனிப்பெருஞ் சிறப்பு "கலைக்கதிர்" இதழுக்கு உண்டு என்று துணிந்து கூறலாம்.

டாக்டர் ரா.க. சண்முகம் செட்டியாரை (1891-1953) கௌரவ ஆசிரியராகக்கொண்டு தொடங்கப்பெற்ற "வசந்தம்" என்னும் இதழ், பெ. தூரனை ஆசிரியராகக் கொண்டு 1949 முதல் சில ஆண்டுகள் வெளிவந்த 'காலச் சக்கரம்,' ஏ. சண்முகம் நடத்திய 'மாதமணி', க. ரா. நல்ல சிவத்தை ஆசிரியராகக் கொண்டு ஈரோட்டிலிருந்துவெளிவரும் 'உழவன்', ந. மகாலிங்கம் ஆசிரியராக உள்ள கோவை 'குடியரசு' ஏனையோர் நடத்திய கைத்தறி, தாரைக்குரல், சகோதரி, கோவை முரசு, பொள்ளாச்சிவாசி, ஈரோடு வாசி என்ற இதழ்களும் பண்டிட் ஜெயலானி நடத்திவரும் 'யந்திர உலகம்' என்னும் மாதமிருமுறை இதழும் குறிப்பிடத் தக்கன. 1957 ஜூன்முதல் சா. வேதநாயகம் வெளியிட்டுவரும் "கதிரொளி" இலக்கியக் கட்டுரைகளுடன் வெளிவந்து தமிழுணர்ச்சி யூட்டிவருகிறது.

நூல் வெளியீட்டாளர்களில் கோவை மெர்க்குரி புத்தகநிலையமும் கவிஞர் பதிப்பகமும் ஈரோடு சிவலிங்க நூற்பதிப்பகமும் குறிப்பிடத்தக்கவை. கலைக்கதிர்

அலுவலகம், இராமகிஷ்ண வித்தியாலயம் ஆகிய வற்றினின்றும் சிறந்த தமிழ் நூல்கள் வெளிவந்துள்ளன.

### ஊர்ப் பெயர்கள்

கோவை மாவட்டத்தின் ஊர்ப்பெயர்களிலும் அதனுடைய தனித்தன்மை காணப்படுகிறது.

பல ஊர்களின் பெயர்களில் "பட்டிதொட்டி" என்ற இறுதிச் சொற்கள் இருப்பதாயும் இம்மாவட்டத்து மக்கள் கம்பஞ்சோறு மட்டுமே உண்ணும் இயல்பினர் என்றும் ஒரு தனிப்பாடல் உண்டு. அது வருமாறு:—

" நீரெல்லாம் சேற்று நாற்றம்
நிலமெல்லாம் கல்லுமுள்ளும்
ஊரெல்லாம் பட்டித்தொட்டி
உண்பதோ கம்பஞ்சோறு
பேரெலாம் பொம்மன் திம்மன்
பெண்களோ நாயும் பேயும்
காருலாம் கொங்குநாட்டைக்
கனவிலும் நினைக்கொணுதே "

அந்தநிலை கடந்த ஒரு தலைமுறையில் பெரிதும் மாறிவிட்டது. வேளாண்மைச் சிறப்பும் நெல் விளைவும் மிகுந்து கொங்குநாட்டு மக்கள் இப்போது அரிசி உண்ணுகின்றனர். ஊர்ப்பெயர்களில் "பட்டி தொட்டி" களை விருதுபட்டி, கோயில்பட்டி, பட்டிவீரன்பட்டி என்று பாண்டிய நாட்டில்தான் மிகுதியாகக் காணலாம். எனவே கோவை மாவட்டத்தார் எதிரிடைச்செய்யுள் ஒன்றை இயற்றியுள்ளனர். அது வருமாறு :

" நீரெலாம் பன்னீர் வாசம்
நிலமெலாம் செந்நெ லாகும்
ஊரெலாம் புனுகு வாசம்
உண்பதோ அமிர்த மாகும்
பேரெலாம் தங்கம் பொன்னும்
பெண்களோ தெய்வ ரம்பை
காருலாம் கோவை நாடு
கன்ம்பெறு மகிழ்ச்சி யாமே "

பாளையம் என்ற இறுதிச்சொல்லுடைய ஊர்ப்பெயர்கள் இந்த மாவட்டத்தில் நூற்றுக்கணக்கில் உள்ளன. தெலுங்கு மொழி பேசிய படைவீரர் (பாளையக்காரர்) வந்து தங்கி இராணுவத் தளம் அமைத்துக் கூடாரம் அடித்த இடங்கள் பாளையம் என்று பெயர்பெற்றன. பிற்காலத்தில் தெலுங்கர் குடியேறிய இடங்களெல்லாம் 'பாளையம்' எனப்பட்டன. பல்ல என்ற தெலுங்குச் சொல்லுக்கு, 'சிறு கிராமம்' என்று பெயர். பாப்ப நாயக்கன் பாளையத்தை 'பாப்பய்ய பல்ல' என்றும் ஆரவம்பாளையத்தைச் 'சங்கேடி பல்ல' என்றும் பெரிய நாயக்கன் பாளையத்தை 'பேரைய பல்ல' என்றும் தெலுங்கர் கூறுவர்.

கோவை மாவட்டத்தில் கோபிச்செட்டிபாளையம், மேட்டுப் பாளையம், தெலுங்குபாளையம், கோயில் பாளையம் போன்று பார்க்குமிடமெல்லாம் பாளையங்கள் உள்ளன. தாராபுரம் வட்டத்திலுள்ள சில பாளையங்களின் பெயர்களைத் தருவோம்;

| | |
|---|---|
| பொதிய பாளையம் | தம்பிரெட்டி பாளையம் |
| அவினசிப் பாளையம் | நாட்டார் பாளையம் |
| சங்கராண்டாம் பாளையம் | கஞ்சர் பாளையம் |
| வீராணம் பாளையம் | சாவடி பாளையம் |

இப்படியே வட்டம் தோறும் தவறி விழுந்தால் ஒரு பாளையத்தில்தான் விழவேண்டும்.

வலசு, கடவு, ஓடை என்ற ஈற்றுச்சொற்களுடைய ஊர்களும் உள்ளன. சான்ருகக் குப்பகவுண்டன் வலசு, பர வலசு, நத்தக்காட்டு வலசு என்பனவும், கிணற்றுக் கடவு, பீர்க்கடவு என்பனவும் குறிப்பிடத்தக்கன. ஓடைகள் சிலவற்றையும் கடப்போம். இரண்டு ஓடைகளுக்கு நடுவே இருப்பது ஈரோடை: பல ஓடைகள் உள்ளது

பல்லோடை (இதுவே பல்லடமாக மாறிற்று.) வெண் மணல் நிறைந்த ஓடை உடையது வெள்ளோடு. சிறிய ஓடையருகே உள்ளது சிற்றோடை (இது சிற்றோடு என மருவி வழங்குகிறது). ஓடத்துறை, பேரோடு என்ற ஊர்களும் உள்ளன.

பிற ஊர்களுள் நம் கவனத்தை ஈர்ப்பது நம்பியூர். இது கோபிச்செட்டிபாளையம் வட்டத்தில் இருக்கிறது. நம்பி பேரூர் என்பதன் மருவே நம்பியூர்.

**மக்களின் பெயர்கள்**

மக்களின் பெயர்களிலும் கோவைமாவட்டத்தில் மட்டுமே வழங்கும் பெயர்கள் உள்ளன:—

செங்கோட்டு வேலப்பன் — சிவமலை
கிட்டப்பன் — திருமூர்த்தி
செம்பரிசி — நாச்சிமுத்து
சென்னியப்பன் — அவினாசிலிங்கம்
வெள்ளங்கிரி — பேச்சிமுத்து
மருதாசலம் — வீரபோயன்
பட்டிலிங்கம் — ராக்கப்பன்

பெண்களின் பெயர்களிற் சில: பச்சை நாயகி (பேரூர் அம்மனின் பெயர்)

மயிலாத்தாள் — இராமாத்தாள்
பொன்னாத்தாள் — பாப்பாயி

ஆடவர் பெயர்களும் அவற்றுக்கேற்ற பெண்டிர் பெயர்களும் வருமாறு:

நஞ்சப்பன் — நஞ்சம்மாள்
கோணப்பன் — கோணியம்மாள்
மாரப்பன் — மாராத்தாள்
மருதப்பன் — மருதாயி

## கோவை மாவட்டத்துப் பேச்சுத்தமிழ்

கோவை மாவட்டத்தே வாழும் மக்கள் பேசும் மொழியில் ஒவ்வொரு சொல்லுக்கும் இராகம் இழுத்துப் பேசுவர். "ஆமுங்க நீங்க எதுக்குங்க வந்திங்க?" என்று கேட்பர். "அ ஆமுங்கறேனுங்க" என்று அவர்கள் நீட்டி முடக்கிக்கூறுவதில் தனி இசை ஒலிக்கும். ஒருவர் பேசும் போது மற்றவர் "சரிங்க சரிங்க" என்றும் "ஆமுங்க ஆமுங்க" என்றும் சலிக்காமல் தலையாட்டும் காட்சி கண்டும் கேட்டும் சுவைக்கத்தக்கது. இங்ஙனம் பேச்சு வழக்கில் வியங்கோள் (மரியாதை) பேரிடம் பெறுவது இக் கொங்குமாவட்டம் ஒன்றில்தான். இவ்வழக்குப் புரியாதவர்களுக்கு இப்பேச்சுப் பெருவியப்பும் பெரு நகைப்பும் ஊட்டும்.

"ங்க" இராகம் இழுக்காமல் பேசுவது மரியாதைக் குறைவு என்பது கொங்குநாட்டார் கொள்கை. "மதுரைக்குத் தெற்கே மரியாதை இல்லை" என்பது அவர்கள் கருத்து.

கொத்தனுரை, "போயன்" அல்லது "ஒட்டர்" என்பது கோவை வழக்கு. மூட்டை தூக்கும் தொழிலாளரை, "கலாசுக்கா ரபேசு"ன்பர். இது கலாசு என்னும் இந்திச் சொல்லின் திரிபு.

'யாரும் என்னை ஏதுவுஞ் செய்ய இயலாது; நாமார்க்கும் குடியல்லோம்' என்ற பொருளில் "ஒங்கப்பன் ஏழரைக்கோடி" என்று கூறுவது கோவையில் வழிவழி வந்த வழக்கம். அப்பவே என்பதை 'அப்ளயே' என்றும் 'தின்றுவிட்டது' என்பதை 'தின்னுபோட்டு' என்றும் கூறுவர்.

கோவைத்தமிழை மலைநாட்டுத்தமிழ் என்று சிலர் கூறினும் அங்கே நல்ல சொற்கள் பலகையாளப் படுவ

தைப் பார்த்தும் கேட்டும் மகிழ்ந்தேன். நாவிதர் கடைகளில் "அழகூட்டும் கலைக்கூடம்" என்ற சொற்றொடரும், ரெவினியூடிவிசன் ஆபீஸ் என்பதற்குக் "கோட்ட ஆட்சித் தலைவர் அலுவலகம்" என்ற மொழிபெயர்ப்பும், பால் வணிகர் கடையில் "ஆவின் பால் கிடைக்குமிடம்" என்ற அறிக்கைப் பலகையும் பயன் படுத்தப்பட்டிருக்கக் கண்டேன். குறி எதிர்ப்பை என்னும் திருக்குறள் சொல் பாமர மக்களிடமும் பழகுதமிழாய்ப் பரவியிருக்கிறது.

இனி, இம்மாவட்டத்தில் வழங்கும் சொற்களின் சிறு பட்டியல் ஒன்றைத் தருவோம்.

மேனாம்பு - மேற்போக்காக, சோம்பலாக
உடைசல் - கேலி செய்தல், பகிடி பண்ணுவது
எக்றிட்டார் - ஓடிப்போய்விட்டார்
ஒட்டுக்கு - ஒன்றாய்
அவிய - அவர்கள்
பயிர்த்தொழில் - விவசாயம், வேளாண்மை
பொரிக்கஞ்சட்டி - தாளிப்பதற்குப் பயன்படும் இருப்புப்பாத்திரம்
ஆடுகாலன் - காடையன்
விடுகாசு - தனிக்காசு (விடு பூ என்பதுபோல)
வாரனுங்க - போய் வருகி[illegible]
கோணப்புளி - கொடுக்கா[illegible]புளி.
காப்பி காய்ச்சித் தரவா - காப்பி கலந்து தரவா ?
வளத்துனுங்க - வளர்த்தார்கள்.
துளாவுனேன் - தேடினேன்.
வழித்தல் - வாரிக்கொள்ளுதல் (சில இடங்களில் கோருதல் என்பர்.)
பாண்டிக்கரம் விளையாடுதல் - வட்டாட்டம் அல்லது பாண்டியாட்டம் ஆடுதல்.
பொடக்காளை - கொல்லை (வீட்டின் பின்பகுதி அல்லது தோட்டம்.)

கொட்டாங்கச்சி – தேங்காய் ஓடு அல்லது சிரட்டை. சில இடங்களில் கொட்டாச்சி என்பர்.

மொல்லமாறி – ஏமாற்றுப் பேர்வழி, திருடன்.

ரோந்தை-மிக அசுத்தமான இடம். (அந்த ரோந்தை பிடித்த ஓட்டலுக்கு யார் போவார்கள்?)

நங்கையா – அண்ணன் மனைவி.

அட்டாலி – பரணை (சுவர்க்கும் கூரைக்கும் இடைப் பட்ட பகுதி).

மெத்தை – மாடி, மேல் வீடு.

தொன்னை – வலுவான கருவி, பிறர்க்கு ஆபத்து விளைக்கும் ஆற்றலுள்ள பொருள் (தொன்னை யால் அடித்தான்).

கரைவழி – ஆற்றுப் பாசானம்.

நங்கு பண்ணுதல் – கேலி பண்ணுதல், நையாண்டி செய்தல்.

வேணம் – தின்பண்டம்.

ரவுசு – கலக ஆரவாரம் (ரவ் என்ற ஆங்கிலச் சொல் லின் மரூஉ)

இட்டுக்கட்டிப் [illegible]தல் – இல்லாததைச் சேர்த்துச் சொல்லுதல்; பொல்லாங்கு உரைத்தல்; பாண்டி நாட்டில் எடுத்துக் கட்டிப் பேசுதல் என்பர்.

பெருந்தாலிகட்டிகள் – பெரிய தாலிகளை அணிந்த பெண்களையுடைய கொங்கு வேளாளக் கவுண் டர்கள்.

வீரராயன் பணம் – இராட்டிரகூட அரசர்கள் வெளி யிட்ட சிறிய தங்க நாணயங்கள்.

சலகை – ஓர் அளவை. 3 சலகை கொண்டது ஒரு பொதி. இது ஒரு கன்னடச் சொல்.

லௌண்டிகா - அடிமைப் பெண்ணின் பிள்ளை. இது ஐதர் அலிக்கு மிக விருப்பமான சொல் என்பர்.

நடைபாவாடை - பிணம் தூக்கிச் செல்லும்போது வண்ணான் விரிக்கும் மாற்றுத் துணி. (நலம் பொலங்களுக்கு வண்ணான் நடை பாவாடை தருவான்.)

பண்ணை - பெருஞ் சொத்து.

பண்ணாடி - பெரிய பண்ணையை உடையவர்; முதலாளி.

பண்ணாடிச்சி - பண்ணாடியின் மனைவி.

ஆள்காரன் - வேலைக்காரன் (அவன் ஆள்காரன் மாதிரி வேலை பார்க்கிறான்.)

மன்று - சாதிக் கூட்டம் (இச்சொல் மலையாளத்திலும் உண்டு.)

மன்றாடியார் - மன்றின் தலைவர்; கொங்கு வேளாளர் சமூகத்தில் நடுவராக மன்றில் அமர்ந்து முடிவுகள் கூறுபவர். மன்றாடி என்று சேக்கிழார் சிவபெருமானைப் பெரிய புராணத்தில் குறிப்பிட்டுள்ளார்.

வள்ளம் - நெல் அளவை; பட்டினம் படி நான்கு படிக்குச் சமமானது.

பொடி நேரம் - வெயில் நேரம்.

பொலி - ஒரு காட்டிற்கும் மற்றொரு காட்டிற்கும் இடையிலுள்ள புல் தரை.

கொரை - மேய்ச்சல் நிலம்.
ராசி - தானியக் குவியல்.
அப்பிச்சி - அம்மாவின் அப்பா.
அப்பத்தாள் - அப்பாவின் அம்மா.
மொடா - பதினாறு வள்ளம் கொள்ளும் பானை.
பொழுதன்னிக்கு - அடிக்கடி.

## கோவை மாவட்டத்துப் பழமொழிகள்

வெள்ளாளன் கல்யாணம் விடிவதற்குள்.

கொங்கு மலிந்தால் எங்கும் மலியும்.

காடு அறியாதவன் கல்லாங்காட்டை உழவேண்டும்.

அருகங்காட்டை விட்டவனும் கெட்டான்; ஆன மாட்டை விற்றவனும் கெட்டான்.

முட்டம் கோடி முப்பத்திரண்டு அணைகள்.

ஒட்டன் கண்டானு லட்டுருண்டை போயன் கண்டானு பொறியுருண்டை.

வலுத்தவன் தண்ணி வடக்கேயும் பாயுமாம் தெற்கேயும் பாயுமாம்.

மொடக்காடிக்காரனுக்குப் பொடக்காலி தடம்.

என்ன சின்னமலைக் கவுண்டன் அதிகாரம் போலிருக்கிறதே.

## கோவை மாவட்டத்துக் கும்மி வகைகள்

கோவை மாவட்டத்துக்கே உரிய நாட்டுப் பாடல்கள் பல. அவற்றுள் நள நாடகக் கும்மி, வாஞைசுரக் கும்மி ஒயில் கும்மி என்பன குறிப்பிடத் தக்கன. சின்னமலைக் கும்மி, முத்து வீராயி கும்மி என்பனவும் உண்டு.

கிராமங்களில்மகாநவமிக்காகப் பள்ளிக்கூடங்களில் இரண்டு மாதங்களுக்குக் கும்மி கோலாட்டம் சொல்லிக் கொடுப்பார்கள். காதற் பாட்டு, சோகப் பாட்டு, வசைப் பாட்டு, வீரப்பாட்டு ஆகியவை பாடிக்கொண்டு ஆசிரியரும் மாணவரும் வீடு வீடாகச் செல்லுவர்.

அப்போது அவர்கள் பாயிரமாகப் பாடும் பாட்டு இது :

" கடலை பொறி அவல் பயறு கரும்பு மிளநீரும்
கற்கண்டு சீனியுடன் அப்பம் அதிரசமும்
வடை தோசை பணியாரம் வரிசைப் பலாச்சுளையும்
வாகான எள்ளுருண்டை பொறி விளாங்கனியும்
குடவயிறு தனில் நிறைய அமுதுகொள்ளும் பரனே
கும்பமத கம்பீர தம்பி முகத்தோனே
அடைவுடனே நகர்தன்னில் வாழும்
ஐங்கர நின்னிரு சரணம் அன்பில் மறவோமே"

ஒவ்வொரு விழாவிலும் வயது வந்த இளைஞர் கும்மி யடிப்பர். கும்மி வகைகளில் கொங்கு நாட்டில் சிறப் பானது ஒயிற் கும்மி. பத்துப் பேர் வட்டமாக நின்று வேட்டிகளைக் கோவணமாக மடித்துக் கட்டிக்கொண்டு ஒயிற் கும்மி ஆடுவர். அவர்களுக்கு நடுவே ஆட்டுவிப் போன் நிற்பான். பாட்டுக்களைப் பாடி, கைகால்களால் சைகை செய்வான். அதற்கேற்றவாறு சுற்றி நிற்பவர் களும் பலவாறு ஆடி, பாட்டு இசைத்துக் கும்மி அடிப்பர்.

மற்றொரு திருவிழாவும் குறிப்பிடத் தக்கது. கோவை நகருக்கு அருகே, நொய்யல் அணைக்கு அண்மையில் சங்கிலிக் கருப்பன் கோயில் இருக்கிறது. தை நோன் பிலும் ஆடிப்பெருக்கிலும் ஊர்க்கன்னிப் பெண்கள் அங்கே சென்று நொய்யல் ஆற்றின் கரையில் கன்னிமார் வைத்துப் பூசை செய்வர். அப்போது அவர்கள் சிறு கூடைகளில் வளையல், குங்குமம், மஞ்சள், சிறு பாவாடை முதலிய பொருள்களை ஏந்திக்கொண்டு பூசை முடித்துத் திரும்புவர். ஓலையக்காள் பாட்டுப் பாடியும் நாட்டுக் கும்மியடித்துக்கொண்டும் ஊர்வலமாகச் செல்லுவது காண்பதற்குக் கவினுறு காட்சியாக இருக்கும்.

கோவை மாவட்டத்துக்குரிய சில பாடல்களை இங்கே தெரிவிப்போம்:

## தாலாட்டு

தூங்காத கண்ணுக்குத் துரும்புகொண்டு மையெழுதி
உறங்காத கண்ணுக்கு ஓலைகொண்டு மையெழுதி
அஞ்சுகிளி எழுதி அதுமேல் முகம் எழுதி
கொஞ்சுங்கிளி கொண்டெழுதி கொண்டுவந்தார் உன்மாமன்

## கல்யாணப் பாட்டு

படிக்காத அத்தைமகனைக் கேலிசெய்து, மணப் பெண் பாடியது :—

பாட்டைப் படிச்சுவச்சு பானையிலே போட்டுவச்சேன்
பாட்டறியா அத்தைமகன் பானையோடு தூக்கினனே
கதையைப்படிச்சுவச்சு கலயத்திலே போட்டுவச்சேன்
கலையறியா அத்தைமகன் கலயத்தோடே தூக்கினனே.

மாப்பிள்ளை பதில் :—

அத்தை மகள் மத்தாணி
அவல் இடிக்கிற குந்தாணி
மாமன் மகள் மத்தாணி
மா இடிக்கிற குந்தாணி

## ஒப்பாரிப் பாடல்

கணவனுக்குமுன்னரே உயிர்நீத்துவிடும் பெண்கள் சுமங்கிலி எனப்படுவர். சுமங்கிலியாக ஒரு பெண் இறந்தாள். மஞ்சள், மடி நிறைந்த பூ, தாலியணிந்த கழுத்து, வளையல் நிறைந்த கைகள்—இவற்றோடு அவள் உயிர் நீத்த காட்சியை, கொங்குநாட்டு ஒப்பாரி படம் பிடித்துக்காட்டுகிறது :—

" மஞ்சக் கழுத்தோடே
மடிநிறைஞ்ச பூவோடே
மன்னவர்க்கு முன்னாலே
வைகுந்தம் போனியம்மா
தாலிக் கழுத்தோடே
தலைநிறைஞ்ச பூவோடே

தனஞ்சயற்கு முன்னாலே
தனிப்பட்டுப் போனியம்மா
சின்னக்கிளிஎழுதி
சிங்கார வேட்டெழுப்பி
தேன் மொழியாள் போய்ப் புகுந்த
சீமை தெரியலையே
பச்சைக் கிளிஎழுதி
பாங்கான வேட்டெழுப்பி
பார்வதியாள் போய்ச்சேர்ந்த
பாதை தெரியலையே
சந்துக்குச் சந்து
சதுர்வாணம் போட்டாலும்
சமத்தனில்லா வாணம்
சத்தம் கிளம்பிலையே
வீதிக்கு வீதி
வெடிவாணம் போட்டாலும்
வீமனில்லா வானம்
வெடியும் கிளம்பலையே
வெள்ளி வளைபரப்பி
வெற்றிலைக்கால் தூண் நிறுத்தி
வீமர் உருமாலை
விக்கினமார் மல்வேட்டி
விட்டத்து மேல் கழட்டிவச்சா
விட்டம் சடச்சடங்கும்
வெள்ளிவளை ஓசையிடும்
தங்க வளைபரப்பி
தாமரைக்கால் தூண் நிறுத்தி
தருமர் உருமாலை
சந்திரனார் மல்வேட்டி
சட்டத்துமேல் கழட்டிவச்சா
சட்டம் சடச்சடங்கும்
தங்கவளை ஓசையுறும் ”

## ஒயிற் கும்மி

செம்பவளக் கால் நாட்டி நன்ருய்ச்
சிறந்த தளங்களைப் பூட்டி
கம்பலைப் பொன்மணி நிரப்பி அதில்
கனம் பொருந்தும் தழை பரப்பி
பருத்த குமிழாணி வைத்து வள்ளி
பாதம் வைக்க ஏணி வைத்து
ஏணி தனிற் பாதம் வைத்து வள்ளி
ஏற வள்ளி மனது வைத்து
பேணியவள் பரணிருந்தும் வள்ளி
பெற்றியுடன் வளம் பொருந்தும்
வரிசை அண்ணன் மார்போக அங்கே
வள்ளியும் பாங்கியுமாக
விரைந்து கையிற் கவண் சேர்த்தாள் வள்ளி
விளைந்த தினைப் புனங்காத்தாள்
திசையை நோக்கிப் பார்த்திடுவாள் வள்ளி
தெய்வங்களைக் கும்பிடுவாள்
அசையாத பரணேறி வள்ளி
அன்னை வள்ளி மனந்தேறி
பாங்கியரைப் பிரியாமல் நெஞ்சில்
பல நினைவும் குறியாமல்
தீங்கு வரச் செய்யாமல் கிளி
தினைக் கதிரைக் கொய்யாமல்
வீசுங் கவண் மாருமல் அம்மன்
வேற்று முகம் பாராமல்
காசலையப் பரண் மீது நின்று
காத்தாளே குற மாது
இரு தனங்க ளசைந்தாட உன்டை
எறிந்தாளே கவணிசைய
பருவ முகிற் குழல் சரிய வள்ளி
பண்புடனே கவ ணெறிய
கைவளைகள் கலகலென வள்ளி
கவணெறிந்தா ளுடல் பன்ன

மெய்யிலிட்ட பணி துலங்க உண்டை
வீசுகிருள் கவணிலங்க
வஞ்சியிடை துவள நின்ருள் அம்மன்
மணிக்குர லோல மிட்டாள்
அஞ்சுகப் பெண் குரல் போடக் கேட்டு
அன்னங்கள் வந்திசை யாட
பூங் குயில்கள் சூழ்ந்து மொய்க்க அன்னப்
பூவைகளும் புகழ் பொய்க்க
மாங் குயில்க ளிசை பாட புள்ளி
மயிலனமும் நடமாட
செப்பு சிலேக் கண்ணுளே அம்மன்
தினேப்புனங் காத்திருந்தாளே

## தீரன் சின்னமலேக் கும்மி

'பட்டத்துக் கத்தி பளபளெ னச் செல்லும்
பாளேயக் காரர்கள் முன்னடக்கி
வெட்டுந் துரைமகன் சின்ன மலேவரும்
வேடிக்கை தன்னேயும் 'பாருங்கடி'

'பூனேக் குலமென வெள்ளேப் படையோடப்
பூரித்து வீரப் புலிபோலச்
சேனேக் கதிபதி சின்ன மலேவரும்
தீரத்தை வந்துமே பாருங்கடி'

'கட்டுக் கடங்காத காளே களேப்போலக்
கட்டிப் பிடித்துக் கவலேயுடன்
வெட்டிச் செயங்கொண்ட சின்ன மலேதனே
வெள்ளேக்கா ரர்கொண்டு போவதைப் பார்'

## 10. கலைத்துறை

கோவை மாவட்டம் தஞ்சை, நெல்லை, மதுரை மாவட்டங்களைப்போல, கலைத்துறையில் சிறப்பான இடம் பெறவில்லை.

இந்தத் தலைமுறையில் கோவை மாவட்டத்தில் சிறந்த இசைப்புலவர்களாவும் கலைஞர்களாகவும் விளங்கியிருப்பவர்களுள் கோயம்புத்தூர் தாயி அம்மாள், உடுமலை முத்துச்சாமிக் கவிராயர், அவருடைய மாணவரும் பழங்காலத்து இயற்புலவர்களைத் தழுவித் திரைப் பாடல்கள் இயற்றியவருமான உடுமலை நாராயண கவி, வாய்ப்பாட்டுத் துறையில் புகழ் நாட்டியுள்ள கொடுமுடி கே. பி. சுந்தராம்பாள், புல்லாங்குழல் இசைப்பதில் இணையற்றவராகிய பல்லடம் சஞ்சீவி ராவ் ஆகியோர் முக்கியமானவர்கள். பல்லடம் பஞ்சீவி ராவ் பெயரால் 'சஞ்சீவி ராவ் நகர்' ஏற்பட்டிருப்பதைப் பல்லடம் நகரில் காணலாம்.

கோவை மாவட்டத்தைச் சேர்ந்த மற்றொரு இசை மேதை வீணை தனம்மாள் ஆவார். இவருடைய வீணை இசைத்தட்டுக்கள் இந்தத் தலைமுறையினரால் தமிழ் கூறு நல்லுலகெங்கும் ஆவலுடன் கேட்கப்பட்டன.

மற்றொரு பெண்மணியும் நாம் முன்னரே குறிப்பிட்டவருமாகிய கே. பி. சுந்தராம்பாள் பக்திச் சுவை நனிசொட்டச் சொட்டப் பாடும் பண்பினர்; ஔவை சுந்தராம்பாளாகக் காட்சி தந்தவர்; இவருடைய நந்தனார்பாடல்கள் இன்றும் போற்றப்படுகின்றன.

ஊர்ப் பெயர்களிலும், தெருப் பெயர்களிலும் இம் மாவட்டத்தின் கலைத்தொடர்பு காணப்படுகிறது. பொள்

ளாச்சிக்கு அருகேயுள்ள ஓர் ஊரின் பெயர் மத்தளக் கிழவன் புதூர் என்பது.

கோயம்புத்தூர் நகரில் ஒப்பனைக்காரத் தெரு என்ற பெயரில் ஒரு சாலை உண்டு. ஒப்பனை அல்லது அலங்காரம் செய்வதைக் கவினுறு தொழிலாகக் கொண்டிருந்த சாதியார் இத்தெருவில் வாழ்ந்துவந்தனர்போலும்.

தமிழ் இசை இயக்கத்துக்கு ஏற்றம் தந்த பெருமைக்குரிய டாக்டர் ரா. க. சண்முகம் செட்டியாரும் சி.எஸ். இரத்தினசபாபதி முதலியாரும் கோவைநகரினர். இவ்விரு பெரியார்களும் சென்னைத் தமிழ் இசைச் சங்கத்தின் தலைவர்களாக இருந்திருக்கின்றனர். சண்முகம் செட்டியாரின் யோசனையின்படியே தேவாரப் பண் ஆராய்ச்சிப் பணி தொடங்கப்பெற்றது.

கோவை அய்யாசாமி பிள்ளை என்னும் பழம்பெரும் தமிழறிஞர் எழுதியுள்ள தமிழ் இசைப்பாடல்கள் இன்னும் அச்சேறாத நிலையிலுள்ளன.

கோவை நகரில் நடைபெற்றுவரும் இசைச் சங்கங்களுள் ஸ்ரீ குருகுக கான சபை குறிப்பிடத்தக்கது. சிறிது காலம் நடைபெற்ற சங்கங்களுள் நம் நினைவுக்கு வருவது அண்ணாமலை தமிழ் இசைச் சங்கம் ஆகும்.

கோவை நுண் கலைக்கழகம் நடன விழாக்கள் பலவற்றை நடத்திவருகிறது; நாடகங்களையும் ஏற்பாடு செய்துவருகிறது.

இசைப்பள்ளி, இசைக் கல்லூரி ஆகியவற்றைக் கோவையில் அமைக்கவேண்டுமென்ற குறிக்கோளுடன் தொடங்கப்பெற்ற 'புரந்தரதாச சங்கீத வித்யாலயம்' அதன் காப்பாளரான அரியரச்சாரின் மறைவால் ஊக்கம் குன்றி, பெயரளவில் மட்டும் செயல்பட்டு வருகிறது. இரத்தினசபாபதிபுரத்தில் அமைக்கப்பட்ட

இசையரங்கும் கட்டிடங்களும் முற்றுப்பெறுதிருக்கின்றன. ஒரு நடனப்பள்ளி மட்டும் அங்கு நடைபெற்றுவருகிறது. அப்பள்ளியின் ஆசிரியர் இராமசாமியிடம் பரத நாட்டியம் பயின்றவர்களுள் வெள்ளைக்கார அம்மையாரும் ஒருவர் ஆவார்.

தாகூர் அகாடமி என்பது கோவையிலுள்ள மற்றொரு அமைப்பு. இங்கே நீண்டகாலமாகப் பரதநாட்டிய வகுப்புக்கள் நடைபெற்று வருகின்றன.

அண்மைக்காலத்தில் அமைந்த சக்தி நாட்டிய கலா நிலையம் நாட்டிய ஆசிரியர் பழநியப்பன் அளிக்கும் சிறந்த பயிற்சிகளால் பாராட்டுக்குரிய நிலையை அடைந்திருக்கிறது.

## 11. விடுதலைப் போர்

ஆயலவர் ஆட்சியிலிருந்து அரசியல் விடுதலை பெறும் இயக்கத்தில் கோவை மாவட்டத்து மக்கள் சீரிய பங்கு கொண்டுள்ளனர்.

கொங்குநாட்டினர் இன்றும் பாடி மகிழும் நாட்டுப் பாடல்களுள் ஒன்று 'தீரன் சின்னமலைக் கும்மி' என்பது. சின்னமலைக் கவுண்டன் 1756 முதல் 1805 வரை வாழ்ந்தவன்; கவணெறிதல், வாள் வீச்சு, குதிரை யேறுதல் குறி பார்த்துச் சுடுதல், சிலம்பம் வீசுதல் ஆகிய கலைகளில் சிறந்து விளங்கியவன்; கோவை நாட்டின் தலைவனாக இருந்து ஐந்து ஆண்டுகள் தனியாட்சி நடத்தி ஆங்கிலேயரை மும்முறை வென்றவன்; இறுதியில் அவர்களால் தந்திரமாகப் பிடிக்கப்பட்டுச் சங்ககிரிக் கோட்டையில் கொல்லப்பட்டான். இக் கும்மி இவனுடைய புகழ் முரசைப் புலப்படுத்துகிறது. இவன் வாழ்ந்த இடம் ஈரோடு வட்டத்தில் அறச்சலூரிலிருந்து 6 கி. மீ. தொலைவிலும் சென்னிமலைக்கு 10 கி. மீ. தொலைவிலும் உள்ள ஓடாநிலை என்னும் ஊர்; இது, புதைப்பொருள் துறையினர் ஆராய்தற்குரிய இடமாகும்.

திருமூர்த்தி மலைக்கு அருகேயுள்ள தளியில் 18-ஆம் நூற்றூண்டின் இறுதியில் கம்பளத்துப் பாளையப்பட்டுக் காரர்கள் ஆங்கிலேயரை ஆவேசமாக எதிர்த்தனர். தம் ஆற்றலின்மையை உணர்ந்தபோது சரணமடைய மனமின்றி அவர்கள் தம் உற்றார் உறவினர் அனைவருடனும் மலைமீதேறிச் சென்று அங்கு ஓரிடத்தில் தற்கொலை செய்துகொண்டனராம்.

இம்மாவட்டத்துக் காங்கிரசுக் கமிட்டியின் முதல் தலைவராக இருந்தவர் (தமிழ்நாடு காங்கிரசுக் கமிட்டியின் தலைவராக இருந்த) பெரியார் ஈ. வே. இராமசாமி ஆவார்.

இந்திய தேசிய காங்கிரசின் செயலாளராக இம் மாவட்டத்தினராகிய ரா. க. சண்முகம் செட்டியார் இருந்திருக்கிருர். காந்தியடிகளின் கதர் இயக்கத்துக்கு இம் மாவட்டத்தில் பேராதரவு இருந்தது; தமிழ்நாட்டில் கதர் உற்பத்தி, கதர் பிரசார வேலைகளுக்கு இம்மாவட்டத்துத் திருப்பூர்தான் தலைமையிடமாக இருந்து வருகிறது.

இந்திய சட்டசபையின் தலைவராக இருந்தவரும் சர்தார் வல்லபாய்ப் பட்டேலின் அண்ணனுமான வித்தல் பாய் பட்டேலும் இந்திய நாட்டுப் பெருந்தலைவர் வேறு சிலரும் கோவை நகரத்துச் சிறையில் வைக்கப்பட்டிருந்தனர்.

கொடிப் போராட்டம் நிகழ்ந்தபோது திருப்பூர்த் தொண்டர் குமரன் கொடிகாத்து உயிர் நீத்து, தமிழ் நாட்டிலுள்ள எண்ணற்ற மக்களுக்கு நாட்டுணர்ச்சியை ஊட்டினர். சி. பி. சுப்பையா, கே. சுப்ரி, தி. சு. அவினசிலிங்கம், சி. சுப்பிரமணியம் ஆகியோரும் இம்மாவட்டத்தில் நாட்டுணர்ச்சியை ஊட்டியவர்கள் ஆவர்.

1935 அளவில் மகாத்மா காந்தியடிகளின் தமிழ்நாட்டுச் சுற்றுப்பயணத்தை ஏற்பாடு செய்தவர் இம் மாவட்டத்தினராகிய தி. சு. அவினசிலிங்கம். முதல் மூன்று சட்ட மறுப்பு இயக்கங்களிலும் இம் மாவட்டத்தினர் பல நூறு பேர் கலந்துகொண்டனர். தேசிய உணர்ச்சியின் எதிரொலியாக இந்த மாவட்டத்தில் அவ்வப்போது பஞ்சாலைத் தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்தனர். பஞ்சாலைத் தொழிலாளர் பல்லாயிரவரின் ஊர்வலங்கள் கோவை மாவட்டத்துப் பொதுமக்களின் தேசிய ஆர்வத்தைத் தூண்டிவிட்டன.

1942-ஆம் ஆண்டில் 'வெள்ளையனே வெளியேறு' என்ற இயக்கத்தை மகாத்மா காந்தியடிகள் தொடங்கிய

போது இம்மாவட்டத்தில் சூலூர் ஆகாயவிமான நிலையத்தில் தீவைக்கப்பட்டது; சில பகுதிகள் அழிந்தன. அங்கிருந்த 22 மோட்டார் லாரிகள் சேதப்படுத்தப்பட்டன. போத்தனூர்க்கும் சிங்காநல்லூருக்கும் இடையே வந்து கொண்டிருந்த கொச்சி எக்ஸ்பிரஸ் கவிழ்க்கப்பட்டது. பொள்ளாச்சி, சாவடிப்பாளையம் ஆகிய இடங்களிலும் இரயில்களைக் கவிழ்க்க ஏற்பாடுகள் நடைபெற்றன. பிரிட்டிஷ் அரசாங்கத்தார் கோயம்புத்தூர் நகராண்மைக்கழகத்தை ஆறு மாத காலத்திற்குக் கலைத்து வைத்தனர்.

## 12. நீர்ப்பாசனத் திட்டங்கள்

இந்தியா உரிமை பெற்றபிறகு, தமிழ்நாட்டில் மேற்கொள்ளப்பட்ட நீர்ப்பாசனத் திட்டங்களால், வேறு எந்த மாவட்டத்தையும்விட, கோவை மாவட்டம் மிகப் பயனடைந்திருக்கிறது. 1947 முதல் 1961 வரை இத் திட்டங்களுக்காக அரசாங்கத்தார் 60 கோடி ரூபாய் வரை இம்மாவட்டத்தில் செலவிட்டிருக்கின்றனர்.

பாசனத்துக்கும் மின்சாரத்துக்கும் உதவும் நீர் பற்றிய ஆராய்ச்சி நிலையம் (Hydraulic Research Centre) ஒன்றைக் கோயம்புத்தூரில் அமைக்கவேண்டுமென்று இந்திய அரசாங்கத்து நீர்—மின்சாரக் குழு உறுப்பினர் டாக்டர் கே. எல். ராவ் (25—2—61-இல்) கருத்துத் தெரிவித்துள்ளார்.

இம்மாவட்டத்தில் மூன்று திட்டங்கள் குறிப்பிடத் தக்கவை. இப்போது நிறைவேற்றப்பட்டு வரும் பரம்பிக்குளம் திட்டம், தமிழ்நாட்டில் நீர்ப்பாசனத் துறையில் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கும் மிகப் பெரிய திட்டம் ஆகும். அது கேரள மாநிலத்துக்கும் தொடர்புடைய திட்டமாகும். கட்டி முடிக்கப்பட்ட அணைகளுள், அமராவதி என்பது தமிழ்நாட்டிலேயே மிகச் சிறிய அணைகளுள் ஒன்று. கீழ்பவானி அணை, இந்தியாவிலேயே மிகச் சிக்கனமாகக் கட்டிமுடிக்கப் பெற்ற சிறப்பினை உடையது.

கோயம்புத்தூர் வட்டத்தைத் தவிர, இம்மாவட்டத்திலுள்ள எல்லா வட்டங்களும் இந்த அணைகளில் ஏதாவது ஒன்றால் பயனடைந்து வருவதும் சிறப்பாகக் கவனிக்கத்தக்கது.

கீழ் பவானி அணைபற்றிய செய்திகளை இந்நூலின் பிற்பகுதியில் பவானிசாகர் என்ற தலைப்பில் காண்க.

இனி, இந்த அணைகளைப்பற்றிய விவரங்களைத் தெரிவிப்போம்.

## பரம்பிக்குளம்–ஆளியாறு திட்டம்

சுதந்தரம் அடைந்தபிறகு தமிழ்நாட்டில் நிறைவேற்றப்படும் மிக முக்கியமான நீர்ப்பாசனத் திட்டம் இதுவே.

தமிழ்நாட்டில் உற்பத்தியாகி, மேற்கே பாய்ந்து கடலில் வீழுகும் ஆறுகளின் தண்ணீரை, கேரளத்தில் அணை கட்டித் தேக்கிப் பிறகு மலையைக்குடைந்து கிழக்குப் பக்கம் திருப்பிவிட்டுத் தண்ணீரைத் தமிழ்நாட்டுக்கு வர வழிசெய்வதும் மின்சாரத்தை உற்பத்தி செய்வதும் இந்தத் திட்டத்தின் நோக்கங்கள். இதற்கு 40 கோடி ரூபாய்வரை செலவு ஏற்படும். இத்திட்டத்தின் அடிப்படை வேலைகள் 1959-இல் தொடங்கப்பெற்றன. மூன்றும் ஐந்தாண்டுத் திட்ட காலத்தின் இறுதிக்குள், பரம்பிக்குளம் அணைகளும் மின்சார நிலையங்களும் கட்டி முடிக்கப்பெறும். அதனுல் பொள்ளாச்சி, உடுமலைப் பேட்டை, பல்லடம், தாராபுரம் வட்டங்களில் மூன்று லட்சம் ஏக்கர் நிலங்களுக்குப் பாசன வசதி ஏற்பட்டு, ஆண்டுதோறும் ஐந்தரைக் கோடி ரூபாய் மதிப்புள்ள உணவுப் பொருள்களும் பருத்தியும் உற்பத்யாகும். 150 M. W. மின்சாரமும் உற்பத்தி செய்யப்படும். எனவே, கீழ்பவானி அணைக்கட்டைவிடக் கூடுதலான விவசாய வளம், குந்தா நிலையத்தின் உற்பத்திக்குச் சமமான மின்சாரப் பெருக்கம் இவை இரண்டையும் தருவதுதான் பரம்பிக்குளம்–ஆளியாறு திட்டம் என்று சுருங்கச் சொல்லலாம்.

பல ஆறுகளை இணைப்பது இந்தத் திட்டத்தில் ஒரு சிறப்பான பகுதி. கேரள மாநிலத்தின் ஒத்துழைப்பு இருந்தால் இதை இன்னும் விரிவு படுத்தி, டாப்சிலிப்பி லிருந்து தென்காசிவரை ஒவ்வொரு 30 கி. மீ. க்கும் ஓர் அணைக்கட்டும் ஒரு மின்சார நிலையமும் அமைத்து அமெரிக்காவிலுள்ள டென்னசி பள்ளத்தாக்குத் திட்டம் (TVA) போல இங்கும் உருவாக்க இயலும்.

இப்போது நிறைவேற்றப்பட்டுவரும் பரம்பிக்குளம்-ஆளியாறு திட்டத்தில் அடங்கியுள்ள முக்கியமான வேலைகளாவன :

(1) ஆனைமலையில் 5 தேக்கங்களும் சமவெளிப் பகுதியில் 2 தேக்கங்களுமாக மொத்தம் 7 தேக்கங்கள் கட்டுதல்.

(2) 23 கி. மீ. நீளத்துக்கு மலையைக் குடைதல்.

(3) நீராறு, ஆளியாறு இவற்றின்மீது பெரிய பாலங்கள் (Weirs) அமைத்தல்.

(4) 65 கி. மீ. தொலைவுக்கு (டாப்சிலிப்சிலிருந்து திருமூர்த்தி மலைக்கு) மலைச்சரிவுகளினுடேயும்; 205 கி. மீ. க்குச் சமவெளியிலும் கால்வாய்களும் 3200 கி. மீ. க்குக் கால்வாய்ப் பிரிவுகளும் (வாய்க்கால்கள்) வெட்டுதல்.

இந்தத் திட்டத்தின் சிறப்புக்களாவன :

(1) கால்வாய்களுக்கும் அவற்றின் பிரிவுகளுக்கும் 2½ அல்லது 3 அங்குல கனமுள்ள சிமிண்டு கான்கிரீட் போடப்படும்.

(2) மழைத் தண்ணீரையும் தன்னகத்தே தேக்கிக் கொள்ளும் முறையில் ஆங்காங்கே தேக்கங்கள் அமைக்கப்படும்.

(3) இரண்டு ஏக்கர் நிலத்திற்குப் பாய்வதற்கு வேண்டிய ஒரு கிணறு இந்தக் கால்வாய்ப் பகுதியெங்கும் வெட்டப்படும். இவ்வாறு வெட்டப்படும் கிணறுகளின் எண்ணிக்கை 10,000 இருக்கலாம்.

## பரம்பிக்குளம் ஆறு

இந்த ஆறு கோவை மாவட்டத்தில் ஆனைமலையில் யில் தோன்றிப் பிறகு கொச்சி வழியாய்க் கேரளத்தில் பாய்ந்து அரபிக் கடலில் கலந்து விடுவதால் இதன் தண்ணீர் வீணாகிறது. கேரளத்தின் பெரும் பகுதியில் இந்த ஆற்றுக்குச் 'சாலக்குடி ஆறு' என்று பெயர்.

இந்த ஆறு பாயும் பகுதியில் ஆண்டுதோறும் 2540 மி. மீ. மழை பெய்வதால் அந்தத் தண்ணீரும் சேர்ந்து வீணாகிறது.

இந்த ஆற்று நீரில் இத்திட்டத்தால் 1650 கோடி கன அடி தமிழ்நாட்டுக்கு-பொள்ளாச்சி வட்டம் சர்க்கார் பதி வழியாக-திருப்பிவிடப்படும். இதற்காக, கேரள மாநிலத்துக்குள் (தமிழ்நாட்டு எல்லையிலிருந்து மூன்று கி. மீ. தொலைவில்) புலிக்கல்மேடு என்னுமிடத்தில் ஓர் அணை கட்டப்படும்.

## ஆளியாறு

இது பொள்ளாச்சி வட்டத்தில் தோன்றி மேற்கு நோக்கிச் சென்று கேரளத்தில் பாரதப்புழா ஆற்றில் போய்ச் சேர்ந்துவிடுகிறது. இனி, ஆளியாற்றின்மீது அணை கட்டப்படும். இந்தத் தேக்கத்திலிருந்து கேரளத் திலுள்ள சித்தூர்ப் பகுதியில் 20,000 ஏக்கர்ப் பாசனத் துக்கு நீர் வழங்குவதற்குத் தமிழ்நாடு அரசாங்கம்

இசைந்திருக்கிறது; ஆகையால் இந்தத் தேக்கத்திற்கு ஆகும் செலவில் ஒரு பகுதியைக் கேரள அரசாங்கம் ஏற்றுக்கொள்ளும்.

இத்திட்டத்தின்படி, எல்லா ஆறுகளும் ஆளியாற்றின் வாயிலாகவே இணைக்கப்படும். பொள்ளாச்சி வட்டத்தில் தோன்றும் ஆளியாற்று நீர் பொள்ளாச்சி வட்டத்துக்கே பயன்படுத்தப்படும்.

## பாலாறு

இது உடுமலைப்பேட்டை வட்டத்தில் தோன்றுகிறது; ஆளியாற்றின் கிளை ஆறு. இதன் குறுக்கிலும் அணை அமைக்கப்படும்.

## கல்லாறு

இந்த ஆறு 3800 அடி உயரமுள்ள சிங்கோனு என்னும் இடத்தில் தோன்றிச் சிறு தொலைவிலேயே 500 அடி கீழே செங்குத்தாக விழுகிறது. எனவே அங்கு உயரமான அணை கட்டித் தண்ணீரைச் சோலையாற்றுக்குத் திருப்பிவிடத் திட்டமிடப்பட்டிருக்கிறது.

## சோலையாறு

கேரள அரசாங்கம் கட்டிக்கொண்டிருக்கும் சோலையாறு மின்சார நிலையத்துக்குத் தேவைப்படும் நீர்போக இந்த ஆற்றின் எஞ்சிய நீரெல்லாம் தமிழ் நாட்டுக்குத் திருப்பியனுப்பப்படும். இதற்காகக் கடல் மட்டத்திலிருந்து 3.300 அடி உயரத்துக்கும் 3,500 அடி உயரத்துக்கும் இடையே சோலையாற்றின் குறுக்கே ஓர் அணை கட்டப்படும்.

### பிற ஆறுகள்

துணைக்கடவு, பெருவரிப்பள்ளம், சிசலிப்பள்ளம், நல்லாறு, பாலாறு என்னும் சிற்றாறுகள், காட்டாறுகளின் நீரும் பிற ஆறுகளில் இத்திட்டத்தால் கலந்துவிடும்.

| அணைகளின் பெயர் | எதிப்பார்க்கப் படும் செலவு | அணைகளின் உயரம் | தண்ணீர்ப் பரப்பு | கிடைக்கும் நீரின் அளவு |
|---|---|---|---|---|
| | கோடி ரூபாய் | அடி | சதுரமைல் | கோடி கனஅடி |
| பெரியாறு | 4. 00 | 264 | 42. 88 | 450 |
| மேல் சோலை ஆறு | 1. 15 | 154 | 33. 08 | 178 |
| கீழ்ச் சோலை ஆறு | 2. 40 | 262 | 47. 00 | 400 |
| கல்லாறு | 3. 00 | 290 | 29. 00 | 150 |
| கீழ் ஆளியாறு | 2. 34 | 160 | 76. 00 | 459 |
| பரம்பிக்குளம் | 4. 50 | 290 | 91. 20 | 1600 |
| பாலாறு | 1. 47 | 90 | 31. 29 | 184 |
| ஆக மொத்தம் | 18. 86 | | 350. 45 | 3421 |

பரம்பிக்குளம், துணைக்கடவு, திருமூர்த்திமலை ஆகிய மூன்று தேக்கங்களையும் கட்டும் வேலையும், பரம்பிக்குளம் துணைக்கடவு தேக்கங்களை இணைக்கும் சுரங்கவேலையும் 1960 இறுதியில் தொடங்கியுள்ளன. கீழ் ஆளியாறு தேக்க வேலையும் இத்தேக்கத்திலிருந்து தண்ணீர் கொண்டு போவதற்தாகப் பொள்ளாச்சி உப்பாறு வாய்க் கால்கள் வெட்டும் வேலையும் 1961–62 இல் தொடங்கப் படும்.

### மின்சார நிலையங்கள்

சோலையாற்றின் குறுக்கே அணை கட்டப்பட இருக் கும் இடத்துக்கு அருகே இஞ்சிப்பாறைத் தோட்ட மலை

# பரம்பிக்குளம் திட்டம்

தமிழ் நாடு
கேரளம்
சேதுமடை
சர்கார்பதி மின்சார நிலையம்
டாப் சிலிப்
ஆளியாறு தேக்கம்
பாலாறு
உடுமலைப்பேட்டை
பாலாறு தேக்கம்
தேக்கடி அணை
ஸ்டூவர்ட் மலை
திம்மாகடம் தேக்கம்
ராமலைசுழ்மண-மலை
பரம்பிக்குளம் அணை
பரம்பிக்குளம்
சோலை ஆறு
வால்பாறை
சோலை ஆறு மின்சார நிலையம்
கீழ்சோலை ஆறு தேக்கமும் அணையும்
நீராறு தேக்கமும் அணையும்
கேரள இராச்சியம்



இருக்கிறது. இந்த மலையைக் குடைந்து, 2000 அடி உயரமுள்ள டாப்சிலிப் மலை வழியாகச் சுரங்கப் பாதையில் தண்ணீர் வரவழைக்கப்படும். 500 அடி உயரத்தில் செங்குத்தாகப் பரம்பிக்குளம் ஆற்றுத் தண்ணீர் விழுவதால் சர்க்கார்பதிக்கு அருகே மின்சார நிலையம் நிறுவப்படும்.

திருமூர்த்தி மலைக்கு அருகேயும் ஒரு மின்சார நிலையம் கட்டப்படும்.

### முடிவுரை

பரம்பிக்குளம் திட்டத்தால் மேலும் 30,000 டன் அரிசியும் 37,800டன்புஞ்சைத் தானியங்களும் 9,400 டன் நிலக்கடலையும்7, 200 டன் பருத்தியும் விளையுமென்றும் இவற்றின் மதிப்பு ஐந்து கோடி ரூபாயாக இருக்குமென்றும் இதனால் அரசாங்கத்துக்கு ஆண்டுதோறும் நிலவரியில்மேலும் முப்பது இலட்சம் ரூபாய் கிடைக்குமென்றும் கணக்கிடப்பட்டிருக்கிறது.

இத்திட்டம் நிறைவேறுவதற்கு ஆவன செய்த அமைச்சர் சுப்பிரமணியமும் சட்டசபை உறுப்பினர் மகாலிங்கமும் பாராட்டுக்கு உரியவர் ஆவர்.

## அமராவதி அணை

தமிழ்நாட்டிலுள்ள அணைகள் இந்தியநாட்டிலுள்ள பல அணைகளை நோக்க மிகச் சிறியன. அவற்றுள்ளும் சிறியது என்ற சிறப்புக்குரியது அமராவதி அணை.

தாராபுரம், உடுமலைப்பேட்டை வட்டங்கள் பல தலைமுறைகளாகப் பஞ்சத்தில் வருந்தியும் வாடியும் வாழ்வும் பொலிவும் இழந்தும் தவித்திருக்கின்றன. 1939இல் அங்கே கொடிய பஞ்சம் நிலவிற்று. தொடர்ந்து மூன்றுண்டுகள் மழையின்மையால் 20 இலட்சம் ரூபாய்

செலவிட்டு அரசாங்கத்தார் மக்களின் துயரைத் துடைக்கப் பொதுப்பணித்துறையில் பல வேலைகளைத் தொடங்கினர். சிறு அணையேனும் கட்டி, இந்த நிலைக்கு முடிவு காண வேண்டும் என்ற உணர்ச்சி, அப்பஞ்சத்தால் வலுவடைந்தது. மேற்குத்தொடர்ச்சிமலை அடி வாரத்தில் 5000 அடிஉயரத்தில் மூணாறு மலையில் 50முதல் 128அங்குலம் வரைஅமராவதி ஆற்றின்மீது ஓர் அணை கட்டலாம் என்ற கருத்தை 1905-இல் (மேட்டூர் அணைத் திட்டம் வகுத்த) கலனல் எல்லிஸ் என்பார் தெரிவித்திருந்தார். அந்தஅணைக்கு ஆகும்செலவு கூடுதலென்றும், செலவுக்கேற்ற வருவாய் வாராதென்றும் அந்நாளைய அரசாங்கத்தார் கருதி, இந்தத் திட்டத்தை "பழைய தாள் அறைக்கு"1913-இல் மூட்டைகட்டி அனுப்பினர்.

1918இல் மீண்டும் யோசனை செய்து, அணை கட்ட இயலாது என்ற முடிவு 1921இல் அறிவிக்கப்பட்டது.

இந்தியா உரிமை பெற்ற பிறகு, 1947இல் அமராவதி அணை கட்டுவது பற்றிய பேச்சு மறுபடியும் மக்கள் மனத்தில் இருந்தது; அமைச்சர்கள் கருத்தைக் கவர்ந்தது. நிபுணர் பலரின் கருத்துக்களுக்கேற்ப, திட்டத்தில் பல மாறுதல்கள் செய்யப்பட்டு முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் இந்த அணை வேலை சேர்த்துக் கொள்ளப் பட்டது.

1957 நவம்பர் 15இல் அமராவதி அணை கட்டிமுடிக்கப் பெற்றது. அணை அமைந்துள்ள இடம் உடுமலைப் பேட்டையிலிருந்து 16 கி. மீ. தொலைவில் இருக்கிறது: 810 சதுர கி. மீ. பரப்பில் பெய்யும் மழை இந்த அணைக் கட்டுக்கு வரும்படி அணை அமைக்கப்பட்டிருக்கிறது. நீர்த்தேக்கத்தின் பரப்பு 2100 ஏக்கர். பயனடையும் நிலங்களின் அளவு 50,000 ஏக்கர். அணை கட்ட ஏற்பட்ட

செலவு மூன்று கோடி; அதன் உயரம் 34 மீட்டர். இங்கிருந்து தாராபுரம் வரை அமராவதிக் கால்வாய் செல்லுகிறது.

1221 ஏக்கர்ப்பரப்பில் கரும்பு விளைந்து, அமராவதி சர்க்கரை ஆலை ஏற்பட்டிருப்பதற்கு இந்த அணையே அடிப்படைக் காரணமாகும்.

இங்கேயுள்ள மீன் பண்ணையும் சிறு பூங்காவும் 100 மீட்டர் தொலைவில் பரம்பிக்குளம் அணை உருவாகிவரும் இடமும் காணத்தக்கன. அமராவதி அணையருகே கமலா சர்க்கரை ஆலை உளது.

## 13. வேளாண்மைத்துறை ஆராய்ச்சி

முதலில் விவசாயப் பண்ணையாகவும் பிறகு விவசாயப் பள்ளிக்கூடமாகவும் சைதாப்பேட்டையில் சிறு அளவில் தொடங்கப்பெற்ற நிலையங்கள் பெருவளர்ச்சியடைந்து கோயம்புத்தூருக்கு மாற்றப்பட்டு 1907 முதல் ஆராய்ச்சித் துறையிலும் அக்கறை செலுத்தி வருகின்றன. உலகப் போர்கள் இரண்டின் விளைவாக. உணவுப் பற்றுக்குறை ஏற்பட்டு உணவு உற்பத்திப் பெருக்கத்துக்கு உதவும் வகையில் ஆராய்ச்சிவேலைகள் கோயம்புத்தூர் வேளாண்மைக் கல்லூரியில் நடைபெற்றுவருகின்றன.

17 வயதுக்குமேல் 25 வயதுக்குட்பட்ட உழவர்களுக்கான குறுகிய காலப்பயிற்சி வகுப்புக்கள் 1953 முதல் நடத்தப்படுகின்றன.

ஆராய்ச்சித்துறையின் பல பகுதிகளையும் பற்றி, இக் கட்டுரையில் சுருங்கக் கூறுவோம்.

### வேளாண்மைப்பகுதி

இப்பகுதியின் மத்திய உணவுப்பண்ணை 400 ஏக்கர் பரப்புள்ளது. ஒரே நிலத்தில் வேறுபட்ட புஞ்சைத் தானியங்களைப் பசுந்தழைகள் போட்டும் போடாமலும் மாறிமாறிப் பயிரிடுவதைப்பற்றி ஆராய்ச்சிகள் நடைபெறுகின்றன. மழையின் அளவிலும் தன்மையிலும் ஏற்படும் மாறுதல்கள் பயிர்த்தொழிலை எவ்வாறு பாதிக்கின்றன என்பதை இங்குள்ளவர்கள் ஊன்றி ஆராய்ந்து, புயற்காற்றாலும் வறட்சியாலும் பயிர்களுக்கு ஏற்படகூடியக் நோய்களைப்பற்றி உழவர்களுக்கு முன்கூட்டி அறிவிக்கிறார்கள். செயற்கை முறையில் மழையை வரவழைக்கும் முயற்சியும் தொடங்கியிருக்கிறது.

### தாவர இயல் பகுதி

*இங்கே தாவரத் தோட்டமும், பல்லாண்டுகளாக அரிதின் முயன்று சேகரிக்கப்பெற்றுள்ள செடிகொடிகளின் காட்சிக்கூடமும் சிறப்பாக அமைந்து இந்த ஆராய்ச்சிக்கூடத்துக்கு அழியாப்புகழ் தருகின்றன. கவர்ச்சியான தோற்றத்தைத்தரக்கூடிய அழகுச் செடிகளையும் சமநிலைத்தரையில் பயிரிடக்கூடிய நறுமணப் பொருள்களையும் விளைவித்தல் போன்ற ஆராய்ச்சிகளும் இங்குள்ள தோட்டத்தில் நடைபெறுகின்றன. புல், வாழை ஆகியவற்றில் பலவகைகளைப்பற்றி இந்த நிலையத்திலிருந்து ஆராய்ச்சிக்கருத்துக்கள் வெளிவந்தன.*

### உருளைக்கிழங்கு ஆராய்ச்சி

*1942-இல் உலகப்போர் ஆசியநாடுகளுக்குப் பரவிய போது, நீலகிரி மாவட்டத்து உருளைக்கிழங்கை மேட்டுப் பாளையத்திலிருந்து 2500 கி. மீ. தொலைவுவரை இரயிலில் கொண்டுபோக நேர்ந்தது. அதனுல் அவை அழுகிக் கெட்டன. அதைத்தவிர்ப்பதற்கான ஆராய்ச்சிகள் இப் பகுதியில் மேற்கொள்ளப்பட்டன.*

### இரசாயனப் பகுதி

*இங்கே தமிழ்நாட்டின் பல பகுதிகளிலுள்ள மண்வளத்தைப்பற்றி ஆராய்ச்சிகள் செய்யப்படுகின்றன. இந்த நிலையத்தார் போய்ப் பார்வையிட்ட பிறகே, அணைகள் கட்டுவதற்குரிய இடங்கள் உறுதி செய்யப் படுகின்றன.*

### அரிசி ஆராய்ச்சிப் பகுதி

*தமிழ்நாட்டில் 60 லட்சம் ஏக்கர்ப் பரப்பில் நெல் பயிரிடப்படுவதால் 2300 வகையான அரிசிகளை இங்கு வரவழைத்துப் புதிய நெல்விதைகளை உண்டாக்கி வரு*

கின்றனர். ஓர் ஏக்கரில் உற்பத்தியாகும் அரிசியின் அளவைக் கூடுதலாக்க இந்தப் புதிய நெல்விதைகள் துணையாக உள்ளன.

### புன்செய்த் தானியங்கள்

சோளம், கம்பு, தினை, வரகு, குதிரைவாலி போன்றவற்றை நீர்வளம் குறைந்த இடங்களில் பயிரிடுவதுபற்றி இங்கு ஆராயப்படுகிறது.

### பருத்தி

இந்தோசினாவிலுள்ள கம்போடியாவிலிருந்து ஒரு வகைப் பருத்தியை 1920இல் ஒரு வெள்ளைக்காரர் விருது நகரில் பயிரிட்டுப்பார்த்தார். அதை அடிப்படையாக வைத்து 1923இல் கோயம்புத்தூரில் இந்த ஆராய்ச்சி நிலையத்தில் கம்போடியாப் பருத்தி பெரிய அளவில் பயிரிடப்பட்டது. கோயில்பட்டி, ஸ்ரீவில்லிபுத்தூர், பெரியகுளம், பாலூர், பவானிசாகர், திருச்செங்கோடு, அவினாசி ஆகிய இடங்களிலும் பருத்தி ஆராய்ச்சிக்கெனச் சிறு நிலையங்கள் தொடங்கப்பட்டன. தமிழ்நாட்டுக்கேற்ற "எம். சி. யூ. 1" என்ற பருத்திவகை இங்கே 1950இல் கண்டுபிடிக்கப்பட்டது. இப்போது இராசபாளையம் பருத்தி என்று சொல்லப்படுவது இதுவே. இதைத் தவிர வேறு பல வகையான பருத்திகளையும் இந்த நிலையத்தில் கண்டுபிடித்துத் தஞ்சை மாவட்டத்திலும் கோயில்பட்டியிலும் பரப்பியுள்ளனர்.

### எள் விதை

கடலை எள்ளைப்பற்றி ஆராய்ச்சிசெய்யத் திண்டிவனத்திலும் பொள்ளாச்சியிலும் சிறு நிலையங்கள் அமைத்து அங்கே சேகரிக்கப்படும் விவரங்களின் அடிப்படையில் கோயம்புத்தூரில் முடிவுகள் வெளியிடப்படுகின்றன.

### பயிர் நோய்கள்

புதுமுறையான விவசாயக்கருவிகள் அமைப்பது பற்றிச் சொல்லிக்கொடுக்கும் பகுதியும் இந்த விவசாயக் கல்லூரியில் இருக்கிறது. பழத்தோட்டம், பால் பண்ணை இயந்திரக் கலப்பைகளைச் செப்பனிடுவது பற்றிய பகுதி ஆகியனவும் இங்கே காணத்தக்கன.

கண்ணுக்குத் தெரியாதவாறு சிறு அளவினதாக உள்ள பூச்சிகளையும் அவற்றால் நேரும் நோய்களையும் பற்றி இந்நிலையத்தார் விவசாயிகளுக்கு அறிவித்து வருகின்றனர்.

### காட்சிக்கூடம்

பூச்சிகளைத்தின்னும் செடிகள், செடிகளைத் தின்னும் பூச்சிகள், தென்னந்தோப்பில் ஓட்டைபோட்டுக் குடிக்கும் மர நாய், இரு தலைகளுள்ள கழுதைக்குட்டி, நான்கு கால்களுள்ள கோழிக்குஞ்சு, பல நாடுகளில் விளையும் சர்க்கரைவள்ளிக்கிழங்கு வகைகள், பல வகையான விதைகள், கற்கள், உரங்கள் யாவும் விவசாயப் பொருட்காட்சிக்கூடத்தில் வைக்கப்பட்டிருக்கின்றன.

"மெட்ராஸ் அக்ரிகல்சரல் ஜர்னல்" என்ற பெயரில் விவசாய ஆராய்ச்சிக் குறிப்புகள் அடங்கிய அரிய இதழ் இங்கிருந்து வெளிவருகிறது.

உணவுப்பொருள்களின்மீது -ரேடியோ ஐசோடோப்புகளின் விளைவுகளைப்பற்றி இந்திய வேளாண்மை ஆராய்ச்சிக் குழுவும் மாநில அரசாங்கமும் சேர்ந்து கூட்டாக நடத்தும் ஆராய்ச்சி கோயம்புத்தூரில் நடைபெற்றுவருகிறது.

## 14. காங்கேயம் மாடுகள்

மாட்டுவகைகளில் தனி இனமாகச் சிறந்த பெயர் பெற்று, இந்தியாவெங்கும் புகழ் நாட்டியிருப்பவை காங்கேயம் மாடுகள். இவை கோவை மாவட்டத்தைச் சேர்ந்தவை. பழையகோட்டைப் பட்டக்காரரான காலஞ்சென்ற ராவ்பகதூர் நல்லதம்பி சர்க்கரை மன்ருடியார் என்னும் தனி ஒருவரின் தளரா முயற்சியால், இந்த மாடுகள் பேணப்பட்டுள்ளன.

### பட்டக்காரர்கள்

பட்டக்காரர் குடும்பம் பத்தாம் நூற்றுண்டில் தோன்றியது என்பர். பாண்டிய அரசர்கட்கு அரிய முறையில் அவ்வப்போது உதவிவந்ததால், பட்டக்காரர் என்னும் பரம்பரைப்பட்டம் இவர்களுக்கு வழங்கப் பெற்றதாம். கொங்கு வேளாளரிடையே ஏற்படும் சமூக சமயத் தகராறுகளைத் தீர்ப்பதற்குப் பட்டக்காரர் களுக்குப் பாண்டிய மன்னர்கள் உரிமையும் அதிகாரமும் வழங்கினர். இதனலேயே பட்டக்காரர் பெய்ருடன் "மன்ருடியார்" என்ற சிறப்புப் பெயரும் ஒன்றிவிட்டது. மன்று என்பது நடனமாடுமிடம்: விவாத மேடை என்ற பொருளும் இச்சொல்லுக்கு உண்டு. எனவே மன்று, பொது இடத்தைக் குறிக்கும். சேக்கிழார், சிவ பெருமானை "மன்ருடி" என்று குறிப்பிட்டுள்ளார். அறங் கூறு அவையில், பஞ்சாயத்தாராகப் பட்டக்காரர் வீற்றிருப்பதால் அவர் மன்ருடி என்றழைக்கப்படுகிருர்.

இப்போது பட்டக்காரராக இருப்பவர் 35-ஆவது பட்டக்காரர். இவர் பெயர் நல்லசேனபதி சர்க்கரை மன்ருடியார். இவருடைய பாட்டனர் காலத்திலிருந்து இக்குடும்பத்தார் பயிர்த்தொழிலையும் சாதிமாடுகள்

வளர்ப்பதையும் தங்களுடைய சிறந்த தொழில்களாகக் கவனித்துவந்திருக்கின்றனர். நல்லதம்பி சர்க்கரை மன்ருடியார் (1886–1945) ஐம்பதாண்டுக்காலம் இடைவிடாது பாடுபட்டுக் காங்கேயம் சாதி மாடு என்ற புதுவகை இனத்தை உருவாக்கி, உழவுத்தொழிலின் வரலாற்றில் உயரிடம் பெற்றிருக்கிருர்.

## காங்கேயம்

காங்கேயம் என்பது கோயம்புத்தூர் மாவட்டத்தில் தாராபுரம் வட்டத்திலுள்ள ஒரு பகுதியின் பெயர். காங்கேயம் மாடுகளைத் தாராபுரம் உடுமலைப்பேட்டை பல்லடம் பொள்ளச்சி ஈரோடு வட்டங்களில் காணலாம். கலப்பில்லாத தூய இனமாக, காங்கேயம் மாடுகளைப் பெரிய அளவில் இப்போது காங்கேயம் வட்டாரத்திலேயே காணலாம்.

கோயம்புத்தூர் மாவட்டத்தில் — குறிப்பாகக் காங்கேயம் பகுதியில்–மழைமிகக்குறைவு. நீர்ப்பாசன வசதி என்பதும் கடந்த சில ஆண்டுகளுக்குமுன்வரை காங்கேயம் வாழ்நர் காணுத ஒரு புதுமையாய்க் கனவாய் இருந்தது. வேளாண்மை செய்வது என்பது இப்பகுதியில் ஒரு கடுமையான செயலாக இருந்து வந்தது. கிணறுகளிலிருந்து இறைத்தால்தான் தண்ணீரைக் காண இயலும். 50 அடி ஆழம் தோண்டினல் சில சமயம் நீர் ஊறும். சில இடங்களில் 200 அடி தோண்டுவதும் உண்டு. ஊறிய நீரை இறைத்து, வயல்களுக்குப் பாய்ச்சுவதும் மிகக்கடினமான வேலையே. இவற்றுக்காக, வலுவான மாடுகள் வேண்டியதிருக்கிறது. எனவே, காங்கேயம் மாடுகள் இப்பகுதியின் வேளாண்மைக்கு இன்றியமையாது தேவைப்படுகின்றன. பசுக்களைப் பற்றிக் காங்கேயம் பகுதியில் ஒருவரும் மிகுதியாகச் சிந்திக்கவில்லை.

### மாடுகளின் தோற்றம்

காங்கேயம் மாடுகள் நல்ல உடற்கட்டு உடையவை. காண்பதற்குக் கவர்ச்சியான தோற்றம் தருபவை. காளைமாட்டின் சராசரி எடை 1,150 பவுண்டு அல்லது 510 கிலோகிராம். பசுமாட்டின் சராசரி எடை 750 பவுண்டு அல்லது 340 கிலோகிராம். ஓர் ஈற்றில் மட்டும் 300 நாட்களில் 1,000 பவுண்டு அல்லது 455 கிலோகிராம் பால் கறக்க இயலும். சில பசுக்கள் ஓர் ஈற்றுக்கு 5,000 பவுண்டு வரை பால் கொடுக்கின்றன. கன்று பிறக்கும் போதே அதன் எடை 44 பவுண்டு (20 கிலோகிராம்) இருக்கிறது.

பல மாதங்களுக்கு மேய்ச்சல் நிலத்தில் அல்லும் பகலும் கிடப்பதால் மழையும் வெயிலும் குளிரும் காங்கேயம் மாடுகளுக்கு ஒத்துப்போகின்றன.

### ஆராய்ச்சிகள்

பழைய கோட்டைப் பட்டக்காரரிடம் 1924/25–இல் பெற்ற சில மாடுகள் சேலம் மாவட்டத்து ஓசூரிலுள்ள அரசாங்கக் கால்நடைப் பண்ணையில் வளர்க்கப்பட்டு வந்தன. பிற சாதி மாடுகளுடன் கலக்காமல், அவற்றைத் தனி இனமாக வைத்து இனவிருத்தி செய்யப் பட்டது. இந்த மாடுகள் தமிழ் நாட்டிலுள்ள பல இடங்களுக்கு 1930 முதல் அரசாங்கத்தாரால் ஓசூரிலிருந்து வழங்கப் பெற்றன.

காங்கேயம் பசுக்களை தனித்த இனமாக வளர்ப்பது பற்றி 1942 ஜூலை முதல் 1959 ஜூலைவரை பழைய கோட்டைப் பண்ணையில் ஆராய்ச்சிகள் நடைபெற்றன. இந்த ஆராய்ச்சி அலுவல்கள் மாநில அரசாங்கத்தாலும் இந்திய வேளாண்மை ஆராய்ச்சிக் குழுவாலும் கூட்டாக மேற்கொள்ளப்பெற்றன. குறிப்பிட்ட சில மாடுகளுக்கு

உணவைக் கூடுதலாக ஊட்டியும் வேறு பல சோதனைகளைச் செய்தும் இவற்றின் தரம் உயர்த்தப்பட்டிருக்கிறது. இந்தச் சோதனைகளுக்காக அரசாங்கத்தார் ஆண்டுதோறும் 15,000 ரூபாய் செலவு செய்தனர்.

## பழையகோட்டைப் பண்ணை

தமிழ் நாட்டில் மிகுதியாக நிலம் வைத்திருப்பவர்களில் பழையகோட்டைப் பட்டக்காரர் ஒருவர் ஆவார். இவர் தம் நிலங்களில் பருத்தி, நெல், சோளம், மிளகாய், கரும்பு ஆகியவற்றைப் பயிரிடுகிறார்.

இவருடைய பண்ணை தாராபுரம் வட்டத்தில் புதூர்க் கிராமத்தில் உள்ளது. ஈரோடு இரயில் நிலையத்திலிருந்து இந்த இடம் 21 மைல் (34 கி. மீ.) தொலைவில் இருக்கிறது. அஞ்சல் நிலையத்தின் பெயர் பழையகோட்டை. காங்கேயம் என்பது பண்ணையிலிருந்து 10 மைல் (16 கி. மீ.) தொலைவிலுள்ள ஓர் ஊரின் பெயராகும். பண்ணை இருக்குமிடம் கடல் மட்டத்துக்கு மேல் 180 மீட்டர் உயரமானது. சித்திரை வைகாசி மாதங்களில் அங்கு 40° செண்டிகிரேடு வெப்பம்கூட இருக்கும்.

பழையகோட்டைப் பட்டக்காரருக்கு 15,000 ஏக்கர் நிலம் உண்டு. இதில் பாதி, பண்ணைக்காக ஒதுக்கப்பட்டிருக்கிறது. மேய்ச்சல் தரையின் பரப்பு 5,000 ஏக்கர் ஆகும். கால் நடைகளுக்கு உணவாகப் பயன்படும் பயிர்களை 2,500 ஏக்கர்ப் பரப்பில் பயிரிடுகின்றனர். மாடுகள் மேய்வதற்காக ஒதுக்கப்பெற்ற 5,000 ஏக்கரில் முள்ளுக்கிளுவை வேலிபோட்டு அது பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு பகுதியிலும் மாடுகள் இறங்கித் தண்ணீர் குடிக்க வசதியாகச் சரிவான அமைப்புடன் கூடிய கிணறுகள் வெட்டப்பட்டுள்ளன. பல பகுதிகளில், கொழுக்கட்டைப்புல் பெரிய அளவில்

வளருகிறது. மழை குறைவாக இருப்பதாலேயே, இவ் வகைப் புல் செழித்து வளருவதாகச் சொல்லுகிருர்கள். இது சத்துடைய புல். இந்தப் பகுதியின் மண்ணில் சுண்ணும்புச் சத்து இருப்பதால் இந்தப் புல்லைத் தின் னும் கால்நடைகள் தங்களுடைய எலும்பு வளர்ச்சிக்கு வேண்டிய சுண்ணும்புச் சத்தை எளிதில் பெறுகின்றன.

கொழுக்கட்டைப் புல்லைத்தவிர, இப்பண்ணையில் வெண்ணும்புல், ஒட்டம்புல், குறுத்துப்புல், சோளப்புல் ஆகியவையும் பயிரிடப்படுகின்றன. இப் புல் வகை களைக் காங்கேயம் மாடுகள் சுவைத்து உண்டு, உணவு ஊட்டமும் கால்சியமும் பெறுகின்றன. நரிப்பயத்தங் கொடி, செப்பு நெரிஞ்சி, சவனிக்கொடி, பூனைப் புதுக் கொடி ஆகிய செடி கொடிகளும் இப்பண்ணையில் மிகுதி யாக வளருகின்றன. இவற்றில் புரோட்டீன் சத்து நிறைய இருக்கிறதாம்.

பழைய கோட்டைப்பண்ணையில் சிறந்த காளைமாடு களைத் தேர்ந்தெடுத்து அவற்றை இன்னும் நன்ருகப் பேணி வளர்க்கிருர்கள். அவற்றை நாள்தோறும் நன்கு குளிப்பாட்டுகிருர்கள்.

மழைக்காலம் தொடங்கியதும், மாடுகள் வயது வாரியாகப் பிரிக்கப்படுகின்றன. ஒவ்வொரு பிரிவிலும் காளைகள் தனியாகவும் பசுக்கள் தனியாகவும் இரவு பகலாகப் பல மாதங்களுக்கு வைக்கப்படுகின்றன. குறித்த நேரத்தில் இவற்றைச் சரிபார்த்து, தேவை யாயின் குறிப்பிட்ட சில மாடுகளைத்தனியாகக் கவனிக்கின்றனர். தேர்வுக்கு அனுப்பும் மாணவரில், ஆற்றல் குறைந்தவர்களைக் கத்தோலிக்கப் பள்ளிக் கூடங்களில் கவனிப்பதுபோலப் பழைய கோட்டைப் பண்ணையில் விற்பனைக்கு அனுப்பும் மாடுகளைக் கவனிக்கிருர்கள் என்று சொல்லுவது பொருந்தும்.

கடலைப் பிண்ணாக்கு, அரிசித் தவிடு, பருத்தி விதை, தண்ணீரில் ஊறப்போட்ட சோளம், கம்பு ஆகிய உணவை இந்த மாடுகளுக்கு நாள்தோறும் இருமுறை கொடுக்கிறார்கள்.

உழுவதற்கும் வண்டியில் பூட்டவும் கவலை இறைக்கவும்தான், பழையகோட்டைப் பட்டக்காரர் மாடுகளை வளர்த்து வந்தார். 1941 முதல் கால் நடை வளர்ச்சியில் அரசாங்கம் ஊக்கம் காட்டி வருவதால், இன வளர்ச்சிக்காக மாடுகளை வளர்ப்பது, விற்பது ஆகிய துறைகளிலும் பட்டக்காரர் ஈடுபட்டிருக்கிறார். ஏப்ரல் மாதம் நடைபெறும் கண்ணபுரம் மாட்டுச் சந்தைக்கும், ஜூன் மாதம் நடைபெறும் திருப்பூர் மாட்டுச் சந்தைக்கும் பட்டக்காரர் தம் மாடுகளை அனுப்பி அங்கு அவற்றை விற்பனை செய்கிறார்.

இச் சந்தைகளில் இன்ன இன்ன மாடுகளை விற்பது என்று முன் கூட்டியே முடிவு செய்யப்படுகிறது. பிப்ரவரி மாதத்திலேயே மாடுகள் தேர்ந்தெடுக்கப்படுகின்றன. "பொறுக்குத் தேர்வு" போன்ற இம்முறையில் வெற்றி பெற்ற மாடுகளுக்கு உளுந்து கொள்ளு 'பெனுகிரிக்' ஆகியவற்றைக் கலந்து ஊறவைத்துக் கொடுப்பார்கள். வெல்லக் கட்டியுடன் எள்ளுத்தூளைச் சேர்த்துக் கொடுப்பதும் உண்டு.

பட்டக்காரரின் மாடுகள் சந்தையில் பொது மக்களுக்கு விற்கப்படுவதுபோல, அரசாங்கத்தாருக்குப் பண்ணையிலிருந்து நேரே விற்பனை செய்யப்படுகின்றன. இந்தியாவெங்கும் நடைபெறும் கால்நடைக் காட்சிகளில் இப்பண்ணை மாடுகள் பல பரிசுகளைப் பெற்றிருக்கின்றன.

மாடுகளைத் தவிர குதிரைகளும் இப்பண்ணையில் வளர்க்கப்படுகின்றன. இந்தியாவிலேயே மிகப் பெரிய

கால்நடைப்பண்ணை இதுதான் என்று "காளைமாட்டு வைஸ்ராய்" லின்லித்கோ பிரபு ஒரு முறை கூறியுள்ளார். பழையகோட்டைப் பண்ணையை ஒரு திரைப்படமாக எடுத்து அமெரிக்க ஆலிவுட் நடிகர்கள் சில படங்களில் இதைச் சேர்த்துக்காட்டியிருக்கின்றனர். வேளாண்மைத் துறையில் ஆர்வமுள்ள அனைவரும்—நம் நாட்டினரும் வெளி நாட்டினரும்—இப்பண்ணையைக் காணவந்த வண்ணமாக உள்ளனர்.

## பிற பண்ணைகள்

பழையகோட்டை தவிர, காங்கேயம் வட்டாரத்தி லுள்ள வேறு பல இடங்களிலும் காங்கேயம் மாடுகள் வளர்க்கப்படுகின்றன. கிராமக் கேந்திரக் கால்நடைத் திட்டத்தின் வாயிலாக மாநில அரசாங்கத்தார் காங் கேயம் இன மாடுகள் தமிழ்நாடெங்கும் பரவ ஆவன செய்துள்ளனர்.

## குதிரைகள்

பவானி வட்டத்துப் பருகூர்ப் பகுதியில் குதிரைகள் மிகுதி; அந்தியூர்த் திருவிழாவில் குதிரை வியாபாரம் நடைபெறுகிறது.

# 15. பஞ்சாலைத் தொழில்

'பஞ்சின் பெருமைதனைப் பாரகமே நின்வாயால்
எஞ்சாமல் என்றென்றும் ஏத்து'

இந்தியாவில் இத் தொழில் சிறந்து விளங்கும் நகரங்கள் பம்பாய், ஆமதாபாத், கோயம்புத்தூர், மதுரை ஆகிய நான்கும் குறிப்பிடத் தகுந்தன.

இந்தியாவில் முதல் பஞ்சாலை 1818-இல் தொடங்கிய போதிலும் அதற்கு 70 ஆண்டுகளுக்குப் பின்னரே இத் தொழில் கோவையில் ஏற்பட்டது. ஆயினும் இரண்டாம் உலகப்போர் ஏற்பட்டதால் 1939-க்குப் பிறகுதான் கோயம்புத்தூர் மாவட்டம் ஆலைத்தொழிலில் பெரு முன்னேற்றம் அடைந்திருக்கிறது.

இம்மாவட்டத்தில் 1888-இல் முதல் பஞ்சாலையைத் தொடங்கிய பெருமை ஸ்டேன்ஸ் என்ற வெள்ளைக்காரருக்கும், 1906-இல் இரண்டாவது பஞ்சாலையைத் தொடங்கிய பெருமை தேவகோட்டை சோமசுந்தரம் செட்டியார் என்ற தமிழருக்கும் உரியன.

## துணைத்தொழில்கள்

பம்பாயிலுள்ள ஆலைகள் மெல்லிய வேட்டிகளை உற்பத்தி செய்கின்றன. ஆமதாபாத் ஆலைகள் மிக மென்மையான துணிகளைச் செய்து அவற்றுக்குச் சாயந் தீட்டியும் பூ வேலை அச்சிட்டும் சிறந்து விளங்குகின்றன. தமிழ் நாடெங்குமுள்ள தறிகாரர்களுக்கும், பனியன் முதலிய உடைகளைச் செய்து விற்பவர்க்கும் நூல் வழங்குவதே கோவை ஆலைகளின் முக்கியமான நோக்கமாக இருந்து வருகிறது. இம் மாவட்டத்தில் மட்டும்

ஏறத்தாழ மூன்று லட்சம் தறிகள் உள்ளன. சமுக்காள நெசவுக்குப் பவானியும், பனியன் தொழிலுக்குத் திருப்பூரும், கைத்தறித் துணிகளுக்கு ஈரோடும் இணையற்று விளங்குகின்றன. இம்மூன்றும் பஞ்சாலைகளை நம்பி வாழும் தொழில்களாக இருக்கின்றன.

கோவை மாவட்டத்தில் ஏறத்தாழ 85 நூல் ஆலைகள் உள்ளன. இவற்றுள் 60 ஆலைகள் கோயம்புத்தூர் நகரிலும் அதன் சுற்றுப்புறங்களான சிங்காநல்லூர், பூளைமேடு, கணபதி, உப்பிலிப்பாளையம் முதலிய பகுதிகளிலும் உள்ளன. இந்த ஆலைகளின் பட்டியலை (கிடைத்த அளவு விவரங்களுடன்) இக்கட்டுரையின் இணைப்பாகத் தந்திருக்கிறோம். தமிழ் நாட்டிலுள்ள ஆலைகளில், கதிர் அளவில் மூன்றில் இரண்டு பங்கும், விசைத்தறி எண்ணிக்கையில் பாதியும் இம்மாவட்டத்திலுள்ளன.

சில ஆலைகள் அண்மைக்காலத்தில் திருநெல்வேலி, மதுரை மாவட்டங்களில் கிளை ஆலைகளைத் தொடங்கியுள்ளன. மேலும் கதிர்கள் பொருத்துவதற்கு இந்திய அரசாங்கத்து ஆலை ஆணையரிடமிருந்து இசைவு பெற்று, சில ஆலைகள் தங்கள் தொழிலை விரிவுபடுத்தியவண்ணமாக இருக்கின்றன. கேரளத்திலுள்ள பல ஆலைகளையும் கோவை ஆலை முதலாளிகள் நடத்தி வருகின்றனர்.

### வரலாறு

ஆலைகள் தோன்றிய வரலாற்றைத் தெரிந்து கொள்வது நலம் பயக்கும். பருத்தி அறைக்கும் இயந்திரங்கள் ஏற்படுமுன், மாட்டைச் செக்கில் பூட்டிப் பருத்தி அறைக்கப்பட்டது. அத்தகைய தொழிற்சாலைகளை மூவாயிரம் ரூபாய் மூலதனத்துடன் தொடங்கியவர்கள் பலர் நல்ல லாபம் அடைந்தனர். 1914–இல் முதல் உலகப்போர் ஏற்பட்டபோது, பஞ்சு வாங்குவது விற்பனை செய்வது. ஆகியவற்றில் சட்டா வியாபாரம் (Forward Trading)

செய்து, பலர் பெருஞ் செல்வராயினர். இவ்வாறு பொருளீட்டியவர்களும் அவர்களுடைய வழித்தோன்றல்களும் இன்றைய கோவையின் ஆலை அரசர்களில் பலர் ஆவர். இந்நாளில் ஆலைகள் பல இருப்பினும் இவை சில குடும்பங்களாலும் சில குழுக்களாலும் நடத்தப்படுகின்றன. ஒவ்வொரு குழுவும் 3, 4 ஆலைகளை நடத்தி வருகிறது. இரண்டாம் உலகப் போர்க்காலத்திலும் பின்னரும் ஏற்பட்ட வருவாயிலிருந்து, பல ஆலைகள் கிளை ஆலைகளை 'ஏ' மில், 'பி' மில், 'சூபிலி' மில் என்ற பெயர்களில் தொடங்கியுள்ளன. கோவையிலுள்ள முக்கியமான ஆலைக்குழுக்கள் ஸ்டேன்ஸ் குரூப், காளீசுவரர் மில்ஸ் சோமசுந்தரம் செட்டியார், ஜி. குப்புசாமி நாயுடு, பி. ரங்கசாமி நாயுடு, பி. எஸ். ஜி. கங்கா நாயுடு, ரத்தின சபாபதி முதலியார், ஆர். கே. சண்முகம் செட்டியார், வேங்கடசாமி நாயுடு, கருமுத்து தியாகராசச் செட்டியார் ஆகியோரின் குழுக்கள் ஆகும்.

## உற்பத்தி

2 ஆம் எண் முதல் 100 ஆம் எண் வரை பலவகையான நூல்கள் குறிப்பாக உயர்ந்த ரக 50, 60, 80, 100 ஆம் எண் ஒற்றை இரட்டை முறுக்கு நூல்கள், இந்த மாவட்ட ஆலைகளில் நூற்கப்படுகின்றன. சில ஆலைகளில் Double cone mercerised நூல்களும் நூற்கப்படுகின்றன. ஓரிரு ஆலைகளில் குவாலியரிலிருந்து செயற்கைப் பஞ்சு வரவழைத்து அதைச் செயற்கை(Staple Fibre) நூலாக உற்பத்தி செய்கின்றனர். இவ்வகை நூல்களைக் கொண்டு செயற்கைப் பட்டு ஆடைகள் செய்யப்படுகின்றன. இதில் ஒற்றை நூல், மடிப்பு நூல் என்று இரு வகை நூல்கள் உள்ளன.

10 ஆலைகள் காடா, மல், லாங்கிளாத், வேட்டி, டர்க்கி டவல், டெர்ரி டவல் என்பவற்றை உற்பத்தி

செய்கின்றன. அவை அதற்கெனத் தனியே தறிகள் வைத்துள்ளன.

காடாத் துணி உற்பத்தி செய்யும் சில ஆலைகள் மேட்டுப்பாளையத்தில் சலவை செய்யும் ஆலைகளை (Bleaching Mills) அமைத்துள்ளன.

### ஆலைகளைச் சார்ந்த தொழில்கள்

பஞ்சாலைத் தொழிலையொட்டிப் பருத்தி அறைக்கும் தொழிற்சாலை, பருத்தி—பஞ்சு பேல் போடும் தொழிற் சாலை, விசைத்தறி ஆலைகள்(Ginning factory, Cotton press, Powerloom factory) ஆகியவற்றைக் கோவை மாவட்டத் தில் நூற்றுக்கணக்கில் காணலாம். இவற்றுள் பல, ஆலை முதலாளிகளுக்கே உரிமையாக உள்ளன.

எகிப்துப் பஞ்சு முதல் ராஜபாளையம் பஞ்சுவரை விற்கும் வெளிநாட்டு உள்நாட்டுப் பஞ்சு வணிகர், கழிவுப் பஞ்சு விற்கும் வியாபாரிகள், மொத்தமாகவும் சில்லறையாகவும் நூல் விற்கும் வியாபாரிகள், ஆலைத் துணிகள் விற்பனையில் ஈடுபட்டிருப்போர்—இவ்வாறு எத்துணையோ பேர் பஞ்சாலைகளை நம்பிக் கோவையில் வாழ்கின்றனர்.

பஞ்சாலை இயந்திரங்களை உற்பத்தி செய்பவர்களின் பிரதிநிதிகளின் அலுவலகங்களும், பாப்பின் (Bobbin) போன்ற பல உறுப்புக்களை உற்பத்தி செய்யும் தொழில் களும் நூல் நூற்பு இயந்திரங்கள் செய்யும் டெக்ஸ்டூல் கம்பெனியும் கோவை நகரில் உள்ளன. லாரிப் போக்கு வரத்துத் தொழிலும், அச்சகங்களும், உணவு விடுதி களும் பஞ்சாலைத் தொழிலால் பெரு வளர்ச்சி பெற்றுள்ளன.

பொதுவாகக் கோவை மாவட்டத்திலும் சிறப்பாகக் கோவை நகரின் சுற்றுப் புறங்களிலும் மக்களுடைய

வாழ்வு, பஞ்சாலைகளுடன் இரண்டறக் கலந்து காணப் படுகிறது. ஒருவருடைய செல்வத்தை, அவருடைய ஆட்சிக்குட்பட்ட கதிர்களின் எண்ணிக்கையை வைத்துத் தான் வரையறுக்கிறார்கள். திருமண விழாவில் பஞ் சாலைக் கித்தான்மீது அமர்ந்துதான் உணவு உண்ண வேண்டும். பஞ்சாலை முதலாளிகளின் மாடமாளிகை களுக்குள்ளும் பருத்தி பயிரிடப்படுகிறது; 'கோவையில் பருத்தி துணியாக மட்டும் காய்க்கவில்லை; பணமாகவே காய்த்துவிடுகிறது' என்று கூறத் தோன்றுகிறது.

### கோவை மாவட்டத்தில் பஞ்சாலைத் தொழிலின் நிலை பற்றிய புள்ளி விவரங்கள் (1961)

| | | |
|---|---|---|
| மொத்தக் கதிர்கள் | ஏறத்தாழ | 20 லட்சம் |
| விசைத்தறிகள் | ... | 4,000 |
| தொழிலாளர் : ஆடவர் | ... | 44,000 |
| பெண்டிர் | ... | 12,000 |
| | | ஆண்டுதோறும் |
| நூல் உற்பத்தி | ... | 3,20,000 பேல் (1 பேல்=180 கிலோ.) |
| துணி உற்பத்தி | ... | 33,000 பேல் (1 பேல்=1365 மீட்டர் அல்லது 1500 கெசம்) |
| ஆலைகளில் செலவாகும்பருத்தி | ... | 4 லட்சம் பேல் |

## கோவை மாவட்டத்திலுள்ள பஞ்சாலைகள் (1961 பிப்ரவரி)

| எண் | ஆலையின் பெயர் | தொடங்கிய ஆண்டு | கதிர் | விசைத் தறி |
|---|---|---|---|---|
| 1. | கோயம்புத்தூர் ஸ்பின்னிங் அண்டு வீவிங் (ஸ்டேன்ஸ்) | 1888 | 80,832 | 407 |
| 2. | காளீசுவரர் மில்ஸ் | 1906 | 50,314 | 410 |
| 3. | லெட்சுமி மில்ஸ் கம்பெனி லிமிடெட் (கோயம்புத்தூர், பல்லடம்) | 1910 | 81,568 | 300 |
| 4. | ஸ்ரீரங்கவிலாஸ் ஜின்னிங், ஸ்பின்னிங் அண்டு வீவிங் மில்ஸ் லிமிடெட் | 1922 | 36,368 | 88 |
| 5. | இராதாகிருஷ்ணா மில்ஸ் லிமிடெட் | 1923 | 60,724 | 300 |
| 6. | கம்போடியா மில்ஸ் லிமிடெட் | 1928 | 38,706 | |
| 7. | கோயம்புத்தூர் காட்டன் மில்ஸ் லிமிடெட் | 1929 | 42,808 | |
| 8. | வசந்தா மில்ஸ் லிமிடெட் | 1929 | 48,974 | 270 |
| | **பைகாரா மின்சார நிலையம் ஏற்பட்ட பிறகு தொடங்கப்பெற்ற ஆலைகள்** | | | |
| 9. | சோமசுந்தரம் மில்ஸ் பிரைவேட் லிமிடெட் | 1933 | 30,124 | 382 |
| 10. | ஆஷர் டெக்ஸ்டைல்ஸ் லிமிடெட், திருப்பூர் | 1936 | 25,624 | |
| 11. | ஸ்ரீ பாலசுப்பிரமணிய மில்ஸ் லிமிடெட் | 1934 | 30,896 | |
| 12. | பவானி மில்ஸ் லிமிடெட் | 1955 | 6,460 | |
| 13. | சந்திரா டெக்ஸ்டைல்ஸ் பிரைவேட் லிமிடெட் | 1954 | 12,320 | |
| 14. | கோயம்புத்தூர் கமலா மில்ஸ் லிமிடெட் | 1935 | 27,244 | 124 |
| 15. | கோயம்புத்தூர் முருகன் மில்ஸ் லிமிடெட் | 1935 | 25,340 | 100 |
| 16. | கோயம்புத்தூர் பயனீர் மில்ஸ் லிமிடெட் | 1935 | 51,866 | |

| எண் | ஆலையின் பெயர் | தொடங்கிய ஆண்டு | கதிர் | விசைத் தறி |
|---|---|---|---|---|
| 17. | தனலெட்சுமி மில்ஸ் லிமிடெட், திருப்பூர் | 1932 | 49,876 | 201 |
| 18. | ஞானாம்பிகை மில்ஸ் லிமிடெட் | 1935 | 18,284 | |
| 19. | சனார்த்தன மில்ஸ் லிமிடெட் | 1934 | 24,828 | |
| 20. | ஜெயலெட்சுமி மில்ஸ் லிமிடெட் | 1942 | 25,080 | |
| 21. | கதிரி மில்ஸ் (கோயம்புத்தூர்) லிமிடெட் | 1946 | 29,068 | |
| 22. | ஸ்ரீ கண்ணபிரான் மில்ஸ் லிமிடெட் | 1946 | 26,372 | |
| 23. | கஸ்தூரி மில்ஸ் லிமிடெட் | 1938 | 25,940 | |
| 24. | கோத்தாரி டெக்ஸ்டைல்ஸ் லிமிடெட் | 1937 | 67,000 | 300 |
| 25. | குமரன் மில்ஸ் லிமிடெட் | 1939 | 24,924 | |
| 26. | லோட்டஸ் மில்ஸ் லிமிடெட் | 1936 | 28,728 | |
| 27. | நரசிம்மா மில்ஸ் லிமிடெட் | 1954 | 18,480 | |
| 28. | ஸ்ரீ பாலமலை ரங்கநாதர் மில்ஸ் லிமிடெட் | 1933 | 11,568 | |
| 29. | பழனி ஆண்டவர் மில்ஸ் லிமிடெட் உடுமலைப்பேட்டை | 1933 | 48,224 | |
| 30. | பங்கஜா மில்ஸ் லிமிடெட் | 1932 | 30,796 | |
| 31. | பிரிமியர் மில்ஸ் (கோயம்புத்தூர்) லிமிடெட் உடுமலைப்பேட்டை, கோவை | 1945 | 48,600 | |
| 32. | ராதிகா மில்ஸ் லிமிடெட் | 1956 | 12,096 | |
| 33. | இராசலெட்சுமி மில்ஸ் லிமிடெட் | 1932 | 49,896 | |
| 34. | ஸ்ரீ இராமகிருஷ்ணா மில்ஸ் (கோயம்புத்தூர்) லிட்., | 1946 | 32,260 | 736 |
| 35. | ஸ்ரீ இராமலிங்க சூடாம்பிகை மில்ஸ் லிமிடெட் திருப்பூர் | 1933 | 35,520 | 192 |

| எண் | ஆலையின் பெயர் | தொடங்கிய ஆண்டு | கதிர் | விசைத் தறி |
|---|---|---|---|---|
| 36. | ஸ்ரீ ராம் நாராயண் மில்ஸ் லிமிடெட் | 1953 | 12,384 | |
| 37. | ஸ்ரீ சாரதா மில்ஸ் லிமிடெட் | 1934 | 20,742 | 200 |
| 38. | சரோஜா மில்ஸ் லிமிடெட் (சிங்காநல்லூர் மட்டும்) | 1935 | 20,080 | |
| 39. | சிவானந்தா மில்ஸ் லிமிடெட் | 1950 | 31,360 | |
| 40. | திருமூர்த்தி மில்ஸ் லிமிடெட், (உடுமலைப்பேட்டை) | 1935 | 28,384 | 75 |
| 41. | திருப்பூர் காட்டன் ஸ்பின்னிங் அண்டு வீவிங் மில்ஸ் லிமிடெட், திருப்பூர் | 1954 | 12,064 | |
| 42. | ஸ்ரீ வெங்கடேசா மில்ஸ் லிமிடெட், உடுமலைப்பேட்டை | 1933 | 56,660 | 288 |
| 43. | விசயலெட்சுமி மில்ஸ் லிமிடெட் | 1935 | 33,136 | |
| 44. | விஜயேஸ்வரி டெக்ஸ்டைல்ஸ் லிமிடெட் புளியம்பட்டி, பொள்ளாச்சி | 1953 | 12,180 | |
| 45. | ஆனந்த குமார் மில்ஸ் லிமிடெட் | | 12,096 | |
| 46. | டி. பி. எவ். டெக்ஸ்டைல்ஸ் பிரைவேட் லிமிடெட் | 1953 | 12,096 | |
| 47. | கங்கா டெக்ஸ்டைல்ஸ் | | 10,176 | |
| 48. | கோபால்டு டெக்ஸ்டைல்ஸ் பிரைவேட் லிமிடெட் திருப்பூர் | | 12,096 | |
| 49. | ஜோதி மில்ஸ் | | 23,824 | |
| 50. | கிருஷ்ணவேணி டெக்ஸ்டைல்ஸ் லிமிடெட் | | 12,176 | |
| 51. | பொள்ளாச்சி பாக்கியலெட்சுமி மில்ஸ் பிரைவேட் லிமிடெட் | | 8,424 | |

| எண் | ஆலையின் பெயர் | தொடங்கிய ஆண்டு | கதிர் |
|---|---|---|---|
| 52. | பிரகாஷ் மில்ஸ் பிரைவேட் லிமிடெட் | | 12,096 |
| 53. | ரவீந்திரா மில்ஸ் லிமிடெட் | 1956 | 12,148 |
| 54. | செல்வராஜா மில்ஸ் லிமிடெட் | | 12,000 |
| 55. | சதர்ன் டெக்ஸ்டைல்ஸ் லிமிடெட் | | 12,166 |
| 56. | ஸ்ரீ ஹரிமில்ஸ் பிரைவேட் லிமிடெட் | | 12,096 |
| 57. | ஸ்ரீ கார்த்திகேயா ஸ்பின்னிங் அண்டு வீவிங் மில்ஸ் பிரைவேட் லிமிடெட் | 1945 | 27,040 |
| 58. | ஸ்ரீ கருணாம்பிகை மில்ஸ் லிமிடெட், சோமனூர் | | 12,096 |
| 59. | ஸ்ரீ நடேசர் ஸ்பின்னிங் அண்டு வீவிங் மில்ஸ் பிரைவேட் லிமிடெட், ஈரோடு | | 11,704 |
| 60. | ஸ்ரீ பத்மா மில்ஸ் | | 1,200 |
| 61. | ஸ்ரீ சக்தி டெக்ஸ்டைல்ஸ் லிமிடெட், பொள்ளாச்சி | | 12,040 |
| 62. | ஸ்ரீ வரதராஜா டெக்ஸ்டைல்ஸ் லிமிடெட் | | 14,536 |
| 63. | சூர்யபிரபா மில்ஸ் பிரைவேட் லிமிடெட் | 1952 | 10,120 |
| 64. | திருப்பூர் டெக்ஸ்டைல்ஸ் பிரைவேட் லிமிடெட் | | 4,800 |
| 65. | வி. ஆர். டெக்ஸ்டைல்ஸ் பிரைவேட் லிமிடெட் புஞ்சை புளியம்பட்டி | | 4,000 |
| 66. | காட்டேரி டெக்ஸ்டைல்ஸ் லிமிடெட் | | 12,280 |
| 67. | ஸ்ரீ கோபால கிருஷ்ணா மில்ஸ் பிரைவேட் லிமிடெட் | | 12,000 |
| 68. | சுஜனி டெக்ஸ்டைல் பிரைவேட் லிமிடெட் | | 12,096 |
| 69. | சற்குணா மில்ஸ் பிரைவேட் லிமிடெட், சூலூர் | | 3,520 |
| 70. | பயனீர் டெக்ஸ்டைல்ஸ், வேடபட்டி | | 7,376 |

| எண் | ஆலையின் பெய | தொடங்கிய ஆண்டு | கதிர் |
|---|---|---|---|
| 71. | ஸ்ரீ லெட்சுமி நாராயண டெக்ஸ்டைல்ஸ் லிமிடெட், பல்லடம் வடுகபாளையம் | | 11,880 |
| 72. | மஹா கணபதி மில்ஸ் | | 5,776 |
| 73. | சுந்தரராஜ் டெக்ஸ்டைல்ஸ் | | 1,408 |
| 74. | சந்திரா டெக்ஸ்டைல்ஸ் | | 12,000 |
| 75. | ராமலிங்க மில்ஸ் | | 1,290 |
| 76. | விசுவம் மில்ஸ், ஈரோடு | | 4010 |
| 77. | ஸ்ரீ ராமாலெட்சுமி ஜின்னிங் அண்டு ஸ்பின்னிங் மில்ஸ் | | 10,000 |
| 78. | பார்ரத் காட்டன் மில்ஸ் | | 10,000 |
| 79. | ஆண்டவர் மில்ஸ் | | 12,000 |
| 80. | குவாலிடி ஸ்பின்னிங் மில்ஸ் பொள்ளாச்சி | | 8,192 |
| 81. | இராமகிருஷ்ண இண்டஸ்ட்ரியல் வேஸ்ட் ஸ்பின்னிங் மில்ஸ் | | 10,000 |
| 82. | ஓம் ।।ராசக்தி மில்ஸ் | | 12,184 |
| 83. | வாசுதேவா இன்டஸ்ட்ரீஸ் | | 6,160 |
| 84. | ஸ்ரீ ராணி லெட்சுமி மில்ஸ், அரசூர் | 1961 | 12,000 |

## பருத்தி அறைக்கும் தொழில்

*பஞ்சாலைத் தொழிலோடு சேர்ந்த துணைத் தொழில்களுள் குறிப்பிடத்தக்கது பருத்தி அறைக்கும் தொழில். விளைந்த பஞ்சிலிருந்து பருத்தியைப் பிரிக்கும் இயந்திரங்கள் கொண்ட தொழிற்சாலைகளை, பருத்தி அறைக்கும் தொழிற்சாலைகள் என்றும் ஜின்னிங் பாக்டரி என்றும் சொல்லுவதுண்டு, இம் மாவட்டத்தில் இத்தகைய தொழிற்சாலைகள் 186 இருக்கின்றன.*

*இவற்றுள் பெரும்பாலான தொழிற்சாலைகள் பஞ்சாலைகள் நடத்தும் முதலாளிகளின் நண்பர்கள் அல்லது உறவினருக்கு உரிமையானவை. சில தொழிற்சாலைகள், ஆலையினராலேயே நேரடியாக நடத்தப்படுகின்றன. மதுரையிலுள்ள மதுரை ஆலையும், சென்னையிலுள்ள பக்கிங்ஹாம் கர்னடிக் ஆலையும் இம்மாவட்டத்தில் பருத்தி அறைக்கும் தொழிற்சாலைகள் வைத்துள்ளன.*

*இந்த 186 தொழிற்சாலைகளிலும் சேர்ந்து 1960 இறுதியில் 1,150 ஜின்கள் இருக்கின்றன.*

*இத் தொழிற்சாலைகள் இருக்கும் இடங்களாவன:-*

| | |
|---|---|
| திருப்பூர் | 29 |
| பொள்ளாச்சி | 20 |
| பூளைமேடு, பாப்பா நாயக்கன்பாளையம் | 13 |
| சிங்காநல்லூர் | 11 |
| அவிநாசி | 9 |
| உடுமலைப்பேட்டை | 9 |
| அன்னூர் | 7 |
| குன்னத்தூர் | 6 |
| பவானி | 5 |
| சென்னிமலை | 5 |
| சூலூர் | 5 |
| பிற இடங்கள் | 67 |
| மொத்தம் | 186 |

இந்தத் தொழிற்சாலைகளால், பருத்தி வேளாண்மை செய்யும் பல்லாயிரவர் வளமாக வாழ்கின்றனர். தொழிலாளராக, இவற்றில் வேலை பார்ப்பவர் தொகை பத்தாயிரம் இருக்கலாம்.

## தென் இந்திய ஆலை அரசர்கள் சங்கம்
## (Southern India Mill-Owners' Association)

கோவை நகரிலுள்ள இச்சங்கம் தமிழ்நாட்டில் மிகுந்த செல்வாக்குப் படைத்த நிறுவனமாகும். ரா. க. சண்முகம் செட்டியார், இதை 1933-இல் தொடங்கினர்.

தென்மண்டலத்திலுள்ள தமிழ்நாடு, கேரளம், மைசூர், ஆந்திரப் பிரதேசம், புதுச்சேரி ஆகிய இராச்சியங்களிலுள்ள பஞ்சாலை உரிமையாளர்களின் பிரதிநிதித்துவம் பெற்ற நிறுவனம் இதுவே. இச்சங்கத்தில் (1—1—1961-இல்) 103 உறுப்பினர்கள் உள்ளனர்.

இச் சங்கம் இந்திய அரசாங்கத்தாராலும் மாநில அரசாங்கத்தாலும் ஏற்றுக்கொள்ளப் பட்டிருப்பதால், தொழில் துறைக் குழுக்கள் பலவற்றில் இச்சங்கத்தால் தேர்ந்தெடுக்கப்படுபவர்கள் உறுப்பினராக உள்ளனர். கொள்கைகளை முடிவு செய்யுமுன், இச்சங்கத்தின் கருத்துக்களை அரசாங்கம் தெரிந்து கொள்ளுகிறது.

## தென் இந்திய சவுளி ஆராய்ச்சி நிலையம் ("சித்ரா")
## (South Indian Textile Research Association "SITRA")

தோற்றம்: 19–ஆம் நூற்றுண்டிலேயே தென் இந்தியாவில் பல நூல் ஆலைகள் தோன்றின; எனினும் நூல் உற்பத்தியைப் பற்றி ஆராய ஒரு வசதியும் இல்லாதிருந்

தது. நூலின் தரத்தை உயர்த்தவும், வீணாகும் கழிவுப் பொருள்களைக் குறைக்கவும், தொழிலாளரின் வேலைத் திறமையைப் பெருக்கவும் வழிவகைகளை ஆராய்ந்தால் தான், தரமான நூலும் நல்ல துணியும் உற்பத்தி செய்ய இயலும். ஏற்றுமதியாகும் துணி, நூல் இவற்றுக்குக் கூடுதலான விலை கிடைக்கவும் ஆராய்ச்சி இன்றியமையாதது. ஆமதாபாத்திலும், பம்பாயிலும் இத்தகைய நிலையங்கள் இருக்கின்றன. இதனை நன்றாக உணர்ந்து, டாக்டர் ரா. க. சண்முகம் செட்டியார் இந்த நிறுவனத்தைத் தொடங்க ஆவன செய்தார். 25-12-1955 இல் தலைமை அமைச்சர் ஜவஹர்லால்நேரு இந்நிலையத்துக்கு அடிக்கல் நாட்டினார்; 13-10-1958 இல் டாக்டர் இராதாகிருஷ்ணன் இக்கட்டிடத்தைத் திறந்து வைத்தார்.

நோக்கம் : குறைந்த செலவில் கூடுதலாக உற்பத்தி செய்தல்; ஆராய்ச்சியில் கண்டறிந்தவற்றை ஒப்புநோக்கு வதன் மூலம், இயந்திரங்கள் நெடுநாள் உழைக்கும் தன்மையுடனிருக்க அவற்றைத் தக்கவாறு பேணுதல்; முதலாளி - தொழிலாளி உறவு நலமாக அமைய வழி வகுப்பது - இவை "சித்ரா"வின் மூன்று நோக்கங்கள்.

உறுப்பினர் : தமிழ்நாடு, ஆந்திரம், மைசூர், கேரளம் ஆகிய தென் இராச்சியங்கள் நான்கிலும் உள்ள நூல் ஆலைகள், நெசவாலைகள் யாவும் கோயம்புத்தூர் ஆராய்ச்சி நிலையத்தில் உறுப்பினராகலாம்; கதிர் ஒன்றுக்கு ரூ. 1ம் விசைத்தறி ஒன்றுக்கு ரூ. 35ம் நுழைவுக் கட்டணம் கட்டவேண்டும். பருத்தித் துணி நிதிக்கு (Cotton Textilcs Fund) ஆலைகள் செலுத்தும் சந்தாத்தொகைக்குச் சமமான தொகையை இந்திய அரசாங்கத்தார் இந்நிலையத்துக்கு வழங்குகின்றனர். இதன் செயற்குழுவில் அரசாங்கம், கைத்தறி நெசவாளர், ஆலைகள் இவற்றின் பிரதிநிதிகளும் விஞ்ஞானிகளும் உள்ளனர்.

சவுளி ஆராய்ச்சியில் உலகப் புகழ்பெற்ற மான் செஸ்டர் ஷர்லி இன்ஸ்ட்டிட்யூட்டில் பல்லாண்டு பயின்ற கே. சீனிவாசன் சித்ராவின் டைரக்டராக இருக்கிறார். 1960 வரை இந்நிலையத்திற்கு மூலதனச் செலவு ரூ. 40 லட்சம் ஆகியிருக்கிறது. சூப்பர்வைசர்களுக்கு இங்கே பயிற்சி தரப்படுகிறது. நாம் மேலே குறிப்பிட்டுள்ள நோக்கங்களை நிறைவேற்றுவதற்கான ஆராய்ச்சிகள் நடைபெறுகின்றன.



புத்தம் புதிய பஞ்சாலை இயந்திரங்கள்

படம் உதவி :
சென்னை அரசாங்கச் செய்தித் துறை.



பேரூர் சிற்பம்.

படம் உதவி:
சென்னை அரசாங்கச் செய்தித் துறை.

## 16. வாணிகம்

வணிகத்துறையில் கோவை மாவட்டம் மிகச் சிறந்து விளங்குகிறது. ஆலைத்தொழில் சந்தை வாணிகம், தோட்டங்கள் - இவ்வாறு வேறுபட்ட துறைகளிலும் இம்மாவட்டத்திற்குப் பல ஆண்டுகளாகப் புகழ் இருந்து வருகிறது. இதனுல் பொருளாதாரத் துறையிலும் அரசியல் செல்வாக்கிலும் இந்த மாவட்டத்திற்குத் தனிப் பெருமை உண்டு.

ஆலைகள் பெருகியிருப்பதால் தென்னிந்தியப் பஞ்சாலை முதலாளிகளின் அமைப்பு கோவைமாநகரில் இருந்துவருவதை, முன்னரே தெரிவித்திருக்கிறேம். ஆலை அரசர்கள் தங்களது வருவாயைக்கொண்டு பல தொழில்களைப் பெருக்கியுள்ளனர்.

### விற்பனையும் விற்பனை நிறுவனங்களும்

பொருள்களின் விற்பனையும் இம்மாவட்டத்தில் மிகுதி. பொருளை ஆட்சி செய்வதாலேயே பொருளாட்சி என்ற பெயரோடமைந்த ஊர்அந்தப்பெயர்மருவி, பொள்ளாச்சி ஆகியிருக்கிறது. அவ்வூரில் வியாழன் தோறும் கூடும் சந்தை தொல்புகழ் பெற்றது. சில இலட்சம் தொழிலாளர் இருப்பதால், இம்மாவட்டத்தில் கடைகளில் வியாபாரம் மிகுதியாக நடைபெறுகிறது. திரைப்பட மாளிகைகளின் வருமானம் அதைவிட மிகுதி.

நீலகிரி மாவட்டத்திலுள்ள காப்பி, தேயிலைத்தோட்டங்களின் உரிமையாளர் பலர் அவற்றின் அலுவலகங்களைக் கோயம்புத்தூரிலேயே வைத்துள்ளனர். அத் தோட்டங்களின் விளைபொருள்களை அங்கிருந்து வரவழைத்து வியாபாரத்திற்கேற்றவாறு தயாரித்துப் பக்குவப்படுத்தி உரிய அளவுகளில் அவற்றை அடைக்கும்

வேலையை, கோயம்புத்தூரிலேயே செய்கின்றனர். அப்பொருள்களை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்ய, கோயம்புத்தூரிலிருந்தே கொச்சி அல்லது சென்னைத் துறைமுகத்துக்கு அனுப்புகிறார்கள்.

இந்தியக் காப்பிக்குழு காப்பித் தோட்டங்களில் உற்பத்தியாகும் காப்பிக் கொட்டையைப் பெரிய அளவில் இருப்புவைத்திருந்து ஏலம் போடும் இடங்களுள் கோயம்புத்தூர் நகரமும் ஒன்று. பிற இடங்கள் சென்னை, விசயவாடா, மங்களூர், பெங்களூர், எர்ணாகுளம் ஆகியவை. இந்தியாவில் காப்பி வறுக்கும் முறை, தொழிலாக ஏற்படத் தொடங்கியது கோயம்புத்தூரிலேயே ஆகும்.*

வணிகர்கள் மிகுதியாக இருப்பதாலும் சேலம், கோவை, நீலகிரி, மலபார் மாவட்டங்களின் வாணிகம் அவர்கள் வாயிலாக நடைபெறுவதாலும் இந்திய அரசாங்கத்துக்கு வருமான வரி, பொருள்களின்மீது விதிக்கப்படும் மத்தியக் கலால் வரி, பிற வரிகள் இம்மாவட்டத்தில் கோடிக்கணக்கில் வசூலாகின்றன. மாநில அரசாங்கத்துக்கு மிகுதியாக விற்பனைவரி செலுத்தும் மாவட்டங்களில் கோவையும் ஒன்று.

### வணிகர் மன்றங்கள்

இவ்வூரில் வணிகர்களின் மன்றங்கள் செல்வப் பெருக்குடனும் செம்மையான அமைப்புடனும் நடந்து வருகின்றன. இந்நகரத்து சி. எஸ். இரத்தின சபாபதி முதலியார் அனைத்திந்திய வணிகக்குழுக்களின் கூட்டமைப்பின் தலைவர் என்ற பெரிய சிறப்பைப்பெற்ற முதல் தமிழர் ஆவார். இந்தியா உரிமைபெற்ற பிறகு, முதல் நிதி அமைச்சராக இருந்த சண்முகம் செட்டியாரும் ஆந்திர மாவட்டங்கள்பிரிந்த பிறகு தமிழ்நாட்டின்

*First Infra Red Coffee Roasting Unit in India

முதல் நிதியமைச்சரான சி. சுப்பிரமணியமும் இம்மாவட்டத்தினரே.

## தொழிலாளர் நிலை

தொழிலாளருக்கு இது ஒரு முக்கியமான இடமாக இருப்பதால், பம்பாயிலுள்ள மத்திய தொழிலாளர் மன்றம் (சென்ட்ரல் லேபர் இன்ஸ்ட்டியூட்) தென் மண்டலத்திற்குரிய தொழில்துறைப் பொருட்காட்சி நிலையத்தை (இண்டஸ்ட்ரியல் மியூசியம்) கோயம்புத்தூரில் ஏற்படுத்தி வருகிறது. தொழிற்சாலைகளில் விபத்தினின்றும் பாதுகாத்துக்கொள்ளுவது, தொழிலாளரின் உடல்நலம், தொழிற்சாலைச் சுகாதாரம் பற்றிய சோதனைக்கூடம், பயிற்சி நிலையம், தொழிலாளருக்கான செய்திப்பகுதி, நூல்நிலையம், முதலியன இந்நிலையத்தில் இருக்கும்.

தொழிலாளர் தொகை பெருகியிருப்பதால் இம்மாவட்டத்தில் சில சமயம் திடீரென்று வேலை நிறுத்தம் ஏற்படுவதும் ஒரு சில ஆலைகள் தொடர்ந்து சில மாதங்களுக்குப் பூட்டிக்கிடக்கும்போது அமைதியின்மை நிலவுவதும் வழக்கம்.

தொழிலாளர்களின் சங்கங்கள் இம்மாவட்டத்தில் ஏராளமாக உள்ளன. அவற்றுள் முக்கியமானவை.—

கோவை ஜில்லா மில்தொழிலாளர் சங்கம்
கோவை மாவட்ட இந்திய தேசிய தொழிற்சங்கம்
கோவை ஜில்லா மெகானிகல் அண்டு ஜெனரல் தொழிலாளர் சங்கம்
ஹியூம் பைப்புத் தொழிலாளர் சங்கம்
தமிழ்நாடு தோட்டத் தொழிலாளர் சங்கம், வால்பாறை
மதுக்கரை சிமிண்டுத் தொழிலாளர் சங்கம்
பனியன் பாக்டரி தொழிலாளர் சங்கம், திருப்பூர்
தி. மு. க. பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம்
ஹிந்த் மஜ்தூர் சபா தொழிலாளர் சங்கம்.

தொழிலாளர்களின் தலைவர்களாக யிருப்பவர்கள் பாராளுமன்றத்திற்கும் சட்டசபைக்கும் இம்மாவட்டத்தில் தேர்ந்தெடுக்கப்பெற்றிருக்கின்றனர். இப்பகுதியில் தொழிலாளர் இயக்கத்தைத் தோற்றுவித்து, பல எதிர்ப்புக்களைப் 'பொருட்படுத்தாது அதை வளர்த்து, அந்த இயக்கத்துக்கு வலுவும் உரமும் ஊட்டியவர் என். ஜி. இராமசாமி ஆவார். அவர் பெயரால் ஓர் உயர்நிலைப் பள்ளி நடைபெற்றுவருகிறது.

## கோயம்புத்தூர் மார்க்கெட் கமிட்டி, திருப்பூர்

கோயம்புத்தூர் மாவட்டம் முழுவதும் இந்தக் குழுவின் ஆட்சி எல்லைக்குள் இருக்கிறது. பருத்தி பஞ்சு, நிலக்கடலை, புகையிலை, மஞ்சள் ஆகிய நான்கு விளை பொருள்களின் வியாபாரத்தை ஒழுங்குபடுத்துவது இக் குழுவின் அலுவல் ஆகும். இப் பொருள்களை விற்பதில் ஈடுபடும் தரகர்களும் அவற்றை எடை போடுபவர்களும், வியாபாரிகளும் இக் குழுவிடமிருந்து 'லைசென்சு' பெற்றுக்கொள்ளவேண்டும்.

இந்தக் குழு மாநில அரசாங்கத்தாரால் நியமிக்கப் பட்டிருக்கிறது. வணிகர்களின் பிரதிநிதிகள் சிலரும் விவசாயிகளின் பிரதிநிதிகள் சிலரும் மாவட்ட விவசாய அலுவலரும் இக் குழுவில் உறுப்பினராக இருக்கிறார்கள்.

குழுவின் நடைமுறை, அதற்கெனமாநிலச் சட்டசபையால் இயற்றப்பட்டிருக்கும் ஒரு சட்டத்தில் குறிப்பிட்டபடி அமைந்திருக்கிறது. அதன் அன்றாடவேலைகளைக் கவனிக்க 'கெசட்' பதிவு பெற்ற ஓர் அலுவலரை அரசாங்கத்தார் நியமித்துள்ளனர். அவருடைய அலுவலகம் திருப்பூரில் இருக்கிறது.

கோபிச்செட்டிபாளையம், பொள்ளாச்சி, ஈரோடு, ஆகிய இடங்களிலும் இந்தக் குழுவின் கிளைகள் உள்ளன.

அவற்றிற்கு 'மார்க்கெட் யார்டு' என்று பெயர். இந்தக் குழுவின் இசைவு பெருதவர்கள் திருப்பூரிலிந்து ஐந்து கி. மீ. சுற்றளவுள்ளபகுதியில் பருத்தி பஞ்சு வாங்குவதற்கும் விற்பதற்கும் தடை செய்யப்பட்டிருக்கிறது.

பெரும்பான்மையான விவசாயிகள் அறுவடைக் காலத்திற்கு முன்னரே சாகுபடிச் செலவுக்கும் வீட்டுச் செலவுக்கும் வியாபாரிகளிடம் முன் பணம் பெற்றுக் கொண்டு விடுவதால் அவர்களுடைய பொருள்களுக்குக் குறைந்த விலைதான் கிடைப்பதால் அவர்களுக்குப் பண வசதி செய்துகொடுக்க மார்க்கெட் கமிட்டியும் கூட்டுறவு நிறுவனங்களும் சில ஏற்பாடுகளைச் செய்துள்ளன.

இந்தக் குழுவினர் வழங்கும் இசைவுச் சீட்டு (Permit) களின்பேரில்தான் மேலே குறிப்பிட்ட பொருள்களை இரயில் மூலமோ லாரிகள் மூலமோ அனுப்ப அந்த அதிகாரிகள் எடுத்துக்கொள்வார்கள்.

இந்தக் குழுவின் வாயிலாக விற்பதால் ஏற்படும் நன்மைகளை விவசாயிகளுக்கு விளக்கிக் கூறுவதற்காக இடையிடையே பிரசாரம் செய்யப்படுகிறது. கம்போடியா, கருங்கண்ணிப் பஞ்சுகள் பேல் போட்டும் பேல் போடாமலுமாக உயர்ந்த விலை இவ்வளவுவரை விற்கலாம் என்பதை இந்தக் குழுவினர் கருத்துக்கேற்ப, பம்பாயிலுள்ள ஆலை ஆணையர் (Textile Commissioner) முடிவு செய்கிறுர்.

## 17. கூட்டுறவு இயக்கம்

கூட்டுறவு இயக்கம் கோவை மாவட்டத்தில் பெரு வளர்ச்சியடைந்திருக்கிறது. கூட்டுறவு முறையில் நடை பெற்றுவரும் அச்சகம் கோவை நகரில் இருக்கிறது. பெரிய தொழிற்சாலைகளும் கூட்டுறவுத் துறையினரால் நடத்தப்படுவதற்குச்சான்ருக உடுமலைப்பேட்டை அருகேயுள்ள அமராவதி சர்க்கரை ஆலை இருந்து வருகிறது.

பிற நிறுவனங்களுள் குறிப்பிடத்தக்கவை :—

காங்கேயம் பொலிகாளைக் கூட்டுறவுச் சங்கம், திருப்பூர் பருத்தி வியாபாரக்கூட்டுறவுச் சங்கம், ஆலைத் தொழிலாளருக்காக வீடு கட்டும் சங்கங்கள், ஆலைகளில் வேலை பார்ப்பவர்களின் 'வாங்குவோர் சங்கங்கள்', கூட்டுறவு பால் வழங்கு நிலையம், சாயிபாபா வீடுகட்டும் கூட்டுறவுச் சங்கம், ஈரோடு முதலிய இடங்களிலுள்ள நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்கள்.

கூட்டுறவு இயக்கம் இம்மாவட்டத்தில் வேரூன்றக் காரணமாக இருந்தவர் தி. அ. இராமலிங்கம் செட்டியார் (1881—1953) என்ற பெருமகனுர் ஆவார். அவர் நினை வாக, கோயம்புத்தூர் நகரில் (மேட்டுப்பாளையம் சாலையில்) இராமலிங்கம் கூட்டுறவுப் பயிற்சி நிலையம் (கோவாப்பரேட்டிவ் இன்ஸ்டிட்டியுட்) 1941 முதல் நடை பெற்றுவருகிறது. இது கோவை, நீலகிரி, சேலம், வட ஆர்க்காடு மாவட்டங்களில் பணியாற்றும் கூட்டுறவு அலு வலர்க்கு கூட்டுறவு, கூட்டுறவுச் சட்டம், கிராமியப் பொருளாதாரம், கணக்குத் தணிக்கை, திட்டங்களில் கூட்டுறவு வளர்ச்சி ஆகியவைபற்றிப் பயிற்சி தருகிறது.

## 18. தொழில் வளர்ச்சி

விவசாயத் துறையிலும் பஞ்சாலைத் துறையிலும் கோவை மாவட்டம் அடைந்துள்ள உயர்நிலையை முன்னரே கூறியுள்ளோம். பிற தொழில்களிலும் கோவை மாவட்டம் சிறந்து விளங்குகிறது.

மரக்கூழிலிருந்து செயற்கைப் பஞ்சு உண்டாக்கும் தொழிற்சாலை, பஞ்சாலைகளுக்கு வேண்டிய இயந்திரங்கள் செய்யும் தொழிற்சாலை, தேனிரும்புத் தொழிற்சாலை, மின்சார மோட்டார்கள் பம்பு செட்டுகள் செய்யும் வார்ப்புப் பட்டறை, சிமிண்டுத் தொழிற்சாலை, சர்க்கரை ஆலை, குளுகோஸ் தொழிற்சாலை போன்ற பல தொழிற்சாலைகள் உள்ளன. இவற்றை நான்கு பெரும் பகுதிகளாகப் பிரிக்கலாம். பஞ்சாலைத் தொழிலோடு தொடர்புடைய தொழில்கள், பெரிய தொழில்கள், நடுத்தரத் தொழில்கள், சிறு தொழில்கள், குடிசைத் தொழில்கள் என்ற தலைப்புக்களில் இவற்றைப்பற்றிக் கூறுவோம்.

### பஞ்சாலைத் தொழிலோடு தொடர்புடைய தொழில்கள் பஞ்சாலை இயந்திரங்கள்

பல ஆண்டுகளாக, பஞ்சாலை இயந்திரங்கள் வெளிநாடுகளிலிருந்தே வரவழைக்கப்பட்டன. இவை *1944* முதல் கோயம்புத்தூரில் டெக்ஸ்டூல் கம்பெனியாரால் செய்யப்படுகின்றன. சிறிய அளவில் தொடங்கப்பட்டு அநுபவத்தால் பயனடைந்து பின்னர் நல்ல முறையில் கதிர்களை உற்பத்தி செய்து, இக்கம்பெனியார் புகழடைந்துள்ளனர். இராமகிருஷ்ணா இண்டஸ்ட்ரியல்ஸ் என்ற கம்பெனியாரும் இத்தகைய இயந்திரங்களைச் செய்கின்றனர்.

### மரக்கூழிலிருந்து செயற்கைப் பஞ்சு ஆக்குதல்

இந்தியாவிலுள்ள ரயான் தொழிற்சாலைகளுக்கு ஆண்டுதோறும் ஐந்துகோடி ரூபாய் விலை மதிப்புள்ள மரக்கூழ், கனடா, டென்மார்க் ஆகிய நாடுகளிலிருந்துவரவழைக்கப்படுகிறது. ஆகையால் ஜப்பானிய உதவியுடன் "ரயான் பல்ப்" செய்யும் தொழிற்சாலை ஒன்று மேட்டுப்பாளையத்தில் பவானி ஆற்றின் கரையில் 1961-இல் தொடங்கப்பட்டிருக்கிறது. இந்தக் கூழிலிருந்து செயற்கைப் பஞ்சும், அதிலிருந்து செயற்கை இழைப் பஞ்சுநூலும் உற்பத்தி செய்யப்படும்.

சல்பூரிக் ஆசிட், கார்பன் டை சல்பைடு ஆகியவையும் இங்கு செய்யப்படும். நீலகிரித் தைல மரத்திலிருந்தும் புரோடீன் பைபர் (Protein Fibre) களிலிருந்தும் செயற்கைப் பட்டு செய்வதற்கான கூழ் தயாரிக்கவும் இத் தொழிற்சாலையினர் திட்டமிட்டுள்ளனர். இத் தொழிற்சாலையின் பெயர் 'சவுத் இந்தியா விஸ்கோஸ் கம்பெனி'; இதன் மூலதனம் எட்டுக் கோடி ரூபாய்.

### அட்டைத் துணி

அட்டைத் துணி (Card Clothing) செய்யும் ஒரு தொழிற்சாலை, சுவிட்சர்லந்து கம்பெனியுடன் கூட்டாக 35 லட்சம் ரூபாய் மூலதனத்துடன் பல்லடத்தில் லட்சுமி மில்ஸ் கம்பெனியாரால் தொடங்கப்பட்டிருக்கிறது. இதில் 1962முதல் ஆண்டுதோறும் 1400 'செட்' துணிகள் செய்யப்படும். இவ்வகைத் தொழிற்சாலை இந்தியாவில் பிம்பிரி (மஹாராஷ்டிரம்) யில் மட்டும்இருக்கிறது.

### அறுவை மருத்துவப் பஞ்சாலை

அறுவை மறுத்துவத்தில் பயன்படுத்தப்படும் பஞ்சு (Surgical Absorbent Cotton) நாள்தோறும் 500 கிலோகிராம் எடை அளவு செய்யும் தொழிற்சாலையும் இம்மாவட்டத்

தில் 1961–இல் தொடங்கப்பெற்றுள்ளது. இத்தகைய தொழிற்சாலை தென் இந்தியாவில் இராசபாளையத்தில் மட்டுமே இருந்து வந்திருக்கிறது.

## பெரிய தொழில்கள்

### சிமிண்டுத் தொழிற்சாலை

இத் தொழிற்சாலை கோவை நகரையடுத்த மதுக்கரையில் 1934–இல் தொடங்கப்பெற்றது. இதன் உற்பத்தி ஓராண்டுக்கு 3,50,000 டன் அளவினதாகும். இந்திய நாடெங்கும் சிமிண்டு ஆலைகளைப் பல்லாண்டுகளாகத் திறம்பட நடத்தி வரும் ஏ. சி. சி. (அசோசியேட்டட் சிமிண்டு கம்பெனி) குழுவைச் சேர்ந்த தொழிற்சாலைகளில் இதுவும் ஒன்று. தென்னிந்தியாவில் பெரிய அளவில் தொடங்கப் பெற்ற முதல் சிமிண்டுத் தொழிற்சாலை இதுவே. இத்தொழிற்சாலைக்கு வேண்டும் சுண்ணம்புக்கல் இப்பகுதியிலும், ஜிப்சம் திருச்சி மாவட்டத்திலும் கிடைக்கிறது.

### சர்க்கரை ஆலைகள்

உடுமலைப்பேட்டை வட்டத்தில் அமராவதி சர்க்கரை ஆலை நடைபெற்றது வருகிறது. விவரம், இந்நூலின் பிற்பகுதியில் உடுமலைப்பேட்டை என்னும் கட்டுரையில் காண்க. கோபிவட்டத்துக் கவுந்தப்பாடியிலும் இம்மா வட்டத்தில் வேறு சில இடங்களிலும் சர்க்கரை ஆலைகள் நிறுவப்பட இருக்கின்றன.

## நடுத்தரத் தொழில்கள்

### டீசல் இயந்திரங்கள்

கோயம்புத்தூர் நகரருகே டீசல் இயந்திரங்கள் செய்யும் தொழிற்சாலை ஒன்று இருக்கிறது. இதில் மாதந் தோறும் 25 இயந்திரங்கள் செய்யப்படுகின்றன.

## தேனிரும்புத் தொழிற்சாலை

'டெக்ஸ்டூல்' கம்பெனியார் தேனிரும்பு செய்யும் தொழிற்சாலை ஒன்றையும் நடத்திவருகின்றனர். இத் துறையில் குறிப்பிடத்தக்க தொழிற்சாலை தமிழ்நாட்டில் இது ஒன்றேயாகும். 1961 முதல் இங்கு உயர்தர எஃகும் (Special Steels) சிறு அளவில் செய்யப்படுகிறது.

## சிறு பொறியியல் தொழில்கள்

மின்சார மோட்டர்கள், பம்பு செட்டுகள் ஆகியவை கோவை மாவட்டத்திற்கு மிகவும் தேவை. இதையறிந்து பி. எஸ். ஜி. கங்கா நாயுடு குடும்பத்தார் தொடங்கிய அறநிலையைக் கைத்தொழில் நிறுவனத்தார் தண்ணீர் இறைக்க உதவும் கருவிகளை இந்தியாவிலேயே முதல் தடவையாகச் செய்தனர். ஒரு குடும்பத்துக்குத் தேவை யான அளவு நெல் அறைக்க உதவும் இயந்திரத்தையும் இவர்கள் செய்தனர்.

இதன் விளைவாகப் பலவகையான மின்சாரக் கருவி களும் சென்டிரிபுயூகல் பம்புகளும் செய்யும் தொழில் பூளைமேட்டில் செழித்தும் கொழித்தும் வருகிறது. இந்தியாவில் செய்யப்படும் இவ்வகை இயந்திரங் களில் மூன்றில் ஒரு பங்கு கோவை மாநகரின் சுற்றுப் புறத்திலுள்ள பல தொழிற்சாலைகளில் செய்யப்படுகிறது என்பது நாம் அறிந்து இன்புறத்தக்கது.

கோவையிலுள்ள இராமகிருஷ்ண இண்டஸ்ட் ரியல்ஸ் தொழிற்சாலையில் இந்தியாவிலேயே முதல் தடவையாக ரோட்டரி அச்சு இயந்திரம் செய்யப் பட்டிருக்கிறது.

இவ்வாறு வார்ப்புத் தொழில் வளர்ந்துவரும் கோவையில் வாப்புத்தொழிலுக்குரிய ஆராய்ச்சிக்கூடம்

(Foundry Research Institute) ஒன்றைக் கூட்டுறவு முறையில் அமைத்து அதற்கு வேண்டும் நிதியும் தொழிலியியல்அறிஞரும் வழங்குவது பற்றி இந்திய அரசாங்கத்து விஞ்ஞான-தொழில் ஆராய்ச்சிக்குழு (CSIR) சிந்தித்து வருகிறது.

### காகித ஆலை

இந்த ஆலை ஒன்றரைக் கோடி ரூபாய் மூலதனத்தில் உடுமலைப்பேட்டை வட்டத்தில் அமராவதி சர்க்கரை ஆலை அருகே அமைந்து வருகிறது. கரும்பாலைக் கழிவுப் பொருள்களைக்கொண்டு எழுதும் தாளும் பொருள்களைக் கட்டிக்கொடுக்கும் தாளும் செய்யப்படும்.

### திரைப்படத் தொழில்

திரைப்படங்கள் எடுக்கப்பயன்படும் ஸ்டுடியோக்கள்—சென்ட்ரல் ஸ்டுடியோ, பட்சிராஜா ஸ்டுடியோ என்னும் இரண்டும்—இம்மாவட்டத்தில் சில ஆண்டுகள் சிறப்பாக நடைபெற்றுவந்தன.

### செயற்கை வைரத் தொழிற்சாலை

'இந்தோசுவிஸ் சிந்தடிக் ஜெம் பாக்டரி' என்ற பெயரில் மேட்டுப்பாளையத்திலிருந்து மூன்று கி. மீ. தொலைவில் மலையும் ஆறும் உள்ள பகுதியில் மனங்கவர் முறையில் இத்தொழிற்சாலை உளது. தண்ணீரும் மின்சாரமும் எளிதாகக் கிடைப்பதாலும் பரந்த இடவசதியும் காற்றோட்டமும் இருப்பதாலும் இந்த இடம் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறது. இத்தொழிற்சாலைக்குச் சொந்தமாக ஒரு மின்சார நிலையம் இருக்கிறது.

பிரான்சிலிருந்தும் சுவிட்சர்லந்திலிருந்தும் இந்தியா ஆண்டுதோறும் 40 லட்சம் ரூபாய் மதிப்புள்ள செயற்கை வைரம், இறக்குமதி செய்து வந்தது. இதுதவிர, ரெங்கூன் வைரம் "கல்சரல் டயமண்டு" என்ற கற்களும்

வரவழைக்கப்பட்டன. இவற்றின் இறக்குமதியை இந்திய அரசாங்கத்தார் கட்டுப்படுத்தியிருப்பதால் அக்கற்களை நம் நாட்டிலேயே செய்ய இத்தொழிற் சாலையைச் சுவிட்சர்லந்திலுள்ள தொழிலதிபர்களுடன் சேர்ந்து பொள்ளாச்சி மகாலிங்கமும் அவர் நண்பர்களும் தொடங்கியுள்ளனர்.

செயற்கை வைரங்கள் நகைகளுக்குப் பயன்படுவதோடு, கைக் கடிகாரங்களிலுள்ள சிறு ஜுவல்களாகப் பொருத்தவும் தேவைப்படுகின்றன. சில கருவிகளில் இது பால்பேரிங்கு ஆகப் பயன்படுகிறது. ஒளிப்பதிவு வேலைக்கும், முப்பட்டைக் கண்ணாடிகள், காமிரா, புரஜெக்டர் இவற்றின் பகுதிகளைச் செய்யவும் செயற்கை வைரம் உதவுகிறது. மூக்குக் கண்ணாடிகள் செய்வதற்கும் நைலான் நூலில் பயன்படுத்தவும் இவை தேவைப் படுகின்றனவாம்.

இந்தக் கற்களை வெப்பம் தாக்குவதில்லை; இவற்றில் துரு ஏறுவதும் கிடையாது.

இந்த வைரக்கற்களைச் செய்ய அம்மோனியம் சல் பேட், அலுமினியம் சல்பேட் இரண்டும் கலந்து வடி கட்டிக் குளிர்ச்சியாக்கப்படுகின்றன. இதனால் அது இறுகித் தூளாகிவிடுகிறது. மிக வெப்பமான உலையில் ஒரு மணி நேரம் வைத்திருந்து அவற்றிலுள்ள ஈரப் பசையை எடுத்து விடுகின்றனர். பின்னர், மின்சாரச் சல்லடை ஒன்றின் வாயிலாகக் கலவையை மென்மை யான மாவாகச் சலித்து எடுக்கிறார்கள். பட்டுப்போல் மென்மையான ஒரு பொடியாக இது பாத்திரங்களில் சேகரித்து வைக்கப்படுகிறது.

இந்தத் தொழிற்சாலைக்குத் தேவையான நீர் வாயு, பிராணவாயு ஆகியவை இங்கேயே செய்து கொள்ளப் படுகின்றன.

வைரக் கற்களைத் தயாரிப்பதில் கடைசிக் கட்டமாக, வைரப் படிவங்கள் ஒரு வகையான சிறு உலைகளில் உருவாகின்றன. அதன் மூலம் ஹைட்ரோஜனை அனுப்புவதால் தீப்பிடித்து ஒவ்வோர் உலையிலும் படிகம் உண்டாகிறது. பிறகு அதைக் குளிர வைத்து, வகை பிரித்து விற்பனைக்கு அனுப்புவர். மஞ்சள், சிவப்பு, வெள்ளை நிறங்களில் இக்கற்கள் செய்யப்படுகின்றன. எடைக் கணக்கில் விலை முடிவு செய்யப்படும். பட்டை வெட்டி அவற்றைத் திருச்சிக்கு அனுப்புகின்றனர். அங்குள்ள புகழ் பெற்ற வணிகர்கள், பட்டை தீட்டும் தொழிலில் பழுத்த அனுபவம் உடையவர்கள். மூன்று தோலா எடையுள்ள செயற்கை வைரப் படிகம் 10 ரூபாய் விலை இருக்கும். இதைக் கூர் உருளை வடிவம், சதுர வடிவம், பல கோணங்கள் இவ்வாறு ஓர் அமைப்பில் தேய்த்துப் பட்டை தீட்டி மெருகு கொடுக்க 60 ரூபாய் வரை கூலி கொடுப்பராம். முழு உருவம் பெற்று இவை நகைக் கடைக்காரருக்கு 80 விலைக்கும் பொதுமக்களுக்கு 110 ரூபாய் அளவு விலைக்கும் விற்கப்படுகின்றன.

## சிறுதொழில்கள்

### குளுகோஸ் தொழிற்சாலை

உடுமலைப்பேட்டை வட்டத்தில் அமராவதி அணைக்கு அருகே கமலா சர்க்கரை ஆலை ஏற்பட்டிருக்கிறது. குளுகோஸ், டெக்ஸட்ரோஸ் ஆகியவை இங்கே செய்யப்படுகின்றன.

### டைப்ரைட்டர் பொருள்கள் செய்தல்

டைப்ரைட்டர் என்னும் கையச்சுக் கருவிக்குத் தேவையான தாள், ரிப்பன் ஆகியவை செய்யும் கார்பனிங் புராடக்ட்ஸ் தொழிற்சாலை போத்தனூரில் இருக்கிறது.

## பிளேடு, ரேடியேட்டர், வானொலிப்பெட்டித் தொழிற்சாலைகள்

யு. எம். எஸ். சவர பிளேடு தொழிற்சாலை கோவை நகரில் இருக்கிறது. ஜி. டி. நாயுடு நடத்திவரும் மற்றொரு தொழிற்சாலையான யுனிவர்சல் ரேடியட்டர்ஸ் என்பதில் மோட்டார் வண்டிகளுக்கும் தொழிற்சாலை இயந்திரங்களுக்கும் பயன்படும் ரேடியேட்டர்கள் செய்யப்படுகின்றன.

"யு. எம். எஸ். ரேடியோ பாக்டரி"யில் ஜெர்மன் தொழிற்சாலை ஒன்றின் தொடர்புடன் கிரண்டிக் வானொலிப் பெட்டிகள் செய்யப்படுகின்றன. இப்பெட்டிகளில் பயன்படுத்தப்படும் பொருள்களில் மூன்றிலொரு பங்கு இங்கேயே உற்பத்தி செய்யப்படுகின்றன. ஏனைய இரண்டு பங்கு வெளிநாடுகளிலிருந்து வரவழைக்கப்படுகின்றன.

## ஆராய்ச்சிமுறையில் உணவு உற்பத்தி, பூளைமேடு

இது மைசூரிலுள்ள இந்திய அரசாங்க உணவு ஆராய்ச்சி நிறுவனத்துக்காக நடத்தப்படுகிறது. கொண்டைக்கடலை ஒரு பங்கும், கொழுப்புச் சத்து குறைவாக உள்ள கடலைமாவு மூன்று பங்கும் சேர்ந்த ஒருவகை உணவு, எட்டு மணி நேரத்துக்கு மூன்று டன் வீதம் இந்தத் தொழிற்சாலையில் செய்யப்படுகிறது. ஊறுகாய், நறுமணப் பொருள்கள், உப்பு ஆகியவற்றை இந்த உணவுடன் சேர்த்தும், சேர்க்காமலும் இரு வகையான உணவு தயாரிக்கப்படுகிறது.

இவ்வகை உணவை ஆக்குவதற்குரிய இரு இயந்திரங்கள் ஐக்கிய நாடுகள் சபையின் சர்வதேச குழந்தைகள் உதவி நிதி (Unicef)க் குழுவினரால் வழங்கப்பட்டுள்ளன. இவற்றுள் ஒன்று கோயம்புத்தூரில் பூ. சா. கோ.

குடும்பத்தாரால் பூளைமேட்டில் நிறுவப்பட்டு, நாள் தோறும் 10 டன் அளவுள்ள உணவுப் பொருள் செய்யப் படுகிறது. இவ்வுணவு பள்ளி மாணவருக்குப் பகலுணவுத் திட்டத்தில் படைக்கப்படும்.

## ஆபரணத் தொழில்

கொங்கு நாடு பொன் நிறைந்த பகுதி என்பது பல தலைமுறைகளாக மக்களுடைய நம்பிக்கையாக இருக் கிறது. இக்காலத்தில் பொன்னாலான ஆபரணங்களை அழகுடனும் பொலிவுடனும் செய்யும்தொழில் கோவை நகரில் பெரிதும் பரவியிருக்கிறது. கோவையிலும் பொள்ளாச்சியிலும் கொச்சிப்பகுதியிலிருந்தும் நாகர் கோயிலிலிருந்தும் சிறந்த பொற்கொல்லர்கள் வந்து குடி யேறித் தங்களுடைய கைவினைத்திறனைக் காட்டி வருகின்றனர்,

செல்வர் தொகை பெருகியிருப்பதாலும், தொழிலா ளர்களும் தங்க நகைகளில் தங்கள் வருவாயில் ஒரு பகுதி யைச் செலவிடுவதாலும் கோவை மாவட்டத்தில் ஆபர ணத் தொழிலில் ஆயிரத்துக்கு மேற்பட்ட பொற்கொல் லர் உள்ளனர். காசுமாலை, மாங்காய் மாலை முதலியன வற்றில் புது வடிவங்களை உண்டாக்கி, இம்மாவட் டம் தென்னிந்தியா முழுமைக்கும் நகை அணிபவர்களின் நாகரிகத்தை உருவாக்கிவருகிறது.

## தொழில் வளர்ச்சிக்கான மாதிரித் திட்டம்

இந்தியாவில் 26 இடங்களில் இத்திட்டம் நிறை வேற்றப்பட்டு வருகிறது. தமிழ்நாட்டில், இத்திட்டம் அமலாக்கப்பட்டு வரும் பகுதி கோயம்புத்தூர் மாவட்டத்து ஈரோடுப் பகுதி ஒன்று மட்டுமேயாகும். கீழ்பவானி அணைக்கட்டால் நலம் பெறும் ஆறு இலட்சம் மக்களுக்கு உதவும் முறையில் கோவை—திருச்சி

மாவட்டப் பகுதிகளில் இத்திட்டப்படி பல தொழில்கள் தொடங்கப்பட்டுள்ளன.

இத்தொழில்களை அனைத்து இந்தியக் கிராமக் கைத்தொழில் குழு, தேசிய சிறு தொழில் குழு, அனைத்து இந்தியக் கைத்தறிக் குழு, கைத்தொழில் குழு, தமிழ் நாடு அரசாங்கம் ஆகியோர் நடத்தி வருகின்றனர்.

அனைத்து இந்தியக் கைத்தொழில் குழு, கைக்குத்தல் அரிசி, வர்தா செக்கு, கையால் செய்த காகிதம், தேனீ வளர்த்தல் போன்ற தொழில்களைச் சிற்றூர்களில் தொடங்கியிருக்கிறது. சிறு தொழில் குழுவினர் கொல்லர்க்குப் பயிற்சி தருதல், லாட ஆணி செய்தல், தச்சுப் பயிற்சி நிலையம், மாதிரிப் பட்டறை, தோலை மென்மைப் படுத்துதல் ஆகிய வேலைகளை மேற்கொண்டிருக்கிறது. கைத்தொழில் குழு தையல், பின்னல் வேலை, பூ வேலை, மரப் பொம்மை செய்தல் ஆகியவற்றில் பெண்களுக்குப் பயிற்சி தருகிறது. செங்கல் செய்தல், கயிறு உற்பத்தி, குழந்தைகளுக்கு ஆடைகள் செய்வது போன்ற 21 தொழில்கள் கூட்டுறவு முறையில் நிகழுகின்றன. பல தொழில்களுக்கு அரசாங்கம் கடன் அளிக்கிறது. சாலைகள், பள்ளிக்கூடங்கள், புதிய வீடுகள்—இவை அரசாங்க உதவியுடன் ஏராளமாகத் தோன்றியுள்ளன.

பனைவெல்லம் காய்ச்ச சுல்தான் கிரஷர்ஸ் என்னும் கருவியை வார்ப்புப்பட்டறையினின்றும் அரசாங்கத்தார் வாங்கிக் கொடுக்கின்றனர்.

## தொழிற்பேட்டை

ஈரோடு நகரில் ஒரு தொழிற்பேட்டை இரண்டாம் திட்ட காலத்தில் ஏற்பட்டிருக்கிறது. விவசாயிகளுக்கான கருவிகள் செய்யவும், பொத்தான்களும் விளையாட்டுப் பந்து முதலிய பொருள்கள் செய்யவும் தனித்தனியே தொழில் நிலையங்கள் உள்ளன. அரசாங்க அலுவலகங்

களுக்கு மேசை நாற்காலி முதலியன செய்து கொடுப்பதற்காக மரவேலை செய்யும் கூட்டுறவு நிலையம் ஒன்றும் அமைக்கப்பட்டிருக்கிறது.

காமன் டூல் ரூம் அண்டு சர்வீஸ் சென்டர் என்ற பெயரில் அமைக்கப்பட்டுள்ள தொழிற்கூடத்தில் லேத்துப் பட்டறை, சிலிண்ட்ரிகல் கிரைண்டர் ஆகிய இயந்திரங்கள் வரவழைக்கப்பட்டுள்ளன. கலப்பைகளைக் கடைந்தும் உழவுத் தொழிலுக்கு வேண்டும் பிற கருவிகளைப் பழுது பார்த்தும் கொடுக்கின்றனர்.

பொள்ளாச்சி, உடுமலைப்பேட்டை, பல்லடம் வட்டத்திலுள்ள லெட்சுமிநாய்க்கன் பாளையம் ஆகிய இடங்களில் மூன்றும் திட்ட காலத்தில் தொழிற் பேட்டைகள் நிறுவப்படும். கோயம்புத்தூருக்கு அருகே எச்சனேரியில் 1962-இல் ஒரு கோடி ரூபாய் மூலத்தனத்தோடு ஒரு தொழிற்பேட்டை அமைக்கப்படும். இதற்குரிய ஏற்பாடுகள் தென்னிந்திய ஆலை அரசர்கள் சங்கத்தால் செய்யப்பட்டு வருகின்றன.

## குடிசைத் தொழில்கள்

### விளையாட்டுக் கருவிகள்

டென்னிஸ் பந்துகள், ரப்பர் பிட்டிங்குகள், பிளாஸ்டிக் பொருள்கள் ஆகியவற்றைச் செய்யும் தொழிற் சாலைகளும் இம்மாவட்டத்தில் உள்ளன.

### பொத்தான் தொழிற்சாலைகள்

இந்தியாவில் பொத்தான் தொழிற்சாலைகளில் பெரிய அளவில் நடப்பன 20. இவற்றுள் ஐந்து இம் மாவட்டத்திலுள்ளன.

### தோல் பதனிடுதல்

கோவை மாவட்டத்தில் குறிப்பிடத்தக்க சிறு தொழில்களுள் இதுவும் ஒன்று. மொத்தம் 45 தோல் பதனிடும் தொழிற்சாலைகள் உள்ளன. இத்தொழில்

வளர்ச்சியடைந்துள்ள இடங்கள் கோயம்புத்தூர், போத்தனூர், தாராபுரம், ஈரோடு ஆகியவை.

ஈரோட்டில் இந்திய அரசாங்கத்தார் தோலைப் பதனிடுவது பற்றிய நிலையம் (Leather Finishing Centre) ஒன்றை நிறுவியுள்ளனர். இது சென்னையிலுள்ள சிறு தொழில்களுக்கு நுணுக்க உதவி புரியும் நிறுவனத்தாரால் (SISI) நடத்தப் படுகிறது. திருச்சி, சேலம், கோவை மாவட்டங்களில் தோல் பதனிடுபவர்கள் இங்கு வந்து தோலைப் பதனிடுவதில் எத்தகைய எண்ணெய்களை எந்த அளவில் சேர்க்க வேண்டும் என்பதைத் தெரிந்து பயனடைகின்றனர்.

ஈரோடு குமணங்குட்டையில் மாதிரி செருப்புத் தொழிற்சாலை (Model Footwear unit) ஒன்று இந்திய அரசாங்கத்துச் சிறு தொழில் குழுவினரால் நடத்தப் படுகிறது. கைத்தோலுக்குப் பதிலாக இயந்திரத் தோலைப் பயன்படுத்தவும் புதிய முறைகளைக் கையாளவும் அருந்ததியர்களுக்குப் பயிற்சி தரப்படுகிறது.

இம்மாவட்டத்தின் சிறந்த குடிசைத் தொழில்கள் கைத்தறி நெசவு, சமுக்காள நெசவு, பனியன் பின்னுவது முதலியன. இவைப்பற்றிப் பிறிதோரிடத்தில் கூறியுள்ளோம்.

## முடிவு

ஆலைத்தொழிலோடு இவ்வாறு பல தொழில்களும் செழித்துக் கொழிக்கும் கோவை மாவட்டத்தில் ஒரு தொழிற் புரட்சி ஏற்பட்டிருக்கிறது என்று கூறினும் தகும். மின்சாரத் தேவை பெருகி வருவதால், நீராவி மின்சார நிலையம் அல்லது அணு ஆற்றல் மின்சார நிலையம் இம்மாவட்டத்தில் ஏற்பட்டால்தான், இருக்கும் தொழில்கள் பெருகவும் புதுத் தொழில்கள் சிறக்கவும் வழி பிறக்கும்.

## 19. போக்குவரத்து வசதிகள்

கோவை மாவட்டம் போக்குவரத்து வசதிகள் நிரம்பப் பெற்றது. சாலைகள், இரயில் பாதைகள், ஆகாயவிமான நிலையங்கள் ஆகிய யாவும் இங்கே பெருகியுள்ளன. இவற்றோடு தொடர்பு கொண்ட தொழில்களும் இம்மாவட்டத்தில் வளர்ச்சியடைந்து வருகின்றன.

### சாலைப் போக்குவரத்து

சென்னை நகருக்கு அடுத்தபடியாக, தமிழ்நாட்டில் தனிப்பட்டவர்களின் கார்களின் எண்ணிக்கை கோவை மாவட்டத்தில்தான் மிகுதியாக இருக்கிறது. சென்னை–கோடம்பாக்கம் பகுதிக்கு அடுத்தபடியாக, கோவை நகரில்தான் பளபளப்பான பெரிய கார்களைப் பல வண்ணங்களிலும் புத்தம் புதிய வடிவங்களிலும் காண லாம். இம்மாவட்டத்தில் "எம் டி சி" என்ற எண் வரிசையில் கார்கள் பதிவு செய்யப் பெற்றிருக்கின்றன. இவற்றின் தொகை 9999ஐ மிஞ்சி விட்டதால்,"எம் டி ஈ" என்ற வரிசையிலும் கோவை மாவட்டத்துக் கார்கள் பதிவு செய்யப்படுகின்றன. 1862–இல் இந்நகரில் ஒரு கார் மட்டுமே இருந்தது. அதன் உரிமையாளர் ஸ்டேன்ஸ் என்ற வெள்ளைக்காரர்; அவருடைய காரின் பதிவு எண் CO 1. 1951க்கும் 1961க்கும் இடையே இம்மாட்டத்தில் புதிதாக 15,000 கார்கள் பதிவு செய்யப்பெற்றுள்ளன.

பொதுமக்கள் பயன்படுத்தக்கூடிய லாரிகள் பஸ்கள் ஆகியவற்றின் கணக்கைக் கணித்தால், கோவை மாவட்டம் தமிழ்நாட்டில் முதல் இடம் பெறுகிறது.

சென்னை மாநகருக்கே இரண்டாவது இடம்தான் எனின், வேறு விளக்கம் வேண்டுவதில்லையே?

வாடகைக் கார்கள், ஆட்டோ ரிச்சாக்கள் ஆகியவற்றின் எண்ணிக்கையில் முதல் இடம் சென்னை நகராலும், இரண்டாவது இடம் கோவை மாவட்டத்தாலும் வகிக்கப்படுகின்றன. இம்மாவட்டத்தில் 1951இல் கோவை நகரில் ஆட்டோ ரிச்சாக்கள் முதல் தடவையாக விடப்பட்டன. சென்னை நகரிலும் கோவை நகரிலும் இவ்வகைப் போக்குவரத்து சிறந்து விளங்குவதுபோல, தமிழ்நாட்டின் பிற மாவட்டங்களில் பரவவில்லை என்பது கருத்திற் கொள்ளத் தக்கது.

**பஸ்கள்**

கோவைமாவட்டத்தில் பல ஆண்டுகளாகப் பஸ் போக்குவரத்து, சீரியமுறையில் இயங்கிவருகிறது. பாராட்டுக்குரிய இந்நிலையை உண்டாக்கியவர் அறிஞர் ஜி. டி. நாயுடு ஆவார். இவர் தொடங்கிய யு. எம். எஸ். (யுனைட்டெட் மோட்டார் சர்வீஸ்) நிறுவனத்தார் தங்கள் செலவிலேயே ஒவ்வொரு சிறு நகரிலும் பஸ் சந்திப்பு நிலையங்களை நிறுவியுள்ளனர்.

இம்மாவட்டத்திலுள்ள பொள்ளாச்சி - கோயம்புத்தூர்ப் பாதையில் பஸ் போக்குவரத்து ஜெர்மானிய வணிகக்குழு ஒன்றால் நடத்தப்பட்டு வந்தது. போர்க்காலத்தில் ஜெர்மானியருடைய தொழில்கள் தடைசெய்யப்பட்டதால், அந்த நிறுவனத்தைக் கோயம்புத்தூர் மாவட்டக் கழகம் நடத்திவந்தது. பிறகு, அக்கழகத்தினர் அந்த பஸ் போக்குவரத்துத்தொழிலை, ஆனைமலை பஸ் டிரான்ஸ்போர்ட்டுக் கம்பெனியிடம் ஒப்புவித்தனர். ஏ. பி. டி. என்னும் இந்த நிறுவனமும், பிற நிறுவனங்களும் ஜி. டி. நாயுடு வகுத்தவழியில் பஸ் போக்குவரத்

துத் தொழிலை நன்றாக நடத்தி வருகின்றன. இம்மாவட்டத்தில் 750 பஸ்கள் இயங்குகின்றன.

கோயம்புத்தூர், ஈரோடு, திருப்பூர் ஆகிய நகரங்களில் உள்ளூர்ப் பஸ் போக்குவரத்து நடைபெறுகிறது.

தமிழ்நாடு அரசாங்கம் நடத்திவரும் பஸ்கள் கோவைமாநகரிலிருந்து சென்னை, நாகர்கோயில் போன்ற நெடுந்தொலைவிலுள்ள ஊர்களுக்குச் செல்லுகின்றன. நாகர்கோயில் வழியாகத் திருவனந்தபுரத்துக்குச் செல்லுவது கொங்கு நாட்டவர்க்கு ஒரு பெருவாய்ப்பாகும். மைசூருக்குச் செல்லுபவர்கள், மேட்டுப் பாளையம் உதக மண்டலம் வழியாகச் செல்லுவதற்கும் இதுபோன்ற வசதி ஏற்படுவது நலம் பயக்கும்.

**டயர் தொழிற்சாலை**

1942 ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில், போர்க் காலத் தேவைகளை நிறைவேற்றக் கோயம்புத்தூரில் 'ஸ்டேன்ஸ் மோட்டார்ஸ் டயர்சோல்ஸ்' தொழிற்சாலை வெள்ளைக்காரர்களால் தொடங்கப் பெற்றது; இது, இந்தியாவில் பயன்படுத்தப்படும் எவ்வகையான டயரையும் செப்பனிடும் ஆற்றல் படைத்த தொழிற்சாலையாக விளங்குகிறது.

**சாலைகள்**

இம் மாவட்டத்திலுள்ள சாலைகள் தேசிய நெடுஞ் சாலைகள், மாவட்ட நெடுஞ்சாலைகள், மலைச்சாலைகள், கயிறு—கம்பிச் சாலைகள் எனப் பலவகைப்படும்.

சென்னையிலிருந்து கள்ளிக்கோட்டைக்குச் செல்லும் தேசிய நெடுஞ்சாலை இம்மாவட்டத்தின் வழியாகச் செல்லுகிறது.

மலைச்சாலைகளுள் வால்பாறை மலைச்சாலை கேரளத்தைத் தமிழ் நாட்டோடு இணைக்கிறது. இந்த மலைப்

பாதை மிக நன்ருகப் போடப்பட்டிருப்பினும் ஏற்றம் மிகுதியாக இருப்பதால் 'பெரிய மனிதர்' பலருக்கு இந்த மலைக்கு வந்து சேர்ந்ததும் வயிற்றுப் போக்கு ஏற்படு கிறதாம்.

ஆனைமலையில் ஏற்பட்ட முதல் சாலை 1851-இல் டாப்சிலிப்பிலிருந்து சிச்சலி என்னுமிடத்திற்கு 10 கிலோ மீட்டர் தொலைவுக்குப்போடப்பட்டது. 1868-இல் அடிவாரத்திலிருந்து டாப்சிலிப்பிற்குச் சாலை போடப் பட்டது. இந்தச்சாலை, சேதுமடை—டாப்சிலிப் மலைச் சாலை என்ற பெயரில் 1934-இல் புதிதாகச் செம்மை யாய்ப்போடப்பட்டது: ஆனைமலையின் மரங்களும் மற்றப் பொருள்களும் இவ்வழியாகவே நமக்கு வரு கின்றன. 1955-இல் உளாந்தி பள்ளத்தாக்குப் பாதை யும் 1958-இல் பரம்பிக்குளம் திட்டத்தை நிறைவேற்ற மலைப்பகுதியில் பல புதிய பாதைகளும் போடப்பட்டன.

நீலகிரி மாவட்டத்துக்குச் செல்லும் மனங்கவர் மலைச் சாலை இம் மாவட்டத்து மேட்டுப்பாளையத்தில் தொடங்குகிறது.

ஆனைமலையிலுள்ள தோட்டங்களில் விளையும் தேயிலை ஏலக்காய் முதலிய பலவகைப் பொருள்களை எளிதில் பொள்ளாச்சி இரயில் நிலையத்துக்கு அனுப்புவதற்காக கம்பிப்பாதை ஒன்றை வெள்ளைக்காரத்தோட்ட முதலாளி கள் 1926 முதல் முயன்று 1928 இல் அமைத்து முடித் தனர். இந்தப் பாதையை ஆனைமலை ரோப்வே கம்பெனி யார் மோனே கேபிள் சிஸ்டம் மூலம் இயக்கி வந்தனர். மலைச்சாலையின் அடிவாரத்திலுள்ள வண்ணான்துறைப் பாலம் வரை 9½ மைலுக்கு இந்தப் பாதை இருந்தது. இப்பாதை அமைக்க இரண்டு ஆறுகளின்மீது அணை களும், மின்சார நிலையமும், குடியிருப்புக்களும் கட்டப் பட்டன. சில ஆண்டுகளாக, இந்தப் போக்கு வரத்து

நடைபெறவில்லை. காலம் மாறிவிட்டது. பிற போக்கு வரத்து வசதிகளும் பெருகிவிட்டன.

## இரயில் போக்குவரத்து

பொள்ளாச்சிப் பகுதியில் கோவை மாவட்டக் கழகத்தாலும் பிறபகுதிகளில் வெள்ளைக்காரக் கம்பெனிகளாலும் இரயில் பாதைகள் போடப்பட்டன.

இம்மாவட்டத்தில் அகலப்பாதை, அகலக்குறைவான பாதை, குறுகிய அகலமுள்ள மலைப்பாதை என்னும் மூவகையான பாதைகள் மொத்தம் 370 கி. மீ. தொலைவுக்கு உள்ளன. தாராபுரம், பவானி, கோபிச்செட்டிபாளையம், தவிர எல்லா வட்டங்களுக்கும் இரயில் வசதி உண்டு. தமிழ்நாட்டின் தலைநகரான சென்னையிலிருந்து கவர்னரும் ஏனையோரும் கோடை காலத்தில் தங்கும் உதகமண்டலத்துக்குச் செல்லும் இரயில்பாதை இம் மாவட்டத்து வழியாகவே செல்லுகிறது. இம் மாவட்டத்துப் பொருள்களை வெளியிடங்களுக்கு அனுப்ப வசதியாக, சென்னை கொச்சி ஆகிய இரு துறைமுகங்களுக்கும் நேரடியான இரயில் போக்குவரத்துக்கள் உள்ளன.

கோயம்புத்தூர்,போத்தனூர், ஈரோடு, பொள்ளாச்சி ஆகிய இடங்களில் இரயில் சந்திப்புக்கள் உள்ளன.

சத்தியமங்கலம் வழியாக மைசூருக்கு இரயில்பாதை ஏற்படவேண்டுவது இம்மாவட்டத்தின் இன்றியமையாத் தேவையாக இருந்துவருகிறது.

போத்தனூரில் இரயில்வேத் துறையினர் ஒரு தொழிற்கூடம் நிறுவியுள்ளனர். இரண்டாம் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் (1956-1961) இத்தொழிற்கூடம் பெரு வளர்ச்சியடைந்திருக்கிறது. இது, 1959-இல் கட்டி முடிக்கப்பெற்றது. "சைகை" காட்டப்பயன்படும் பல வகையான கருவிகள் தென் மண்டல இரயில் நிறுவனத்துக்காக இங்கே செய்யப்படுகின்றன. இத் தொழிற்கூடம் 24 லட்சம் ரூபாய்ச் செலவில் இந்திய அரசாங்கத்தாரால் கட்டப்பெற்றிருக்கிறது.

# கோவை மாவட்டத்தில் இரயில் பாதைகள்

| பாதையின் அகலம் | | போக்குவரத்து ஏற்பட்டதேதி | மைல் | கி.மீ. |
|---|---|---|---|---|
| 5' 6" | சங்கரி துர்க்கம் (சேலம்மாவட்டம்) -போத்தனூர் | 12-5 -1862 | 71.18 | 115 |
| | போத்தனூர்-கோயம்புத்தூர் | 1-2 -1873 | 3.78 | 6 |
| | கோயம்புத்தூர்-மேட்டுப்பாளையம் | 31-8 -1873 | 21.97 | 35½ |
| | கொடுமுடி-ஈரோடு | 1-1 -1868 | 23.00 | 37 |
| 3' 3-3/8" | போத்தனூர்; பொள்ளாச்சி | 15-10-1915 | 25.04 | 40 |
| | திண்டுக்கல்-பொள்ளாச்சி | 19-11-1928 | 74.72 | 121 |
| | பொள்ளாச்சி-பாலக்காடு (கேரளம்) | 1-4 -1932 | 50.05 | 80 |
| 2' 6" | மேட்டுப்பாளையம்-உதகமண்டலம் | 31-8 -1873 | 29.00 | 47 |

## ஆகாயவிமானப் போக்குவரத்து

இம்மாவட்டத்தில் இரண்டு விமானநிலையங்கள் உள்ளன. பூளைமேட்டிலுள்ள விமான நிலயம் பொது மக்கள் செல்லும் விமானங்கள் இறங்குவதற்காக ஏற் பட்டது. இது 1959-இல் திருத்தியமைக்கப்பட்டது. இந்தியாவிலேயே வேறு எந்த நகரத்திலும் நகருக்கு அண்மையில் இவ்வாறு விமானநிலையம் அமையவில்லை என்று கூறப்படுகிறது.

மற்ரொரு விமான நிலயம், கோவையிலிருந்து 15 கிலோமீட்டர் தொலைவிலுள்ள சூலூரில் போர்க்காலத்தில் (1941 - 1945) உருவாயிற்று. இராணுவ விமானங்கள் பயன்படுத்தவும், அவ்விமானங்களைச் செப்பனிடவும் சூலூர் நிலயம் உதவுகிறது; 1960-க்குப் பிறகு பெருஞ்செலவில் இந்நிலயம் விரிவாக்கப்பட்டிருக்கிறது. 1955 இறுதியில் ரஷ்யத் தலைவர் குருசேவ் இவ்விமான நிலயத்தில் வந்திறங்கியபோது, 10 இலுசியின் விமானங் கள் வந்த காட்சி கண்டோர் மனத்திலிருந்து மறைவது எளிதன்று.

கோவை நகரிலிருந்து நாள்தோறும் சென்னை, பெங்க ளூர், கொச்சி, திருவனந்தபுரம் மதுரை ஆகிய நகரங் களுக்கு, "இந்தியன் ஏர்லைன்ஸ்" விமானங்கள் செல்லு கின்றன. கோவையிலிருந்து புறப்பட்ட அன்றே டில்லிக் குப் போய்ச்சேர வசதியாக, கோவையில் விமானம் புறப் படும் நேரம் வரையறுக்கப்பட்டிருக்கிறது.

கோயம்புத்தூரில் "ப்ளையிங் கிளப்" எனப்படும் விமானிகள் மன்றம் ஒன்று இருக்கிறது. ஐந்து பெண் களும் 120 ஆண்களுமாக மொத்தம் 125 இளைஞர் இம் மன்றத்து உறுப்பினராய்ச் சேர்ந்து ஆகாயவிமானம் ஓட்டும் பயிற்சியைப் பெற்றுவருகின்றனர் என்பது கொங்குநாட்டவர் நெஞ்சத்தின் உறுதிக்குச் சான்ருகும்.

## வானொலி நிலையம்

*1962 அளவில் கோயம்புத்தூரில் ஒரு வானொலி நிலையம் இந்திய அரசாங்கத்தாரால் நிறுவப்படும். இது 2 கிலோவாட்டு ஆற்றல் படைத்ததாக இருக்கும்.*

## தொலைபேசி

*தொழில் வாணிகப் பெருக்கால், கோயம்புத்தூர் நகரில் ஈராயிரத்துக்கு மேற்பட்ட தொலைபேசிக் கருவிகள் உள்ளன. தானே இயங்கும் தொலைபேசி இயந்திர வசதி 1960இல் கோயம்புத்தூரில் ஏற்பட்டிருக்கிறது. இந்நகரிலிருந்து நாள்தோறும் வெளியூர்களுக்கு 3,000 தடவை தொலைபேசியில் பேசுகிறார்கள்.*

*ஈரோடு நகரிலும் தொலைபேசி நிலையம் பெரிய அளவில் அமைக்கப்பட்டு வருகிறது. இந்நகரங்கள் தவிர, 12 நகரங்களில் தொலைபேசி வசதிகள் செய்யப் பட்டுள்ளன.*

## 20. கல்வி நிலையங்கள்

கோவை மாவட்டம் கல்வித்துறையில் சிறந்து விளங்குகிறது. பலநெடு ஆண்டுகளாகக் கோவை நகரம் தொடக்கக்கல்வியில் உயர்நிலை வகித்து வந்திருக்கிறது. 1955க்குப்பின் இம் மாவட்டத்திலும் தொடக்கப் பள்ளிகள் மேலும் மிகுதியாக ஏற்பட்டுள்ளன; உயர்நிலைப் பள்ளிகளின் எண்ணிக்கையும் பல மடங்காகியிருக்கிறது.

தமிழ், குஜராத்தி, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் பாடங்களைக் கற்பிக்கும் உயர்நிலைப் பள்ளிகள் இருப்பது கோவைநகரின் சிறப்பு. தமிழ்நாட்டில் ஊராட்சிமன்றம் நடத்தும் ஒரே உயர்நிலைப்பள்ளி இம்மாவட்டத்து வால் பாறையில் இருக்கிறது.

ஆங்கில மொழியின் வாயிலாகக் கல்வி கற்பிக்கும் ஸ்டேன்ஸ் உயர் நிலைப்பள்ளி 1862-இல் சர் ராபர்ட் ஸ்டேன்ஸ் என்ற வெள்ளைக்காரரால் ஏற்படுத்தப்பட்டு. இன்றளவும் புகழுடன் விளங்கி, கோவை மாநகருக்குப் பெருமை தருகிறது. சிறந்த முறையில் நடைபெற வேண்டுமென்பதற்காக, ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையினர் மட்டுமே இங்கு மாணவராகச் சேர்த்துக் கொள்ளப்படுகின்றனர்.

ஆங்கிலம் தமிழ் வாயிலாகக் கற்பிக்கும் உயர்நிலைப் பள்ளிகளில் முறையே மணிஸ் உயர்நிலைப்பள்ளியும் பெரியநாயக்கன் பாளையத்தில் இராமகிருஷண வித்யாலயம் நடத்தும் உயர் நிலைப்பள்ளியும் பெண்களுக்கான பள்ளிகளில் அவிநாசிலிங்கம் மனை இயல் உயர்நிலைப் பள்ளியும் பி. எஸ். ஜி. குடும்பத்தார் நடத்தும் கன்னியா குருகுலமும் சிறப்பாக நடைபெறுகின்றன.

தொடக்க, உயர்நிலைப் பள்ளிகளைவிடப் பல்கலைக் கழகக் கல்வியும் தொழிற் கல்வியும் இம்மாவட்டத்தில் மிகச் சிறந்த நிலையில் இருக்கின்றன.

| | | | மகளிர்க்கு மட்டும் |
|---|---|---|---|
| கலைக் கல்லூரிகள் | ... | 5 | 2 |
| ஆசிரியப் பயிற்சிக் கல்லூரிகள் | ... | 1 | 1 |
| மனை இயல் கல்லூரி | ... | – | 1 |
| வேளாண்மைக் கல்லூரி | ... | 1 | |
| பொறி இயல் கல்லூரிகள் | ... | 3 | |
| காட்டியல் கல்லூரி | ... | 1 | |
| தமிழ்ப் புலவர் கல்லூரி | ... | 1 | |
| உடற் பயிற்சிக் கல்லூரி | ... | 1 | |
| தொழிற் கல்லூரி (பாலிடெக்னிக்) | ... | 3 | |
| ,, ,, (தேசிய டிப்ளமா) | | 2 | |
| விவசாயப் பள்ளி (தமிழ்) | .. | 2 | |
| கிராமியக் கல்லூரி | ... | 1 | |
| விமானப் படைக் கல்லூரி | ... | 1 | |
| சமூகப் பணிப் பள்ளி | ... | 1 | |
| | | 23 | 4 |

சென்னை நகருக்கு வெளியே, உயர் கல்வி புகட்டும் ஏராளமான நிலையங்கள் இருப்பது தமிழ்நாட்டில் கோவை நகரில் மட்டுமேயாகும்.

இக் கல்லூரிகளில் பொறியியல், மனை இயல், விவசாயம், ஆகிய துறைகளில் எம். எஸ்சி. படிப்பு இருப்பதும் குறிப்பிடத்தக்கது. இந்திய அரசாங்கம் நடத்தும் விவசாய, காட்டியல், விமானப் படைக் கல்லூரிகள், கரும்பு ஆராய்ச்சி நிலையம், தாவர ஆராய்ச்சி நிறுவனம் ஆகியவை கோவை நகரில் இருக்கின்றன.

பொறியியல் துறைக்காக, கோவை நகர எல்லைக்குள் மூன்று கல்லூரிகள் உள்ளன. 1920 அளவில் (இந்தியா, பாகிஸ்தான், பர்மா, ஏடன் உள்ளிட்ட) இந்தியாவில் பூனா, ரூர்க்கி, கிண்டி என்னும் மூன்று இடங்களில் மட்டுமே பொறியியல் கல்லூரிகள் இருந்தன என்பதை எண்ணிப் பார்த்தால் கோவையின் பெருமை தெரியும்; தொழிற் கல்வித் துறையில் நம் நாடு அண்மையில் அடைந்துள்ள அரிய முன்னேற்றத்தையும் அறியலாம்.

கூட்டுறவுத் துறையில் அலுவலாளராக விரும்புபவர்க்கு ஒரு பள்ளியும் சவுளி ஆராய்ச்சி நிலையமும் இந்தியாவின் தாவர ஆராய்ச்சி நிறுவனத்தின் தென் மண்டலத் தலைமை நிலையங்களும் கோவை நகரில் உள்ளன. எனவே, கல்வித் துறையில் தமிழ்நாட்டில் மட்டுமின்றி, இந்தியாவிலேயே கோயம்புத்தூர் புகழ் பெற்றிருக்கிறது. உலைக்கள ஆராய்ச்சி நிறுவனம் (Foundry Research Institute) தேயிலை ஆராய்ச்சி நிலையம் ஆகியவையும் இம்மாவட்டத்தில் ஏற்பட இருக்கின்றன.

மருத்துவக் கல்லூரி ஒன்று இம் மாவட்டத்தில் மூன்றும் திட்டக் காலத்தில் தொடங்கப்படும் என்று அரசாங்கத்தினர் அறிவித்துள்ளனர். 1931 வரை கோவை மாநகரில் ஒரு மருத்துவப் பள்ளி (Medical School) இப்போது அரசாங்கக் கலைக் கல்லூரி இருக்கும் கட்டிடத்தில் இருந்துவந்தது என்பதையும் இங்கே நினைவிற் கொள்ளலாம்.

கோயம்புத்தூரில் ஒரு பல்கலைக் கழகம் அமைக்க 1956-இல் முயற்சி நடைபெற்றது. இது பயனடையவில்லை. மூன்றும் திட்டக் காலத்தில், இந்நகரில்-மதுரையில் இருந்து வருவதுபோல-சென்னைப் பல்கலைக் கழகத்தின் கிளை அலுவலகங்களும் கிளை நூலகமும் ஏற்படும்;

பல பாடங்களில் எம்.ஏ., எம்.எஸ்.சி., பயில வசதிகள் செய்யப்படும்; அத் துறைகளில் பேராசிரியர்களைப் பல் கலைக் கழகத்தினர் கோவையில் நியமிப்பார்கள். வேளாண்மைத் துறைக்குச் சிறப்புத் தரும் கிராமியப் பல்கலைக் கழகம் கோவையில் ஏற்படக்கூடுமென்று தெரிகிறது.

கோவைநகரில் சில கல்லூரிகளில் வணிகரின் சாயல் தெரிகிறது. பெயரளவுக்கு ஒருவர் கல்லூரி முதல்வராக இருப்பதும், அன்றாட அலுவல்களைக் கவனிக்கத் தனி யொரு அலுவலர் (P. A. to the Principal) இருப்பதும் இந் நகர்க்கல்லூரிகள் சிலவற்றில் நிலவி வரும் முறையாகும். கல்லூரிகளின் கட்டிடங்கள் விரைவில் கட்டி முடிக்கப் பெறுவதும் இம்மாவட்டத்திற்குரிய சிறப்பாகும். அமெ ரிக்கப் பல்கலைக் கழகங்கள், அமெரிக்காவிலுள்ள தொழில் அறிஞர் மன்றங்கள் ஆகியவற்றின் பட்டம் பெற்றவர்கள் தமிழ்நாட்டில் இம்மாவட்டத்திலேயே மிகுதியாக உள்ளனர். கல்வித் துறை வளர்ச்சி பற்றிய பல கருத்தரங்குகள் இம் மாவட்டத்தில் — பெரிய நாயக்கன் பாளையம் இராமகிருஷ்ண வித்தியாலயத் திலும் பூளைமேடு பூ. சா. கோ. கல்லூரியிலும்—நடை பெற்றுள்ளன.

தமிழைக் கல்லூரி மொழியாக்குவதற்கு இம்மாவட் டத்திலுள்ள சில கல்லூரிகள் பெரிதும் பாடுபட்டு வரு வது போற்றுதற்குரியது. தமிழ்நாட்டுக்கு இத்துறை யில் இம்மாவட்டம் வழிகாட்டிவருகிறது.

## தொழிற் கல்லூரிகள்

### அரசாங்கப் பொறி இயல் கல்லூரி, கோயம்புத்தூர்
### Government College of Technology, Coimbatore

கோயம்புத்தூரில் ஒரு பொறி இயல் கல்லூரி தொடங்க, தொழிலறிஞர் ஜி. டி. நாயுடு இரண்டு லட்சம் ரூபாய் நன்கொடையும் மூன்றாண்டுகளுக்குக் கல்லூரி

தற்காலிகமாக நடைபெற வாடகையின்றிக் கட்டிடமும் வழங்கினர். இதை ஏற்றுக்கொண்டு 9—7—1945-இல் இக் கல்லூரியைச் சென்னை மாநில அரசாங்கம் நிறுவியது. 1950 வரை அர்தர் ஹோப் காலேஜ் ஆப் டெக்னலஜி என்ற பெயரில் இக்கல்லூரி பூளைமேட்டில் இருந்துவந்தது; அதன்பின்னர் புதிய பெயரில் விவசாயக் கல்லூரியைச் சேர்ந்த இடத்தில் கட்டிடங்கள் கட்டப் பட்டு, கல்லூரி அங்கே மாற்றப்பட்டது.

தொடக்கத்திலிருந்து சிவில், எலக்ட்ரிக் பிரிவுகளிலும் 1952 முதல் மெகானிகல் பொறியியல் பிரிவிலும் படிப்பு ஏற்பட்டது.

போர்க் காலத்தில், பிரிட்டிஷார் பத்திரமாகத் தங்கியிருக்கக் கோவை காட்டியல் கல்லூரியில் சில விடுதிகள் கட்டப்பட்டிருந்தன. அவையே முதலில் இக் கல்லூரி மாணவரின் உணவு விடுதியாகப் பயன்பட்டன. இக் கல்லூரிக்கு 1960-இல் மிகச் சிறந்த கட்டிடங்கள் கட்டப்பட்டுள்ளன. இயந்திரங்களும் ஆய்வுக் கூடங்களும் தொழிற்சாலைகளும் மிகவும் நல்ல முறையில் உள்ளன. இயந்திரப் பொறியியல் பகுதியின் ஆய்வுக் கூடமும் தொழிற்சாலையும் இணையற்று விளங்குகின்றன. இக் கல்லூரிக்காக அரசாங்கம் ஒரு கோடி ரூபாய் செலவு செய்திருக்கிறது.

### பூ. சா. கோ. பொறி இயல் கல்லூரி, பூளைமேடு, கோயம்புத்தூர்
### (P. S. G. & Sons Charities College of Technology)

கோவை மாநகரில் புகழுடன் விளங்கும் தொழிலதிபர்களான பி. எஸ். ஜி. குடும்பத்தார் 1920–இல் ஒரு சிறு தொழிற்சாலையையும், 9—11—1927-இல் தச்சு வேலை, இயந்திர வேலை, மின்சார வேலை, அச்சு வேலை ஆகியவற்றில் ஓரளவு பயிற்சியளிக்கும் பள்ளி ஒன்றை

(Industrial Institute) யும் தொடங்கினர். பள்ளி பெரிய அளவில் வளர்ச்சியடைந்தது; இதையொட்டிய தொழிற் கூடமும் (Workshop) பல்கிப் பெருகியது. பம்ப் செட், டீசல் இயந்திரம், மின்சார மோட்டார் ஆகியன இங்கே செய்யப்படுகின்றன. இதன் விளைவாக மின்சாரம், இயந்திரம், அச்சுத் தொழில் என்னும் மூன்று துறைகளில் (L. E. E., L.M.E.,L. P. T. என்ற) டிப்ளமா வகுப்புக்கள் 1939-இல் தொடங்கப்பெற்றன. 1944-இல் நூல் நெசவு பற்றிய (L.T.M.) படிப்பும் ஏற்பட்டது. இவை இப் போது பி. எஸ். ஜி. பாலிடெக்னிக் என்ற நிறுவனத் தால் நடத்தப்பட்டு வருகின்றன.

மேலே குறிப்பிட்ட நிறுவனங்களின் முழு வளர்ச்சி தான் இன்றைய பி. எஸ். ஜி. கல்லூரியாக 1951-இல் உருவாயிற்று.

மூன்று துறைகளிலும் பி. ஈ. பட்டப் படிப்பும், மின்சார இயந்திர அமைப்புப் (Electrical Machine Design) பாடத்தில் 10 மாணவருக்கு 15 மாதங்களுக்குப் பயிற்சி யளிக்கும் எம். எஸ். சி. படிப்பும் இக்கல்லூரியில் உள்ளன.

விஞ்ஞான-தொழில் ஆராய்ச்சி நிறுவனத்துக்காக (C.S. I. R.) இக்கல்லூரியினர் சில முறைகளில் ஆராய்ச்சிகள் செய்துள்ளனர்.* இக்கல்லூரியின் தொழிற்கூடங்கள் சிறப்பாக அமைந்துள்ளன. இந்தியா வில் தொழிற் கல்லூரி ஒன்றில் ** 'காஸ் டர்பைன்' கருவி அமைக்கப்பட்டது இங்குதான்.

* Development and Investigation of Master Frequency changer; Development of Magnetic Amplifier; Design and construction of Pelton Wheels.

** Gas Turbine capable of developing 60. H. P. Continuous rating.

## சி. ஐ. ட்டி. (Coimbatore Institute of Technology) பூளைமேடு, கோயம்புத்தூர்.

இக் கல்லூரி கோவை நகரில் புகழ் பெற்றுள்ள ஆலை முதலாளியான ரெங்கசாமி நாயுடு அற நிலையக் குழுவின் நிதியுதவியாலும் நன்கொடையாளர் குடும்பத்தின் செல்வாக்காலும் முன்னாள் இந்திய நிதி அமைச்சர் டி. டி. கிருஷ்ணமாச்சாரியின் ஆதரவாலும் பலத்த எதிர்ப்புக்கிடையே 6-8-1956-இல் தொடங்கப்பட்டது. மிக விரைவில் கட்டிடங்களைக் கட்டிய சிறப்பு இக் கல்லூரிக்கு உண்டு.

மூன்று துறைகளிலும் பொறி இயல் பட்டப் படிப்பு இக் கல்லூரியில் கற்பிக்கப்படுகிறது. இக்கல்லூரியின் ஒரு பகுதியாக, இயந்திரப் பொறியியல் துறையில் தொழிலில் இருந்துகொண்டே படிக்கும் வாய்ப்பு (Sandwich Course in L. M. E. Diploma) 1962-இல் ஏற்படும்.

## ஆகாய விமானப்படைக் கல்லூரி.

இந்திய அரசாங்கத்தின் பாதுகாப்பு அமைச்சரவை விமானப் படையினர்க்காக ஜோத்பூர், பெங்களூர், கோயம்புத்தூர் இம்மூன்று நகரங்களிலும் கல்லூரிகளை நிறுவியிருக்கிறது,

ஜோத்பூரிலுள்ள கல்லூரி, விமானத்தை ஓட்டும் பயிற்சி முறைகளை விமானிகளுக்குப் புகட்டுகிறது. பெங்களூர் ஜலஹல்லியிலுள்ள கல்லூரி மின்சார வேலை, சைகை காட்டுதல், மருத்துவ முறை, இயந்திரக் கருவிகளைச் செப்பனிடல், கணக்கு வைத்திருத்தல் ஆகிய பயிற்சிகளைச் சொல்லிக் கொடுக்க ஏற்பட்டது. விமானிகள் தரையிலிருக்கும்போது செய்ய வேண்டிய கடமைகளைப் பற்றி அவர்களுக்கு ஓராண்டுக் காலத்துக்குப் பயிற்சி கொடுக்கும் கல்லூரி (Air Force Administrative

Staff College) கோயம்புத்தூரில் இருந்து வருகிறது. விமானத்தின் கருவிகள், விமானப் போக்குவரத்தின் ஆட்சி முறை, கணக்கு வைத்திருப்பது, கல்வித்துறை, எதிர் பாராத சூழ்நிலைகளில் செய்யவேண்டும் வேலைகள் ஆகியவை பற்றிக் கற்றுக் கொடுக்கப்படுகின்றன. வெளி நாடுகளின் விமானப் படை அலுவலர்களும் இக் கல்லூரியில் சில சமயம் பயிலுகின்றனர்.

'கருடா' என்னும் கடற்படைக் கப்பலின் ஒரு பகுதி யான கடற்படை ஜெட் விமானம், இக் கல்லூரியினர் பயிற்சி பெறுவதற்குத் துணையாக, கொச்சியில் வைக்கப் பெற்றிருக்கிறது.

### அவிநாசிலிங்கம் மகளிர் மனையியற் கல்லூரி, கோயம்புத்தூர்-11

வாழ்க்கை சீரும் சிறப்பும் பெற, குடும்பத்தை நன்கு நடத்தக்கூடிய கல்வி முறை பெண்களுக்கு இருக்க வேண்டுமென்ற சிந்தனை அமெரிக்காவில் முதலில் ஏற் பட்டு நம் நாட்டிலும் பரவி இருக்கிறது, சத்தும் சுவையு முள்ள உணவைச் சமைப்பது, உடல்நல-துப்புரவு முறை அறிந்திருத்தல், குழந்தைகளை வளர்த்தல், வருவாய்க்கு ஏற்பக் குடும்பச் செலவு செய்யும் முறை, மனையை அழகு பட வைத்திருப்பது ஆகியவை பற்றிக் கற்பிக்கும் துறைக்கு 'மனையியற் கல்வி' என்று பெயரிடப் பெற்றிக் கிறது.

இக் கல்வி இந்தியாவில் சில இடங்களில் கற்பிக்கப் படுகிறது. கோவையிலுள்ள அவிநாசிலிங்கம் மகளிர் மனையியற் கல்லூரி இக் கல்விக்கென்றே தனியாக அமைந்தது. இது 1957 ஜூலை 24 முதல் நடைபெற்று வருகிறது. முன்னாள் கல்வியமைச்சர் தி. சு. அவிநாசி லிங்கத்தின் கொடை வன்மையால் இந்திய அரசாங்கத்து மானிய உதவிகளுடன் இது உருவாயிற்று. தென்

இந்தியாவிலுள்ள நான்கு மாநிலங்களுக்கும் உரிய கல்லூரியாக இது இருந்து வருகிறது.

கோயம்புத்தூர் நகரின் வடபகுதியில் காட்டியல் கல்லூரிக்கு அருகே ஒரு சிறந்த இடத்தில் ஒன்பது ஏக்கர்ப்பரப்பில் இக் கல்லூரி அமைந்துள்ளது. கல்லூரியின் நான்குமாடிக் கட்டிடங்களும் ஸ்ரீ இராமகிருஷ்ணர் கோயிலும் உணவு விடுதிகளும் காண்பார் உள்ளங்களை ஈர்க்கும் தோற்றப் பொலிவுடன் விளங்குகின்றன. இதைச் சேர்ந்த (மனையியல்) உயர்நிலைப்பள்ளி 1955 முதலும் சிறுவர் பள்ளி (Nursery School) *1960* முதலும் நடைபெற்று வருகின்றன.

பல்கலைக்கழகப் புகுமுக வகுப்பு, பட்டப் படிப்பு எம். எஸ்சி. படிப்பு ஆகிய மூன்று நிலைப் படிப்புக்கள் உள்ளன. புகுமுக வகுப்பில் பயிலுபவர்கள் மருத்துவ, விவசாய, கால்நடை, இசைக் கல்லூரிகளில் சேருவதற்கேற்பப் பாடங்கள் அமைந்துள்ளன.

பட்டப் படிப்பில் பி. எஸ்சி. (மனையியல்), பி. ஏ, (பொருளாதாரம்) ஆகிய இரு படிப்புக்களும் உள்ளன. பி. ஏ. பொருளாதாரப் படிப்பு, தமிழ் வாயிலாகவும் பிற படிப்புக்கள் ஆங்கில மொழி வாயிலாகவும் கற்பிக்கப்படுகின்றன.

மனை இயல் துறையில் எம். எஸ்சி. வகுப்பும் நடைபெறுகிறது. இப் பட்டம் பெற்றவர்கள் பிஎச். டி. பட்டம் பெற ஆராய்ச்சி செய்யும் தகுதியுடையவர்கள் ஆவர். சத்துணவு பற்றி எம். எஸ்சி. (M. Sc. in Food and Nutrition) படிப்பு *1961* - இல் தொடங்கப் பெற்றிருக்கிறது.

இல் வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்களைப் பற்றி இக்கல்லூரியில் கற்பிக்கப்படுகிறது. உணவு,

வீடு, உடை, பணம், வீட்டை அழகுபட அமைத்தல், உடல் நலம், நோயினின்றும் குழந்தைகளைப் பாதுகாத்தல், உணவு விடுதிகளை மேற்பார்வையிடல் ஆகியவையும் கற்பிக்கப் படுகின்றன. சத்துள்ள உணவுகள் எவை? இக் கால முறைப்படி உணவைச் சமைப்பது எவ்வாறு? என்பவற்றைச் சொல்லிக் கொடுக்கிறார்கள். இலக்கிய ஆர்வம்,உள நூல் அறிவு,இசையறிவு,இந்தி ,தமிழ் மொழியறிவு ஆகியவற்றை மாணவிகளுக்குப் புகட்டுகின்றனர்.

நாள்தோறும் வழிபாடு உண்டு. சாரதாமணி தேவியார் நாள், கலைமகள் விழா ஆகியவை கொண்டாடப் படுகின்றன. தையல் இயந்திரம், இஸ்திரிப்பெட்டி ஆகியவை மாணவிகளுக்கு வாடகைக்கு வழங்கப் படுகின்றன. நூல் நிலையமும் ஆய்வுக் கூடங்களும் நன்முறையில் நிறுவப் பெற்றிருக்கின்றன. தமிழகத்திற்கு வெளியேயிருந்தும் பல மாணவிகள் வந்து உணவு விடுதியில்தங்கிக் கல்வி பயிலுகின்றனர். மாணவிகள் இடையிடையே வெளியிடங்களுக்கு அழைத்துச் செல்லப்படுகின்றனர்; ஆங்காங்கு நடைபெறும் சமூகக் கல்வியின் நிலையை அறிந்துகொள்ள இப் பயணங்கள் துணை புரிகின்றன. இங்கு பயின்றவர்கள், வட்டார வளர்ச்சித் துறை, மருத்துவ மனைகளில் உணவு மேற்பார்வையாளர் (Dietition), கல்வி நிலையங்களில் மனையியல் ஆசிரியை போன்ற பல வேலைகளில் சேர்த்துக்கொள்ளப் படுகின்றனர். கிராம சேவிகாப் பயிற்சி பெற விரும்பும் பெண்களை இந்திய அரசாங்கத்தார் பல மாநிலங்களிலிருந்து இங்கு அனுப்புகின்றனர்.

மனை இயல் கல்வி முறையில் இந்தியாவிலேயே தலை சிறந்த நிபுணராகிய டாக்டர் இராசம்மாள் பா. தேவதாஸ், இக் கல்லூரியின் தொடக்கத்திலிருந்து அறிவுரை

யாளராகவும் 1960 முதல் முதல்வராகவும் இருந்து வருகிறார்.

## காட்டியல் கல்லூரி
## Southern Forest College

இது சென்னை அரசாங்கத்தாரால் 1912இல் தொடங்கப் பெற்றது. அவர்கள் இக் கல்லூரியைச் சிலகாலம் மூடியும் வந்தனர். அதனால் 1948இல் இக்கல்லூரியை இந்திய அரசாங்கம் எடுத்துக்கொண்டு தென் மாநிலங்களின் காடு நிர்வாகத்துறைக்குரிய கல்லூரியாக இதை அமைத்து, டேராடூனிலுள்ள காட்டியல் ஆராய்ச்சி நிறுவனத்தலைவரின் பொறுப்பில் நடத்தி வருகிறது.

மாவட்டக் காட்டியல் அலுவலர்கள்(D.F.O.) உத்தரப் பிரதேசத்தில் இமயமலை அடிவாரத்திலுள்ள டேராடூனில் காட்டியல் கல்லூரியில் மூன்றாண்டுக் காலம் பயிலுகின்றனர். காடு மேற்பார்வையாளர்களுக்கு (Ranger) ஈராண்டுப்படிப்பும், காடு காவலர் (Forester) க்கு ஓராண்டுப் படிப்பும் பாரஸ்டு கார்டுகளுக்கு ஆறு மாதப் படிப்பும் கோவையில் கற்பிக்கப்படுகின்றன. அரசாங்கத்தின் காடுகள் நிர்வாகத் துறையில் பணியாற்றி வருபவர்கள் அல்லது பணிபுரியச் சேர்த்துக் கொள்ளப்பட விருப்பவர்கள் மட்டுமே இங்கே பயிற்சி பெறலாம். தென் இந்தியாவெங்குமுள்ள – அயனமண்டலக் காடுகளுக்கு* அவர்களை அழைத்துச் சென்று, பயிற்சி தருகின்றனர்.

---

*இவ்வகைக் காடுகள் மேற்குத் தொடர்ச்சிமலைப் பகுதியில் உள்ளன. 1450 மீட்டர் வரை உயரமும் ஆண்டுக்கு 51 டெசி மீட்டர்வரை மழையும் உள்ள இடங்களில் இவ்வகைக் காடுகள் வளரும். எண்ணெய் மரம், புன்னை, குங்கிலியம், வெள்ளை அகில், காட்டி லுப்பை, சாதிக்காய் மரம், ஆகியவை இக்காடுகளில் வளருகின்றன. இத்தகைய காடுகள் கோவை, நெல்லை மாவட்டங்களில் சில இடங்களில் இருக்கின்றன.

மண் வளம், தாவரம் பற்றிய ஆராய்ச்சி நிறுவனமும், காடுகளில் கிடைக்கும் பொருள்களுள்ள பொருட்காட்சி மண்டபமும் இங்கே காணத்தக்கவை.

## ஸ்ரீ இராமகிருஷ்ண மடம் வித்யாலயம்

### ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி, 'அப்பர் நிலையம்', பெரிய நாயக்கன்பாளையம்

1930-இல் தி. சு. அவினாசிலிங்கனார் தொடங்கிய இராமகிருஷ்ண மடத்தின் கோவைக் கிளையினரால் இக் கல்லூரி 1950-இல் நிறுவப்பெற்றது. அடிப்படைக் கல்வி, சமூகப் பாடங்கள், கணிதம், தமிழ், ஆங்கிலம், விஞ்ஞானப் பாடங்கள் ஆகியவை இங்கே கல்வி பயிலும் ஆசிரியர்கட்குக் கற்பிக்கப்படுகின்றன.

உயர்நிலைப் பள்ளியில் கல்வி கற்பிக்கப் பயன் படுத்தப்படும் பாட நூல்களைப் பற்றிய ஆராய்ச்சிக்கூடம், ஐம்புலன் உணர்ச்சியை ஆராய்ந்தறிய உதவும் உள நூல் சோதனைக் கூடம், திரைப்படங்களையும் இசைத் தட்டுக்களையும் பயன்படுத்தி அறிவு பரப்பும் பகுதி (Audio-Visual Department) ஆகியவை காணத்தக்கன.

விரிவுப் பணி, வெளியூர்களில் தொடர்ந்து சொற்பொழிவுகள் செய்தல், நூல்களின் பொருட்காட்சி அமைத்தல், சிக்கல் விளைவிக்கும் குழந்தைகளைச் சீராக்குவதற்கான முயற்சி பற்றிய ஆராய்ச்சி, கல்விப் பிரச்னைகள் பற்றிய இதழ் வெளியீடு—இத்தகைய வேலைகளும் இக்கல்லூரியில் நடைபெறுகின்றன.

**பெண்களுக்கான அரசாங்க ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி. கோயம்புத்தூர்.**

**Government Training College for Women, Coimbatore**

*இக் கல்லூரி 1956 முதல் நடைபெற்று வருகிறது. கணிதம், பொது விஞ்ஞானம், சமூகப் பாடங்கள், தமிழ், ஆங்கிலம் ஆகியவற்றில் உயர்நிலைப்பள்ளி ஆசிரியைகளுக்கு இங்கு பயிற்சி தரப்படுகிறது. பெண்களுக்காகத் தமிழ் நாட்டில் அரசாங்கம் நடத்தும் ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி இது ஒன்றே.*

**வேளாண்மைக் கல்லூரி, கோயம்புத்தூர்.**

*கோவை மாநகர்க்கு ஓர் அணிகலமாக இருந்தும், தமிழ்நாட்டுக்கு நல்ல பயனளித்துச் சிறந்த ஆராய்ச்சிகள் செய்தும் இந்தக் கல்லூரி புகழ் பெற்று விளங்குகிறது. வேளாண்மை ஆராய்ச்சிக்காக இந்தியாவில் ஏற்பட்ட முதல் கல்லூரி இதுவே. இக்கல்லூரியின்கண் நிகழும் ஆராய்ச்சிகளின் சிறப்பை 13–ஆம் கட்டுரையில் தெரிவித்திருக்கிறோம்.*

*1868 இல் சென்னை-சைதாப்பேட்டையில் அரசாங்கத்தாரால் ஒரு விவசாயப் பண்ணை தொடங்கப்பெற்றது. விவசாயத் துறையில் புதிய முறைகள் இங்குள்ள சிறு சிறு நிலங்களில் கையாளப்பட்டு, பல வகைப் பயிர்கள் விவசாய அலுவலகத்தால் பயிர் செய்யப்பெற்றன. 1876 இல் இந்தப் பண்ணையில் சிறியதொரு விவசாயப் பள்ளிக்கூடம் நிறுவப்பட்டது. பின்னர் இது கல்லூரியாயிற்று. இந்தியாவில் ஏற்பட்ட முதல் விவசாயக் கல்லூரி இதுவே.*

*கர்சன் பிரபு 1898 இல் இந்தியாவின் வைஸ்ராய் ஆனார். அவருக்கு விவசாயத்தில் ஆர்வம் மிகுதியாக இருந்தது. அவர் இந்திய அரசாங்கத்திலிருந்து மூன்று*

லட்சம் ரூபாய் கொடுத்து, சைதாப்பேட்டைக் கல்லூரியை, கோயம்புத்தூருக்கு மாற்றி 630 ஏக்கர்ப் பரப்பில் சிறந்த முறையில் திட்டமிடும்படி சென்னை அரசாங்கத்துக்கு ஆணையிட்டார்.

ஏழு லட்சம் ரூபாய்ச் செலவில் கட்டப்பட்ட அழகான கட்டிடங்கள் 1909இல் திறந்து வைக்கப்பெற்றன. ஆராய்ச்சித் துறையிலும் இக் கல்லூரி ஈடுபட வேண்டுமென்று அப்போது முடிவு செய்யப்பெற்றது. இந்த 50 ஆண்டுகளில் இக் கல்லூரி எல்லா வகையிலும் மிகப் பெரு வளர்ச்சியை அடைந்திருக்கிறது. விவசாயத் துறையில் ஆண்டுதோறும் புதிதாக 200 மாணவர்கள் பி. எஸ். சி. பட்டப்படிப்புப் படிக்கின்றனர். இவ்வாறு இக்கல்லூரியில் பயின்றவர்களே இன்று தமிழ் நாடெங்கும் விவசாயத் துறையில் அலுவலராகப் பணியாற்றி வருகின்றனர்.

ஐந்தாண்டுத் திட்டங்களில் குறிப்பிடப்படும் விவசாயப் பணிகளை நிறைவேற்றவும் விவசாயப் பொருள்களின் உற்பத்திக் குறிக்கோளை அடையவும் ஏற்றவாறு இக்கல்லூரியின் அமைப்பு, மாணவர் தொகை, பாடத் திட்டம் ஆகிய யாவற்றிலும் மாறுதல்கள் செய்யப் பெற்றுள்ளன.

1908 முதல் பி. எஸ். சி, படிப்பும் 1933–34 முதல் எம். எஸ். சி., பிஎச். டி. பட்டங்களுக்கான ஆராய்ச்சிக் கல்வியும் 1952—53 முதல் பழத்தோட்ட இயலில் (Horticulture) உயர் கல்வியும் கற்பிக்கப்படுகின்றன. பி. எஸ். சி. படிப்பு மாநில அரசாங்கத்துக்கு உட்பட்ட கல்லூரியாலும், பிற படிப்புக்கள் இந்திய அரசாங்கத்துக்கு உட்பட்ட ஆராய்ச்சி நிறுவனத்தாலும் நடத்தப் படுகின்றன. பண்ணை மேற்பார்வை பற்றிய குறுகிய

காலப்பயிற்சியும் இங்கு நடைபெறுகிறது. கல்லூரிக்கு முதல்வரும், ஆராய்ச்சி நிறுவனத்துக்கு 'டீன்'-ம் உயர் அலுவலர்களாக இருந்து வருகின்றனர்.

இக்கல்லூரியிலுள்ள பொருட் காட்சி நிலையங்களும், மாதிரிப் பண்ணைகளும், தலை சிறந்த நூலகமும், கரும்பு ஆராய்ச்சிக் கூடமும், விருந்தினர் இல்லம் முதலிய கவினுறு கட்டிடங்களும் கண்டு மகிழத்தக்கவை. பெயரில் கல்லூரியாயினும் இது ஒரு பல்கலைக் கழகத் திற்குச் சமமானது. இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் மட்டும் இந்திய அரசாங்கம் இதற்கு 75 லட்சம் ரூபாய் வழங்கியிருக்கிறது. தொழில் நுட்பக் கூட்டுறவு நிறுவனம் இராக்பெல்லர் அறநிலையக் குழு ஆகிய அமெரிக்க அமைப்புக்கள், குறிப்பிட்ட சில ஆராய்ச்சிகளுக்கான செலவுகளை ஏற்றுக்கொள்ளு கின்றன. இந்நிலையத்தின் டீனாக, பழ ஆராய்ச்சித்துறை நிபுணரும் தமிழ்நாடு அரசாங்கத்தின் வேளாண்மைத் துறையின் கூட்டு டயரக்டருமான டாக்டர் கிருஷ்ண மூர்த்தி பணியாற்றி வருகிறார்.

## வேளாண்மைப் பயிற்சிப் பள்ளி, பவானிசாகர்

உயர்நிலைப் பள்ளிப் படிப்பை முடித்தவர்களுக் காக இங்கு தமிழில் கல்வி கற்பிக்கப்படுகிறது. சேலம், கோவை, நீலகிரி மாவட்டங்களைச் சேர்ந்த மாணவர் களுக்காகத் தமிழ்நாடு அரசாங்கம் 1961 முதல் இப் பள்ளியை நடத்தி வருகிறது.

இங்கிலாந்திலுள்ள (Farm Schools) எனப்படும் பண்ணைப் பள்ளிகளின் பாணியில் இத்தகைய பள்ளிகள் தமிழ்நாடு அரசாங்கத்தாரால் இந்திய விவசாய

ஆராய்ச்சிக் குழுவின் ஆதரவில் தொடங்கப்பட்டிருக்கின்றன.

இப்பள்ளியில் 20 பேர் பயிற்சி பெறுகின்றனர்; ஒவ்வொருவருக்கும் மாதந்தோறும் 30 ரூபாய் உதவித் தொகை வழங்கப்படுகிறது.

## தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி, பேரூர்

பேரறிஞர் டாக்டர் ரா. க. சண்முகம் செட்டியார் போன்ற பெருமக்களின் முயற்சியால், இக்கல்லூரி பேரூர் ஆதீனத்தாரால் 1953 - இல் தொடங்கப் பெற்றது. ஆதீனக் கட்டிடத்திலேயே கல்லூரி நடைபெற்று வருகிறது. கல்லூரிக்கெனத் தனியே கட்டிடங்கள்கட்ட ஏற்பாடு நடைபெற்று வருகிறது.

பேரூர் ஆதீனத்தை நிறுவிய சாந்தலிங்க அடிகளார் பெயரே இக்கல்லூரிக்கு இடப் பெற்றிருக்கிறது. இவர் 17-ஆம் நூற்றாண்டில் தோன்றியவர். 'கொலை மறுத்தல்' முதலிய நூல்களை இயற்றிச் சைவத்துக்கும் தமிழுக்கும் தொண்டாற்றியவர்; சிவப்பிரகாச சுவாமிகளின் சீடர். சாந்தலிங்க அடிகளாரின் சமாதி இந்த மடத்தில் இருக்கிறது. மாசிமகத்தன்று அவருடைய குருபூசை நடைபெறுகிறது. அவருடைய மாணவர்கள் நிறுவிய இரு மடங்கள் - விருத்தாசலத்திலுள்ள குமாரதேவர் மடமும் செங்கற்பட்டு மாவட்டத்துப் போரூரிலுள்ள மடமும்— பேரூர் மடத்தின் கிளைகளாக இருந்து வருகின்றன.

இக்கல்லூரியின் முதல்வராக இருந்து, கல்லூரிக்கு ஆக்கம் தருபவர் கோவைகிழார் இராமச்சந்திரன் செட்டியார் ஆவர். இவர் தம் நெடிய வாழ்க்கையில்

அரிதின் முயன்று சேர்த்த நூல்கள் இக்கல்லூரி நூல் நிலையத்தேயுள்ளன. இளைஞரும் வயோதிகரும், துறவிகளும் இல்லத்தில் ஈடுபட்டவர்களும், மேலைச் சிதம்பரத்திலிருந்து கீழைச் சிதம்பரம் வரை பல ஊரினருமாகிய புலவர்கள் ஆசிரியராக இருப்பதும் இக்கல்லூரியில் பயின்ற மாணவர் அனைவரும் வெற்றி பெற்றிருப்பதும் குறிப்பிடத் தக்கன.

தமிழ் இலக்கியப் பயிற்சியுடன் சமய அறிவு, உடற் பயிற்சி, விவசாயப் பயிற்சி ஆகியனவும் இக்கல்லூரி மாணவர்க்குப் புகட்டப்படுகின்றன.

### மாருதி உடற் பயிற்சிக் கல்லூரி, பெரியநாயக்கன் பாளையம்

இராமாயணக் கதையில் குறிப்பிடப் பெறும் மாருதியின் பெயரால், தி. சு. அவினாசிலிங்கம் இக் கல்லூரியை 1956-இல் தொடங்கியுள்ளார்.

உடற் பயிற்சி ஆசிரியராகப் பணியாற்ற விரும்புபவர்களுக்கு இக்கல்லூரியில் கல்வி கற்பிக்கப்படுகிறது. எஸ். எஸ். எல். சி. படித்தவர்களுக்கு ஹையர் கிரேடு, லோயர் கிரேடு பயிற்சிகளும், பட்டப் படிப்புப்படித்தவர்களுக்கு டிப்ளமா படிப்பும் உண்டு. டிப்ளமா படிப்புக்குரிய தேர்வு பல்கலைக் கழகத்தாராலும் பிற தேர்வுகள் மாநில அரசாங்கத்தாராலும் நடத்தப்படுகின்றன.

## கலைக் கல்லூரிகள்

### அரசாங்கக் கலைக் கல்லூரி, கோயம்புத்தூர்

இது 'ஆங்கிலோ-வெர்னகுலர்' பள்ளியாக 1852-இல் ஆரம்பமாயிற்று; 1867-இல் ஓர் உயர்நிலைப் பள்ளி

யாகச் சென்னைப் பல்கலைக் கழகத்துடன் இணைக்கப் பெற்றது; 1868-இல் இரண்டு மாணவர்களுடன் 'எப். ஏ.' படிப்புத் தொடங்கப் பெற்றது. 1871-இல் மீண்டும் உயர்நிலைப் பள்ளியாக்கப்பட்டது. 1876-இல் மீண்டும் எப். ஏ. வகுப்பு ஏற்பட்டது. அதன் பின்னர் படிப்படியாக மாணவர் தொகை கூடிற்று. 1903-இல் கோயம்புத்தூரில் 'பிளேக்' நோய் பரவியதால் அடுத்த 15 ஆண்டுகளுக்கு இக்கல்லூரியின் வளர்ச்சி தடைப்பட்டது. 67 ஆண்டுகள் தொடக்கப் பள்ளி, உயர்நிலை பள்ளி, 'கோயம்புத்தூர்க் காலேஜ்' என்ற பெயர்களில் இதை நடத்திய தனிப்பட்ட நபர் சிலரடங்கிய ஆட்சிக் குழு 1919-இல் இக்கல்லூரியை அரசாங்கத்திடம் ஒப் படைத்தது.

1931-இல் மருத்துவப் பள்ளி மூடப்பட்டதால் அந்தக் கட்டிடத்தில் இக் கல்லூரி நடைபெற அரசாங்கத் தார் ஆணை பிறப்பித்தனர். 1946 இல் பி. ஏ., பி. காம், பி. ஓ. எல். வகுப்புக்கள் தொடங்கப் பெற்றன; உணவு விடுதியும் கட்டப் பெற்றது; 1953-இல் நூற்றுண்டு விழா கொண்டாடப் பெற்றது. இப்போது பல்கலைக் கழகப் புகுமுக வகுப்பும், பி. ஏ. பி. காம் வகுப்புக்களும் நடைபெறுகின்றன.

தமிழ்நாட்டிலுள்ள கல்லூரிகளில் 1964 முதல் பி. ஏ. வகுப்பில் வரலாறு, அரசியல், பொருளாதாரம் முதலிய பாடங்களைத் தமிழிலேயே கற்பிக்கத் தமிழ்நாடு அரசாங்கம் முடிவு செய்திருக்கிறது. இத்திட்டம் வெற்றி பெறுவதற்காக, ஒரு மாதிரித் திட்டம் (Pilot Scheme) இக்கல்லூரியில் 1960 ஜூலை முதல் நிறைவேற்றப்படுகிறது. மூன்றுண்டுகளுக்கு தமிழ் பி. ஏ. வகுப்புப் படிக்கும் மாணவர்க்குப் பல சலுகைகள் வழங்கப் பெற்றுள்ளன; வேலை வாய்ப்பு உண்டு என்றும் உறுதி கூறப்

பெற்றிருக்கிறது. ஆங்கிலப் பாடம் கற்பிக்கும் ஆசிரியர் 25 பேருக்கும் பொருளாதாரம், வரலாறு, பூகோளம், அரசியல், விஞ்ஞானப் பாடங்களைத் தமிழில் கற்பிக்கும் ஆசிரியர் 75 பேருக்கும் குறுகிய காலப்பயிற்சி வகுப்புக்கள் இக்கல்லூரியில் 1961-இல் நடைபெற்றன.

பி. ஏ. மூன்றுண்டுப் பட்டப் படிப்பில் தமிழ் மொழி வாயிலாகப் பாடங்கள் கற்பிக்கப்படுகின்றன. வரலாறு, அரசியல், பொருளாதாரம், புவியியல், உளவியல் பாடங்களை முதன்மைப் பகுதியில் எடுத்துப் படிக்கலாம். இவை ஒவ்வொன்றிலும் இருபது இடங்கள் உள்ளன. இவ்வாறு தமிழில் பயிற்சி பெறும் பி. ஏ. மாணவரனைவர்க்கும் அவர்களது பெற்றோர்களது ஆண்டு வருமானம் ரூ. 3,000-க்கு மிகாமலிருந்தால், முழுக் கட்டணச் சலுகை தரப்பெறுகிறது.

தமது பெற்றோர்களின் ஆண்டு வருமானம், ரூ. 3,000-க்கு மேற்படாத மாணவர்களிலிருந்தும், தகுதியை யாராய்ந்து தேர்ந்தெடுக்கப் பெறும் 45 மாணவர்களுக்கு மாதம் ஒன்றுக்கு ரூ. 30 உதவித் தொகையும் அளிக்கப்பெறுகிறது.

### ஸ்ரீ ஜி. வி. ஜி. விசாலாட்சி கல்லூரி, உடுமலைப் பேட்டை

வேங்கடேசா ஆலை நிர்வாகி ஜி. வி. கோவிந்த சாமி நாயுடு தம் மகள் விசாலாட்சியின் நினைவாக 1952-இல் பெண்கள் கல்லூரியாக இதை நிறுவி யுள்ளார்.

பல்கலைக் கழகப் புகுமுக வகுப்பும் 1955 முதல் பி. ஏ. வகுப்பும் ஆங்கிலத்தில் நடைபெறுகின்றன. விஞ்ஞான ஆய்வுக் கூடங்கள், உணவு விடுதி ஆகியவற்றுக்கும் கல்லூரிக்கும் நல்ல கட்டிடங்கள் கட்டப் பட்டுள்ளன.

### நிர்மலா கல்லூரி, 'ரெட் பீல்ட்ஸ்' கோயம்புத்தூர்

இது கத்தோலிக்கர்களால் 1948 முதல் பெண்களுக்கென நடத்தப்படுகிறது. 1957 முதல் சொந்தக் கட்டிடம் ஏற்பட்டு பொருளாதாரம், அரசியல் சாத்திரம், வரலாறு, கணிதம், பௌதிகம், இரசாயனம், தாவர இயல், நில நூல் பாடங்கள் பி ஏ. வகுப்பில் ஆங்கிலத்தில் கற்பிக்கப்படுகின்றன.

### பூ. சா. கோ. கலைக் கல்லூரி, கோயம்புத்தூர்

(P. S. G. Arts College)

இது 1947–இல் பூ. சா. கங்கா நாயுடு குடும்பத்தாரால் தொடங்கப்பெற்று, பூளைமேட்டில் நடைபெற்று வருகிறது.

1958 முதல் பி. ஏ., பி. எஸ். சி. வகுப்புக்களும் ஏற்பட்டுள்ளன. இக்கல்லூரியில் பயிலும் மாணவர்கள் தமிழ் ஆர்வம் மிக்காராக இருப்பது குறிப்பிடத் தக்கது. எம். ஏ. படிப்புத் தொடங்க பி. எஸ். ஜி. குடும்பத்தார் திட்டமிட்டுள்ளனர். இராக்பெல்லர் அறநிலையக் குழுவின் ஆதரவுடன் இக்கல்லூரியில் 1959–இல் கோடை கால மொழி நூல் வகுப்பு நடைபெற்றது.

பி. ஏ. வகுப்பில் 1961 முதல் பொருளாதாரம், சமூக இயல் பாடங்கள் தமிழில் கற்பிக்கப்படுகின்றன. கல்லூரியின் தலைவர், அறிஞர் பி. ஆர். கிருஷ்ணமூர்த்தி ஆவார்.

### சிக்கைய நாயக்கர் மகாசனக் கல்லூரி, ஈரோடு

இக்கல்லூரி 1954-இல் ஏற்பட்டது. ஈரோடு நகரினின்று 5 கி. மீ. தொலைவில், சத்தியமங்கலம் சாலையில் வீரப்பன் சத்திரத்திற்கு அருகே உயர்ந்ததோர் இடத்தில் இக்கல்லூரிக்கெனச் சிறந்த முறையில் கட்டிடங்

கள் கட்டப்பட்டுள்ளன. இக்கல்லூரி ஆட்சிக் குழுவுக்கு, பெரியார் ஈ. வே. இராமசாமி நாயக்கர் தலைவராக இருக்கிறார். 1957 முதல் இங்கே பி. ஏ., பி. எஸ்சி. வகுப்புக்களும் நடைபெற்று வருகின்றன.

பல்கலைக் கழக ஆதரவில், இக்கல்லூரியினர் பொது மக்களுக்கான சிறப்புச் சொற்பொழிவுகள் ஆற்றும் விரிவுப் பணியைச் செய்து வருகின்றனர்.

### நல்லமுத்து கவுண்டர் மாகலிங்கம் கல்லூரி, பொள்ளாச்சி

இது 1958–இல் ஏற்பட்டது. பி. ஏ., பி. எஸ்சி. வகுப்புக்கள் நடைபெற்று வருகின்றன. விரைவாக வளர்ந்து வரும் கல்லூரிகளில் இதுவும் ஒன்று.

இக் கல்லூரியில் பி. ஏ. வகுப்பு 1961 முதல் தமிழில் நடைபெறுகிறது. கல்லூரியின் செயலாளர் சட்டசபை உறுப்பினர் மகாலிங்கனார் இதன் வளர்ச்சியில் கண்ணும் கருத்துமாக இருக்கிறார்.

## தொழில் கல்வி நிலையங்கள் (Polytechnics)

### அரசாங்கத் தொழிற் கல்லூரி, பூளைமேடு, கோயம்புத்தூர் (Government Polytechnic, Coimbatore)

இக்கல்லூரியை 1945 இல் தொழிலறிஞர் ஜி.டி.நாயுடு, அர்தர் ஹோப் பாலிடெக்னிக் என்ற பெயரில் ஏற்படுத்தினர். மோட்டார் கார் பொறியியல், விவசாயப் பொறியியல், தந்தி, டெலிபோன், வானொலி போன்ற போக்குவரத்துப் பொறியியல், சுரங்கப் பொறியியல் ஆகிய துறைகளில் மூன்றாண்டுப் படிப்பு—ஒவ்வொன்றிலும் 20 மாணவர்க்கு—பல ஆண்டுகளாக நடைபெற்று வருகிறது. 1958 முதல், பிற தொழிற் கல்லூரிகளிலுள்ள

கட்டிட, இயந்திர, மின்சாரப் பொறியியல் பாடங்களும் கற்பிக்கப்படுகின்றன; இவற்றுக்கு ஆண்டு தோறும் 150 பேர் சேர்த்துக் கொள்ளப் படுகின்றனர். 1955 முதல் சுரங்கப் படிப்பும் நடந்து வந்தது; 1959-இல் இப்படிப்பு கிண்டியிலுள்ள சென்ட்ரல் பாலிடெக்னிக்குக்கு மாற்றப் பட்டது. தந்தி டெலிபோன் முதலிய படிப்புக்குரிய மாணவர் தொகை 40 ஆக உயர்த்தப் பெற்றிருக்கிறது.

எல். எம். இ. டிப்ளமா சர்ன்றிதழ் பெற்றவர்கள் மேலும் தகுதிபெறுவதற்காக ஒன்றரை ஆண்டுக்குப் பாடமும் ஆறு மாதம் நேரிடையான விவசாயப் பயிற்சியும் கொண்ட (Post-Diploma course in Agricultural Engineering) படிப்பு 1960-இல் தொடங்கப் பெற்றிருக்கிறது. தொழில் நுணுக்கக் கல்விக் குழு ஒன்றை நம் மாநில அரசாங்கம் 1957-இல் தனியாக ஏற்படுத்தியது; அக் குழு கோவை அரசாங்கத் தொழிற் பள்ளியின் வளர்ச்சியில் அக்கறை காட்டி வருகிறது.

இதைச் சேர்ந்த 'ஜுனியர் டெக்னிகல் ஸ்கூல்' சர்டிபிகேட் பயிற்சிக்குரிய கல்வியை அளித்து வருகிறது.

**பி. எஸ். ஜி. தொழிற் கல்லூரி.**

**Polytechnic Section of P. S. G. Engineering College**

இங்கு, பிற தொழிற் கல்லூரிகளைப் போன்ற கட்டிட, இயந்திர, மின்சாரப் பொறியியல் படிப்புகள் (L. C. E., L. M. E., L. E. E.,) உள்ளன. இது தவிர, நூல் நூற்பது பற்றிய படிப்பும் (L. T. M. Licenciate in Textile Manufacture) சொல்லிக் கொடுக்கப் படுகிறது; இப் படிப்பில் தேர்ச்சியடைந்தவர்கள் நூல் ஆலைகளில் நூல் நூற்புப் பகுதி மேற்பார்வையாளராக நியமனம் பெறுகின்றனர். இப் படிப்பு தமிழ்நாட்டில் இக் கல்லூரியிலும் சேலம் தியாகராாசர் தொழிற்கல்லூரியிலுமே புகட்டப்படுகிறது. 1959 முதல் டிப்ளமாவுக்கு மேற்பட்ட ஓராண்டுப்

படிப்புப் படிக்கும் மாணவர்களுக்கு நெசவுத்துறை, அதையொட்டிய இரசாயனம் ஆகியவை பற்றிக் கற்பிக்கப்படுகிறது. (One-year Post-diploma course in Applied Textiles & Textile chemistry)

Diploma in Commerce என்னும் வாணிகப் படிப்பும் இங்கு உள்ளது.

### நாச்சிமுத்து தொழிற் கல்லூரி, பொள்ளாச்சி

ஆனைமலை பஸ் கம்பெனியரால் *1957*–இல் இக் கல்லூரி தொடங்கப்பெற்றது. மாநிலத்தில் சிறந்த முறையில் நிகழும் தொழிற் கல்லூரிகளில் இது ஒன்று. கட்டிடங்களும் தொழிற்சாலைகளும் உணவு விடுதியும் நன்கு அமைந்துள்ளன. நன்கொடையாளரான மகாலிங்கத்தின் மேற்பார்வையில் விரைந்து முன்னேறி வருகிறது. தொழிற் கல்லூரி மாணவர்களுக்கான நூல்கள் இக் கல்லூரியால் வெளியிடப்பட்டுள்ளன. மூன்று பொறியியல் துறைகளும் கற்பிக்கப்படுகின்றன. எல். எம். ஈ. படித்த மாணவர்கள் மோட்டார்ப் பொறியியலில் மேற்படிப்புப் படிக்கும் வசதி (Post diploma course in Automobile Engineering) *1961* ஆகஸ்டு முதல் இங்கு ஏற்பட்டிருக்கிறது. ஓராண்டுக்குப் படிப்பும் ஆறுமாதத்திற்குத் தொழிற்கூடப் பயிற்சியும் இம்மாணவருக்கு உண்டு.

## பிற நிறுவனங்கள்

### இராமகிருஷ்ண வித்தியாலயம்

உலகம் முழுவதும் பரவியுள்ள இராமகிருஷ்ண சங்கத்தின் கிளையாக உள்ள இந் நிலையம் *3–2–1930*–இல் திருப்பூரில் கே. சுப்பரமணிய செட்டியார் மாளிகையில் ஒரு மாணவருடன் தொடங்கி அடுத்த ஆண்டில் வெள்ளக் கிணறு என்னுமிடத்தில் வி. சி. வெள்ளிங்கிரி கவுண்டரின்

*11*

தோட்டத்திற்கு மாற்றப்பட்டு, பிறகு போத்தனூரில் ஜி. டி. நாயுடு, கந்தசாமி செட்டியார் மாளிகைகளில் சில காலம் இருந்து இறுதியாகப் பெரியநாயக்கன்பாளையத்தில்-கோவை நகருக்கு வடக்கே 18 கி. மீ. தொலைவில் பெரியநாயக்கன் பாளையம் இரயில் நிலையத்துக்கும் கோவை-மேட்டுப்பாளையம் சாலைக்கும் இடையே கடல் மட்டத்துக்கு மேல் 430 மீட்டர் உயரத்தில் நிலையான இடம் பெற்றது; அதே ஆண்டில் மகாத்மா காந்தியடிகளால் கட்டிட வேலைகளுக்கு அடிப்படைக்கல் போடப்பட்டது.

1937–இல் உயர்நிலைப் பள்ளியும், 1939–இல் அடிப்படைக் கல்வி நிலையமும், 1942–இல் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியும் 1951–இல் பொறியியல் பள்ளிக்கூடமும் ஏற்பட்டன. மாணவர் உடன் உறையுள் உயர் நிலைப் பள்ளி ஒன்றும், உயர்தர அடிப்படைப் பள்ளி, கிராமியப் பணி நிலையம் ஆகிய நிலையங்களும் இங்கே உள்ளன. எல்லா நிலையங்களுக்கும் பொதுவான ஒரு சிறந்த நூல் நிலையமும், மாருதி பெயரால் உடற்பயிற்சிக் கல்லூரியும் உள்ளன. எல்லா நிறுவனங்களும் விவேகானந்தர், காந்தியடிகள் ஆகியோரின் கொள்கைக்கேற்ப குருகுல முறையில் நடத்தப்படுகின்றன. இந் நிலையங்களின் தோற்றத்துக்கும் வளர்ச்சிக்கும் இன்றைய பெருமைக்கும் அவிநாசிலிங்கனாரின் வள்ளன்மையும் தொண்டும் காரணமாக உள்ளன.

## ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் வித்யாலய உயர்நிலைப்பள்ளி

இங்கு கைத்தொழில் பழகும் பகுதி உண்டு. 9 ஆம் வகுப்பு முதல் பொறியியலும் விவசாயமும் பயிலலாம். வித்யாலய நிர்வாகத்தில் மாணவர்கள் ஓரளவு பங்கெடுத்துக் கொள்ள வாய்ப்புத் தரப்படுகிறது.

### பொறியியல் பள்ளி (School of Engineering)

ஏனைய தொழிற் பள்ளிகளைப் போன்றதே இது. ஆனால் இரண்டு வேறுபாடுகள் உண்டு (1) இங்கு, கட்டிடப் பொறி இயல் மட்டுமே கற்பிக்கப் படுகிறது. (2) இங்கு பயிலுபவர்கள் தமிழ்நாடு அரசாங்கத் தொழிற் கல்விக் குழுவின் தேர்வை எழுதாமல் இந்திய அரசாங்கம் நடத்தும் தேர்வை எழுதி National Diploma Certificate in Civil Engineering என்ற சான்றிதழ் பெற வேண்டும்.

இங்கு பயிலுபவர்க்கு மூன்றாண்டுப் பயிற்சி தருகின்றனர். 16 க்கு மேல் 20 வயதுக்குட் பட்டவர்கள்-உயர் நிலைப் பள்ளியில் சிறப்புப் கணிதம் பயின்று தேர்ச்சி பெற்றவர் - சேர்த்துக்கொள்ளப்படுவர். சைவ உணவு விடுதி உண்டு. ஓராண்டுக்கு 800 ரூபாய் செலவு ஏற்படும்.

### விவசாயப் பள்ளி

விவ்சாயம், கால்நடை கிராமியப் பொருளாதாரம், கிராமியத் தொழில்கள், காட்டியல், பழச் செடி பயிரிடுதல் ஆகியவை பற்றி ஈராண்டுகளுக்குத் தமிழில் கற்பிக்கப் படுகிறது. கிராமியக் கல்லூரிகளுக்கான தேசியக் குழு நடத்தும் தேர்வு எழுதி, சன்றிதழ் பெற வேண்டும். இச் சான்றிதழ் பெற்றவர்கள் தேசிய விரிவுப் பணியிலும் சமுதாய நலத் திட்ட வேலைகளிலும் அரசாங்க ஊழியர்களாகச் சேர்த்துக் கொள்ளப்படுகின்றனர்: ஓராண்டுக்கு 600 ரூபாய் செலவு ஏற்படும்.

### கிராமியக் கல்லூரி College of Rural Higher Education

இந்தியாவிலுள்ள பல்கலைக்கழகங்கள் நகரத்து மக்களுக்கே என்று அமைந்துள்ளன. ஆகையால் படித்தவர்கள் கிராமங்களில் போய் வேலை செய்ய வேண்டும் என்ற

நோக்கத்துடன் சில கல்வி நிலையங்கள் அமையவேண்டு மென்று பல்கலைக்கழகக் கல்வி பற்றிய ஆராய்ந்த குழு வினர் கருத்துத்தெரிவித்தனர். அக் கல்லூரிகளில் பயிலும் மாணவர் சில வேலைகளைத்தாமே பார்த்தும், ஆராய்ந்தும், தாம்பெற்ற கல்வியைப் பிறருக்குப் பரப்பி யும் வர வேண்டுமென்பது அரசாங்கத்தின் விருப்பம்.

இந்த நோக்கத்துடன் காந்தியத் தத்துவத்திற்கு இணங்க 10 இடங்களில் இந்திய அரசியலார் கிராமியக் கல்லூரிகளைத் தொடங்கியுள்ளனர். இவற்றில் இரண்டு தமிழ் நாட்டிலுள்ளன. ஒன்று காந்திகிராமத்திலிருக் கிறது. மற்றொன்று பெரியநாயக்கன் பாளையத்திலுள்ள இந்தக் கல்லூரி.

முன் குறிப்பிட்ட இரு நிறுவனங்கள் உட்பட இக் கல்லூரியில் கீழ்க்காணும் மூன்று பகுதிகள் உள்ளன. 1. பட்டப்படிப்பு. இதற்கு நான்கு ஆண்டுகள் பயிற்சி யுண்டு. 2. கட்டிடப் பொறியியல் துறையில் மூன்றாண்டுப் பயிற்சி. 3. விவசாயத்துறையில் ஈராண்டுப் பயிற்சி.

உயர்நிலைப் பள்ளிப் படிப்பை முடித்தவரே இந்தக் கல்லூரியில் சேர்த்துக்கொள்ளப்படுவர். இக்கல்லூரியில் நடைபெறும் பட்டப்படிப்பில் தமிழ், இந்தி, ஆங்கிலம் ஆகிய மொழிகளும், விவசாயம், பொருளாதாரம், உடல் நலம், கல்வி, பொறியியல் முதலியவற்றோடு தொடர் புடைய கிராமியப் பிரச்னைகளைப் பற்றிய படிப்பும் உள் ளன. கூட்டுறவு இயக்கம், சமுதாயக் கல்வி, பொது நிலை யங்களை நிர்வகித்தல் ஆகியவைபற்றியும் கற்பிக்கப் படுகிறது. செயலும் கல்வியும் இணைந்து செல்லுமிடமே கிராமியக் கல்லூரி. கற்றதைச் செயல்படுத்த வேண் டும் என்பதே இவர்களுடைய குறிக்கோள். பல்கலைக் கழகங்களைச் சேர்ந்த கல்லூரிகளில் படிப்பவர்கள் தமக்

கும் தம்முடைய கிராமிய வாழ்க்கைக்கும் தொடர்பு இல்லை என்ற முடிவோடு அந்தக் கல்லூரிக்குள் நுழை கின்றனர். இங்கு பயில்வோர் தாம் பெறும் அறிவை மீண்டும் கிராமத்தில் பரப்ப வேண்டுமென்பதை நன்கு கத் தெரிந்துகொண்டு, போய்ப் படிக்கின்றனர். அவர் கள் வாழும் உணவு விடுதியையும், பயிலும் கல்லூரியை யும் அவர்களே துப்பரவு செய்கின்றனர். ஆக்கப் பணியிலும் அவர்கள் தம் நேரத்தில் பாதியைச் செலவிடு கின்றனர். சமுதாய நலத் திட்டங்களைப் பற்றியும் தெரிந்துகொள்கின்றனர். விரிவுப்பணி (Extension work) வாயிலாக கிராம மக்களின் தேவைகளை அறிந்து கொள்ளுகிறார்கள். அவர்களிடையே விஞ்ஞான அறி வைப் புகட்டுகின்றனர். சமூகம், பொருளாதாரம், கல்வி, சுகாதாரம், ஆத்மீகத் துறைகளில் அவர்கள் உயர்நிலை அடைய உதவுகின்றனர். இந்த மாணவர்கள் சேரிகளுக் குச் சென்று, நிலம் பயிரிடும் முறை, ஆரோக்கிய அமுதம் போன்ற திரைப்படங்களைக் காட்டுகின்றனர். கிராம மக்களுக்குப் பயன்படும் செய்திகளை நாடகம் மூலம் நடித்துக் காட்டுகின்றனர். தக்களியில் நூல் நூற்றல், அம்பர் ராட்டை மூலம் தமக்கு வேண்டிய ஆடைகளுக் குரிய நூலை நூற்றல், காய்கறிகள் பயிரிடல், மரம் இழைத்தல் போன்ற வேலைகளை அவர்களே செய்து கொள்கின்றனர்.

### சமூகப்பணிப்பள்ளி பூளைமேடு

### P. S. G. School of Social Work

இது இந்திய அரசாங்கத்து ஆதரவு பெற்று 1956-ல் தொடங்கப் பெற்றது. ஜாமியமிலியா மூலம் நடைபெறும் நான்கு முதியோர் பள்ளிகளை நடத்தும் பொறுப்பு இப் பள்ளிக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. கோயம்புத்

தூரில் வேலை பார்க்கும் பெண் தொழிலாளிகளின் பிரச்னைகளைப் பற்றியும், நீலகிரி மாவட்டத்திலுள்ள ஆதிவாசிகளின் நலத்தைப்பற்றியும் முதியோர் கல்வியைப்பற்றியும் ஆராயும் வேலைகளை அரசாங்கத்துக்காக இப்பள்ளியினர் செய்து வருகின்றனர். புல்பிரைட் திட்டப்படி, அமெரிக்கப் பேராசிரியர் சிலர் இப்பள்ளியில் பணியாற்றுகின்றனர்.

பட்டம் பெற்றவர்களும் பட்டப் படிப்பில் படிப்பவர்களும் பகுதி நேரப் படிப்பாக இங்கு ஓராண்டுக்குப் பயின்று சென்னைப் பல்கலைக் கழகத்து 'டிப்ளமா' (சான்றிதழ்) (Post-Graduate Diploma in Social Sciences) பெறலாம்.

## ஜி. டி. நாயுடுவின் கல்வி நிலையங்கள்

வானொலிப் பெட்டிகளையும் மோட்டார்களையும் செப்பனிடுதல் பற்றி ஆறு வார காலப் பயிற்சி வகுப்புகளை ஜி. டி. நாயுடு 1948 முதல் நடத்தி வருகிறார். காலை 7½ முதல் மாலை 6½ வரையும், இரவு இரண்டு–மூன்று மணி வரையும் சில நாட்களில் பாடங்கள் சொல்லிக் கொடுக்கப்படுகின்றன.

இப்பயிற்சிக்குக் குறிப்பிட்ட பாடத் திட்டம் கிடையாது. காரின் பகுதிகளைப் பிரித்து, சேர்த்து, செப்பனிடச்செய்தல் சொல்லிக் கொடுக்கப்படுகிறது. வானொலிப் பெட்டியின் வால்வு டெஸ்டிங், ஆம்ளிபையர், டிரான்சிஸ்டர் பற்றியும் நேரடியாகத் தெரிந்துகொள்ள முடியும். இங்கு கற்பிக்கப்படும் முறை வெளி நாட்டினராலும் பாராட்டப்படுகிறது. பல மாநில அரசாங்கங்களும் தொழிற்சாலைகளும் ஆண்டுதோறும் பயிற்சி பெறப் பலரை அனுப்புகின்றனர். உரிய பொறியியல் செயல்களை மட்டும் அவர் சொல்லிக் கொடுப்பதில்லை. உலகத்தில்

மனிதனுக வாழவும் அவர் கற்றுக்கொடுக்கிருர். தொழிற் பொருட் காட்சிகளையும் அவர் இடையிடையே நடத்துகிருர்.

இவர் நிறுவியிருக்கும் பிரசிடெண்ட் ஹால் என்ற கட்டிடத்தில் யார் வேண்டுமாஞலும் திருமண வைபவங்கள், வரவேற்பு விழாக்கள், பொதுக்கூட்டங்கள் ஆகியன நடத்துவதற்கு வாடகையின்றி உபயோகித்துக் கொள்ள ஏற்பாடு செய்திருக்கிருர். அதற்கு அடுத்து இவர் கட்டியிருக்கும் யு. எம். எஸ். உணவு விடுதியில் தொழிற் பயிற்சி பெறுபவர்களும், எந்தக் கல்லூரியிலோ உயர் நிலைப்பள்ளியிலோ படிக்கும் மாணவர்கள் யார் வேண்டுமாஞலும் வந்து தங்குவதற்கு ஒரு வசதியிருக்கிறது.

## தாவர ஆராய்ச்சி நிலையம்

இந்திய அரசாங்கத்தின் தாவர ஆராய்ச்சித் துறையினர் தமிழ்நாடு, ஆந்திரம், மத்தியப் பிரதேசம், விந்திய பிரதேசம் ஆகிய மாநிலங்களுக்குரிய தென் பகுதித் தலைமை நிலையத்தை, கோயம்புத்தூர் ஆர்.எஸ். புரத்தில் வைத்திருக்கிருர்கள். இது 10-10-1955-இல் தொடங்கப் பெற்றது. பெரும்பாலும் பச்சையாகக் காணப்படினும் பலவகை நிறவேறுபாடுகளுள்ள பாசிகள், வகைவகையாகப் பிரித்து வைக்கப்பட்டிருக்கின்றன. இப்பாசிகளில் ஓங்கியுயர்ந்த மலை அருவிகளின் நீரினின்று கிடைக்கும் சில பாசிகள், நுண்ணியனவும், ஓரணு உயிரினவும் மிகப் பெரியனவும் ஆகிய பலவகைகள் உண்டு.

செடிகளை இலை பூவுடன் நன்கு படியவைத்து, மருந்திட்டு அட்டையில் ஒட்டி வைத்திருக்கின்றனர். உரிய செடிக்குச் சாதாரண மக்கள் வழங்கும் பெயரும், தாவர நூல் பெயரும், அதைச் சார்ந்த தாவரக் குடும்

பத்தின் பெயரும், அவை கிடைக்கப் பெறும் இடத்தின் பெயரும், அவற்றைச் சேமித்து வைத்தவர் பெயரும் ஒழுங்காக எழுதிப் பாதுகாக்கப்பட்டுள்ளன. குறிஞ்சி, முல்லை முதலிய தாவரங்களும் பழந்தமிழ் இலக்கியங் களில் குறிக்கப்பட்டுள்ள ஏனைய தாவரங்களும் இங்கே காணத்தக்கன.

சித்த மருத்துவர்களால் பயன்படுத்தப்படும் பூக் களும், இலைகளும், பலவகையான பட்டைகளும், மதுரை மாவட்டத்துப் பெரிய அருவிக்காட்டில் கிடைக்கும் எட்டி, குற்றாலத்தில் கிடைக்கும் கிராம்பு, பேதி மருந்தாகப் பயன்படும் (சேலத்தில் கிடைக்கும்) வள்ளுவ மரம். ஆனை மலைத் தேக்கு, சவ்வாது மலைக் கடுக்காய், திருச்சி மாவட்டத்துப் பச்சை மலையிலும் மதுரை மாவட்டத்துக் கோடைக்கானலிலும் கிடைக்கும் வெள்ளைவேளான் என்ற (தோல்பதனிடு தொழிலுக்கு உதவும்) பொருள், மதுரை மாவட்டத்துக் கரந்தை மலையில் கிடைக்கும் தீக்குச்சி மரவகைகளும் இங்கே காணத்தக்கன. ஆய்வுக்கூடம், நூல் நிலையம், "கோடாக் ரோம் ஸ்லைட்ஸ்" என்னும் படங்களைக் காட்டும் பகுதி ஆகியவை ஆர். எஸ். புரத்திலும், செடித்தோட்டம் வேளாண்மைக் கல்லூரிக்குள்ளும் இருக்கின்றன.

## 21. மருத்துவ வசதிகள்

கோவை மாவட்டத்தில் கோவை வட்டமும் பிற வட்டங்களில் சில குறிப்பிட்ட இடங்களும் மக்கள் உடல் நலத்துடன் வாழவதற்கேற்ற பருவ நிலையுடன் அமைந்தவை. ஆனால் மாவட்டத்தின் பெரும்பகுதி மலைப்பாங்கான இடமாக இருக்கிறது. இதன் விளைவாகப் பலமான காற்று அடித்துப் பல இடங்களில் மலேரியா பிளேக் காலரா போன்ற நோய்கள் சில ஆண்டுகளுக்கு ஒருமுறை பரவுவது வழக்கமாக இருந்தது. விஞ்ஞான மருத்துவ வளர்ச்சியாலும் அரசாங்கத்து உடல்நலத்துறையின் அயராத முயற்சியாலும் இந்நிலை இந்நாளில் மாறியிருக்கிறது.

### அரசாங்க மருத்துவ மனைகள்

கோயம்புத்தூர் மாவட்டத்து மருத்துவமனைகளுள் தலைசிறந்தது கோயம்புத்தூர் நகரிலுள்ள அரசாங்கப் பெரிய மருத்துவமனை (கவர்மெண்டு ஹெட்குவாட்டர் ஆஸ்பிட்டல்). இது 1909-இல் நகராண்மைக் கழகத்தாரால் தொடங்கப்பெற்று 1918 முதல் மாநில அரசாங்கத்தாரால் நடத்தப்பட்டு வருகிறது. 1924–இல் இந்த மருத்துவமனைக்கு அருகே கட்டிடம் கட்டி அரசாங்க மருத்துவப்பள்ளி தொடங்கப்பெற்றது; எல். எம். பி.க்கு உரிய மருத்துவக்கல்வி புகட்டப்பெற்றது. மருத்துவக் கல்விமுறையில் ஏற்பட்ட மாறுதல்களால் 1930–இல் அந்தப்பள்ளி மூடப்பட்டு அக்கட்டிடம் அரசாங்கக் கலைக் கல்லூரிக்கு அளிக்கப்பெற்றது.

1935க்குப் பிறகு இந்த மருத்துவமனை பெரு வளர்ச்சியடைந்திருக்கிறது, எக்ஸ்ரே, கண் மருத்துவம், காது மூக்கு தொண்டை, பல்மருத்துவப் பகுதிகள்,

இரத்த வங்கி, காசநோய்ப்பகுதி, திட்டமிட்டுக் குடும்பத்தின் அளவை வரையறுக்கும் பகுதி ஆகிய பல பகுதிகள் சீரிய முறையில் நிறுவப்பட்டுள்ளன. 800 படுக்கைகளுடன்கூடிய இந்த மருத்துவமனை, தமிழ்நாட்டின் தலைசிறந்த மருத்துவ நிலையங்களுள் ஒன்றாகும்.

எட்டு இலட்சம் ரூபாய்ச் செலவில் உடல் நலச் சோதனை நிலையம் ஒன்று 1958-இல் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. பொதுமக்கள் இந்நிலையத்தில் தங்களைச் சோதித்துச் சான்றிதழ்கள் பெற்றுக்கொள்ளலாம். கோவை நகரச்சுழற் குழு (ரோட்டரி கிளப்) நோயுற்றிருக்கும் சிறு குழந்தைகளுக்கெனத் தனி "வார்டு" வழங்கியிருக்கிறது. எலும்புக்காயம், எலும்பு நோய் ஆகியவற்றைக் குணப்படுத்தும் பகுதியை நிறுவவும், அறுவை சிகிச்சை நிலையத்தை இன்னும் நல்ல முறையில் அமைக்கவும் இந்த மருத்துவமனையின் பொன்விழாவை ஒட்டி, இந்நகர மக்கள் முயன்றுவருகின்றனர்.

மருத்துவக் கல்லூரி ஒன்றைத்தொடங்குவதற்கேற்ற வகையில் இந்த மருத்துவமனை இரண்டாம் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் வளர்ச்சியடைந்திருக்கிறது என்று சொல்லுவது பொருந்தும்.

இந்த மாவட்டத்தின் அடுத்த பெருநகரமான ஈரோட்டிலும் மாநில அரசாங்கம் பெரிய மருத்துவ நிலையம் ஒன்றைக் கட்டியிருக்கிறது.

### மருத்துவர்கள்

புகழ்பெற்ற மருத்துவர் பலர் இந்த மாவட்டத்தில் கோயம்புத்தூர், பொள்ளாச்சி, திருப்பூர் ஆகிய இடங்களிலுள்ளனர். ஆனைமலைப் பகுதியிலுள்ள பல தோட்டங்களிலும் எல்லாப் பஞ்சாலைகளிலும் அவற்றின்

தேவைக்கேற்ப மருத்துவ நிலையங்கள் இருந்து வருகின்றன. தொழிலாளர்களுக்கென (E. S. I. Hospital) ஒரு மருத்துவமனையை தமிழ்நாடு அரசாங்கத்தார் 27 லட்சம் ரூபாய்ச் செலவில் கோவை நகரில் 1961-ல் ஏற்படுத்தியுள்ளனர்.

## தெலுங்குப்பாளையம் வைத்தியசாலை

இது கோவைமாநகரிலிருந்து பேரூருக்குச் செல்லும் வழியில் இருக்கிறது. இந்த நிலையம் சில நூற்றாண்டுகளாகப் புகழ்பெற்றது. 100 படுக்கைகளுடன் கூடிய மருத்துவமனை இங்கே இருக்கிறது. இளம்பிள்ளை வாதம், எலும்பு நரம்பு முதலியவை முறிதல் ஆகியவற்றுக்குத் தென் ஆப்பிரிக்காவிலிருந்தும் எகிப்திலிருந்தும் ஆசிய நாடுகள் பலவற்றிலிருந்தும் நோயாளிகள் இந்தவிடுதிக்கு வந்து பச்சிலைமூலிகை சிகிச்சை பெற்று நோய்நீங்கி நலம் பெற்று நல்வாழ்வு வாழ்ந்து வருகின்றனர். இந்த மருத்துவ நிலையத்தை டாக்டர் அர்ஜுனன் நடத்தி வருகிறார்.

## வாத நோய் நீக்கம்

சூலூர் அருகேயுள்ள பீடம் பள்ளியில் ஒருவகை எண்ணெய்யைத் தேய்த்து வாத நோயைப் போக்கி வருகின்றனர்.

## மோசஸ் ஞானாபரணம் கண்மருத்துவ விடுதி, கோவை

தமிழ்நாட்டில் கண்மருத்துவ விடுதிகளுள் புகழ் பெற்றதும் பெரியதும் சென்னை எழும்பூரிலுள்ள 'அரசாங்கக் கண் மருத்துவ நிலையம்' (கவர்மெண்ட் ஆப்தால்மிக் ஆஸ்பிட்டல்) எனப்படுவது. அதற்கு அடுத்தபடியாக குறிப்பிடத்தக்க கண் மருத்துவ விடுதி இதுவேயாகும்.

தம் தகப்பனுரான மோசஸ் ஞானபரணம் நினைவாக ஆரோக்கியசாமிப்பிள்ளை பெரியதொரு கட்டிடத்தைச் சுவீடிஷ் மிஷனுக்கு வழங்கினர். அவர்கள் அக்கட்டிடத்தில் 1928 முதல் கண் மருத்துவ விடுதியை நடத்தி வருகின்றனர். அது பலவாருக வளர்ச்சிபெற்று இப்போது நாள்தோறும் 300 பேருக்கு மருத்துவ உதவி செய்தும் 100 நோயாளிகளுக்குப் படுக்கை வசதி ஏற்படுத்தியும் டாக்டர் பிச்சை ராபர்ட்டு என்னும் புகழ்பெற்ற மருத்துவர் தலைமையில் நன்கு நடைபெற்று வருகிறது.

1952 முதல் இதன் கிளை ஒன்று போத்தனூரில் இயங்கி வருகிறது. அங்கே "குருடர் விடுதி" ஒன்று 1959-இல் தொடங்கப் பெற்றது. குருடர்களுக்கான பள்ளி ஒன்றை நிறுவ ஏற்பாடு நடைபெற்று வருகிறது.

### இராமலிங்கம் டி. பி. சனடோரியம், பெருந்துறை

நுரையீரல் நோயுற்றவர்களுக்கு மருத்துவம் செய்வதற்காக, கோயம்புத்தூர் மாவட்டத்திலுள்ள தனிப்பட்ட சிலரால் ஐந்தாம் ஜார்ஜ் மன்னரின் வெள்ளிவிழாக் கொண்டாட்டத்திற்கு வசூலிக்கப்பட்ட பொருளை மூலதனமாகக்கொண்டு இது 1935–இல் தொடங்கப் பெற்றது. இந்தநிலையம் கோவை மாவட்டக் கலக்டரைத் தலைவராகக்கொண்ட குழுவினரால் அரசாங்கத்தின் பொருளுதவியுடன் நடத்தப்பட்டுவருகிறது.

இந்த மருத்துவமனை ஈரோடு–அவினசிச்சாலையில், மழை குறைவானதும் மலேரியா நோய் இல்லாததுமான ஓர் இடத்தில் அமைந்திருக்கிறது. சுற்றிலும் பள்ளமாக உள்ளதும் கடல் மட்டத்திலிருந்து 300 மீட்டர் உயரத்தில் இருப்பதும் தூய்மையான மென்மையான காற்றுடன் தெளிவான சூரிய ஒளியும் நிறைந்திருப்பதும் இந்த இடத்தின் இயல்பு.

நுரையீரல் (காச) நோயுற்றவர்களுக்குப் பெருந்துறைக் காற்று, மருந்தாக உதவுகிறது என்று சொல்லலாம். அவர்கள் நலம்பெறவும், தங்கியிருக்கவும், பொழுதுபோக்கவும் வேண்டும் வசதிகள் செய்யப்பட்டுள்ளன. பல புதிய கட்டிடங்கள் இங்கு எழும்பிய வண்ணமாக உள்ளன. 300 நோயாளிகளுக்குப் படுக்கைகளும் சிறந்த அறுவை சிகிச்சை நிலையமும், ரேடியோலாஜிகல் கருவிகளும் உள்ளன.

மாநில அரசாங்கம், இந்தியத் தேயிலைக்குழு, அஞ்சல் அலுவலகத்துறை, டாட்டா எண்ணெய்த் தொழிற்சாலை, சில பெரிய காப்பி தேயிலைத்தோட்டங்கள், ஆயுள் பாது காப்புக் கார்ப்பரேசன், கோவை மாவட்டத்து நகராண்மைக்கழகங்கள், இன்ன பிற பொது நிலையங்களும், வணிக நிறுவனங்களும் தாங்கள் அவ்வப்போது அனுப்பும் நோயாளிகளுக்கு "இடமில்லை" என்று சொல்லிவிடாமல் படுக்கைகளை ஒதுக்கிவைக்கவேண்டும் என்ற நிபந்தனையுடன் பொருளுதவி செய்துள்ளனர். இத்தகைய கொடைவளமே இந்த நிலையத்தின் வளர்ச்சிக்கு வழி செய்கிறது. நோயாளிகள் உடல் நலம் பெறுவதோடு உள்ள நலமும் பெறுதற்கு வழிவகை செய்வதற்காக நூல்நிலையமும் திரைப்பட அரங்கும் உள்ளன.

நோயாளிகள் குடும்பத்தோடு தங்குவதற்கும் இங்கே வசதி உண்டு. நோயாளிமட்டுமே தங்கினால், அவருக்கு உணவு படைக்க, உணவில்லம் உண்டு. இது நோயாளிகளுக்கெனவே நடத்தப்படுவதால், ஒவ்வொரு பொருளையும் இங்கே சரிபார்த்துச் சோதித்து வாங்குகின்றனர். வடை சுடுவதற்கு, ஐந்து படி உளுத்தம் பருப்பை அரைமணி நேரத்தில் மாவாக அறைக்கும் கருவி இங்கே காணத்தக்கது.

நோய் நீக்கம் பெற்றபின்னரும் பெருந்துறையின் காற்றே மருந்தாக இருப்பதால், பலர் தொடர்ந்து இவ்

ஊரிலேயே வாழ்ந்துவருகின்றனர். ஒருசிலர், இம் மருத்துவ நிலையத்திலேயே வேலையில் சேர்ந்துகொள்ளு கின்றனர்.

நுரையீரல் நோய்க்கென, தமிழ்நாட்டில் தாம்பரம் செங்கற்பட்டு மாவட்டம்), செங்கிபட்டி (தஞ்சை), சோமநாதபுரம் (காரைக்குடிக்கு அருகே), நாகர்கோயில் ஆகிய இடங்களில் மருத்துவ மனைகளும், சென்னை எழும்பூரில் உலக சுகாதார நிறுவனத்தின் உதவியுடன் இந்திய அரசாங்கத்து நுரையீரல் மருத்துவ ஆராய்ச்சி நிலையமும் உள்ளன.

## பிற நிலையங்கள்

பூளைமேட்டில் டாக்டர் ஜகந்நாதன் நடத்தும் மருத் துவ நிலையமும் கோவை நகரின் பிறிதொரு பகுதியாகிய பாப்பநாயக்கன்பாளையத்தில் ஜி. குப்புசாமி நாயுடு பெண்கள் குழந்தைகள் மருத்துவ மனையும் வட கோயம் புத்தூர் இரயில் நிலையத்தருகேயுள்ள டாக்டர் செங்காளி யப்பா மருத்துவமனையும், ஈரோட்டிலுள்ளசர்ச்ஆப் சவுத் இந்தியா (C. S. I.) மருத்துவமனையும் குறிப்பிடத்தக்க வகையில் பணியாற்றி வருகின்றன.

## சித்த மருத்துவம்

சித்த மருத்துவ ஆராய்ச்சிக்கு இம்மாவட்டத்தில் ஒரு சிறு நிலையம் அமைக்கப்பட்டு வருகிறது. அதற் குரிய மூலிகைகளைப் பயிரிட ஜி. டி. நாயுடு 50 ஏக்கர் நிலம் வழங்கியுள்ளார்.

குன்னத்தூர் அருகேயுள்ள தாளப்பத்தியில் வெறி நாய்க்கடிக்கு மருத்துவம் செய்யப்படுகிறது.


கோவை மாவட்டம்
பவானி
கோபிச் செட்டிப் பாளையம்
சேலம் மாவட்டம்
நீலகிரி மாவட்டம்
அவிநாசி
ஈரோடு
கோயம் புத்தூர்
பல்லடம்
திருச்சி மாவட்டம்
தாராபுரம்
பொள்ளாச்சி
கேரள இராச்சியம்
உடுமலைப்பேட்டை
மதுரை மாவட்டம்
கேரள
இராச்சியம்

வட்டங்கள்

## 22. ஆட்சி அமைப்பு

கோயம்புத்தூர் மாவட்டம் ஆட்சியாளரால் பல வட்டங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இவ்வாறு இருந்துவரும் ஒன்பது வட்டங்களைப்பற்றியும் இனி தனித்தனியே குறிப்பிடுவோம்.

பல நகரங்களும் இம்மாவட்டத்தில் உள்ளன. நகராண்மைக் கழகம் உள்ள நகரங்களில், கோயம்புத்தூர் "ஸ்பெசல் கிரேடு முனிசிபாலிட்டி." என்ற பெயருடன் தமிழ்நாட்டின் தலைசிறந்த நகராண்மைக் கழகங்களுள் ஒன்ருக இருந்துவருகிறது. பொள்ளாச்சி, திருப்பூர் ஈரோடு ஆகிய மூன்று நகர்களிலும் முதல்தர நகராண்மைக் கழகங்கள் உள்ளன. உடுமலைப்பேட்டை, தாராபுரம், கோபிச்செட்டிபாளையம், குறிச்சி, மேட்டுப்பாளையம் ஆகிய இடங்களிலும் நகராண்மைக் கழகங்கள் உள்ளன.

ஒவ்வொரு துறையினரும் இம்மாவட்டத்தில் தங்கள் ஆட்சியை நன்கு நடத்த இதை இரு பிரிவுகளாகப் பிரித்து, கோவை வட மாவட்டம் கோவை தென் மாவட்டம் என்ற பெயர்களில் ஈரோடு, கோயம்புத்தூர் ஆகிய நகரங்களில் மாவட்ட அலுவலகங்களை வைத்துள்ளனர். ஆனல், மாவட்டக் கலக்டர், மாவட்ட நீதிபதி, மாவட்டப் போலீசு அலுவலர் போன்ருேர் கோவை நகரில் மட்டுமே உள்ளனர். நில வருவாய்த்துறைக்கு, கோவை ஒரு மாவட்டமாகவே இருந்துவருகிறது.

## 23. கோவை மாநகர்

தமிழ்நாட்டின் தலை சிறந்த நகரங்களுள் கோவையும் ஒன்று. பஞ்சாலைத் தொழிலில் உலகப் புகழ் பெற்றுள்ள மான்செஸ்டர் போல, அதே துறையில் தென்னிந்தியா வில் சிறப்புற்றுச் செல்வங் கொழிப்பதால், இந்நகரம் தென்னிந்தியாவின் மான்செஸ்டர் என்ற சிறப்புப் பெயர் பெற்றுத் திகழ்கிறது.

பஞ்சாலைத் தொழிலாளர்க்கு இந் நகரில் ஆண்டு தோறும் கொடுக்கப்படும் சம்பளத் தொகை பத்துக் கோடி ரூபாய். பஞ்சாலைத் தொழிலாளரும், பஞ்சாலை களை ஒட்டிய பிற தொழில்கள், வாணிபம் ஆகியவற்றாலும் மக்கள் கூட்டம் பெருகியிருப்பதால், சென்னை நகரைவிட இங்கு வீட்டு வாடகை, இடம் விலை, வாழ்க்கைச் செலவு ஆகியவை மிகக் கூடுதலாக இருக்கின்றன.

இத் தொழிலில் இந் நகர் அடைந்துள்ள பெரு முன் னேற்றத்தால், பல மொழியினரும் பல மாவட்டத்தினரும் இந் நகருக்கு வந்து இங்கேயே தங்கிவிடுகின்றனர். மலை யாள மொழி பறையும் மாண்புடையோர், கன்னடத்தில் பேசும் கனவான்கள், சுந்தரத் தெலுங்கில் உரையாடும் மக்கள், இந்தி, குஜராத்தி மொழிகளைப் பேசும் வணிகர் ஆகியோரும் கோவை நகரின்கண் வாழ்கின்றனர். சூழ் நிலையின் காரணத்தால் பல மொழி பேசும் ஆற்றல் படைத்தோர் பலரை இந்த நகரில் நாளும் காணலாம்.

தொழில் வளர்ச்சியால் இந்நகரில் ஒரு புறம் பெருஞ் செல்வர்களும் மறுபுறம் தொழிலாளர் கூட்டமும் பெருகி யுள்ளன. இவ்விரு சாரார் மட்டுமே வாழக்கூடிய ஊராக இருக்கிறதென்று கோவையில் வாழும் நடுத்தர வகுப்பினர் அல்லற்பட்டுக் கூறுகின்றனர். தொழி

லாளரைவிடச் சற்றே கூடுதலான வருவாய் பெற்று, செல்வர்களைப்போல ஓரளவேனும் வாழ முயலுபவர்கள் தானே நடுத்தர வகுப்பினர்?

மருதமலைக் காற்று அடிப்பதும் நீலகிரி மலைக்கு அண்மையில் அமைந்திருப்பதும் இந் நகருக்கு நற்பெயர் நல்குகின்றன. 440 மீட்டர் உயரத்தில் இருப்பதால் இவ்வூரில், கோடை காலத்தில் சமவெளியிலுள்ள வெப்பமோ, நீண்டுயர்ந்த மலைப்பகுதிகளிலுள்ள நடுக்கும் குளிரோ, இல்லை. இதனால் இவ்வூரை 'ஏழைகளின் உதகமண்டலம்' என்றுங்கூறலாம். இந் நகரம் பாலக்காடு கணவாய்க்கு எதிரே அமைந்திருப்பதால் கோடையில் தென் மேற்குப் பருவக்காற்றும் குளிர் காலத்தில் வட கிழக்குப் பருவக் காற்றும் வீசி, ஆகாயத்தில் ஈரக்கசிவு இருக்கிறது.

### பெயர்க்காரணம்

கோயம்புத்தூர் என்னும் பெயர் ஏற்பட்டதற்குப் பல காரணங்கள் பகரப்படுகின்றன. இந் நகர்ச் சுற்றுபுறத்திலுள்ள நிலத்தின் மண் கோவைப்பழம் போன்று செக்கச் சிவந்து இருப்பதால், அப்பெயர் ஏற்பட்டது என்பர் சிலர்.

இந் நகரில் தொல்புகழ் நொய்யல் ஆற்றின் கரையில் கோவன் என்ற பெயருடைய தலைவன் ஒருவன் நெடுங் காலத்துக்குமுன்னர் தம் கூட்டத்துடன் வாழ்ந்தான். கோவன் தலைமையில் இருந்த பதி கோவன்பதி. இப் பெயர் கோவன்புத்தூர் என்று திரிந்ததாக வரலாற்று நூலோர் கூறுவர்.

கோயமான் புத்தூர் என்பதே சரியான பெயர் என்பது சிலரது கருத்து. கல்வெட்டுக்களில் 'கோயமான்' என்ற மன்னர் பற்றிக் கூறப்படுவது இக்கருத்தை வலியுறுத்துகிறது.

கோயன் என்ற இலக்கணமுடைய சொல்லின் திரிபே கோசன் என்ற சொல் என்றும் கூறுகின்றனர், கோசன் என்ற ஒரு புலவர் சங்ககாலத்தில் இருந்ததும். நற்றிணை 214-ஆம் பாடலில் ஆசிரியர் பெயர் கருவீர்க் கோசனர் என்று இருப்பதும் ஈண்டு நினைக்கத்தக்கன.

கோசர் என்பவர்கள் அரசாண்டதால் கோசன் புத்தூர் என்ற பெயர் ஏற்பட்டது என்று வாதாடுபவர் களும் உள்ளனர்.

ஒருகாலத்தில், காடாகக் கிடந்த கோவை சேரர் ஆட்சியில் கொங்குநாடு என்னும் பெயர் பெற்று முத்து முத்தாகப் பயிர்களை விளைவித்தது; அதனல் கோய முத்தூர் என்ருயிற்று என்பர் இன்னுஞ் சிலர்.

## நகரின் சிறப்புக்கள்

தமிழ் நாட்டில் நகராண்மைக் கழகங்கள் முதலில் ஏற்பட்ட ஊர்களுள் இந் நகரமும் ஒன்று. சென்னை, மதுரை நகரங்களுக்கடுத்தபடி, இந்த நகராண்மைக் கழகமே தமிழ் நாட்டில் மிகப் பெரிது. சென்னை நகருக்கு அடுத்தபடியாக இங்கு தான் மிகுதியான அரசாங்க அலுவலகங்களும் தொலைபேசி கருவிகளும் உள்ளன.

இந் நகராண்மைக் கழகத்துக்கு ஸ்பெசல் கிரெடு முனிசிபாலிட்டி என்று பெயர். தமிழ்நாட்டில் இத்த கைய கழகங்கள் ஐந்துமட்டுமே உண்டு. அவை யாவன: மதுரை, கோவை, திருச்சி, சேலம், கடலூர்.

கோவையை அடுத்துள்ள குறிச்சி நகராண்மைக் கழகப்பகுதி, பூளைமேடு ஊராண்மைக் கழகப் பகுதி ஆகியவற்றையும் கோவை நகராண்மைக் கழகத்தில் சேர்த்து, இந் நகருக்கு ஒரு 'கார்ப்பரேசன்' அமைப்பு ஏற்பட வேண்டுமென்று சிலர் கருதுகின்றனர்; அவ்வாறு

செய்தால் ஆட்சித் திறமை குறைந்துவிடுமென்றும், பூளைமேட்டுப் பகுதியில் வாழ்பவர்கள் கூடுதலான வரி செலுத்த வேண்டியதிருக்குமென்றும் எனவே அந்த ஏற்பாடு கூடாதென்றும் வேறு சிலர் கருதுகின்றனர்.

இக்கழகத்தின் எல்லைப் பரப்பு 25 சதுர கி. மீ. சிறைச்சாலையும் காட்டியல் கல்லூரியும் இக்கழக எல்லையி னின்றும் விலக்கப்பட்டுள்ளன. கோவை நகராண்மைக் கழகத்து எல்லைக்குள் கோயம்புத்தூர், தெலுங்குப் பாளையம், இராமநாதபுரம், கிருஷ்ணராயபுரம்,சங்கனூர், அனுப்பர்பாளையம், புலியக்குளம், குமாரபாளையம், சவரிபாளையம், கணபதி ஆகிய ரெவினியூ கிராமங்கள் உள்ளன.

இந்நகரிலுள்ள புதிய குடியிருப்புக்கள் சிலவற்றுக்கு டாட்ட-அ-பாத், சாயிபாபா காலனி முதலிய பெயர்கள் உள்ளன. தொழிலாளர் தலைவர்கள் பெயராலும் பல பேட்டைகள் தோன்றியுள்ளன. ஆர். எஸ். புரம் என்பது இந்த நூற்றாண்டில் இந் நகரின் பெரு வளர்ச்சிக்குக் காரணமாக இருந்த சி. எஸ். இரத்தினசபாபதி முதலி யாரின்நினைவாக ஏற்பட்ட பகுதி. கோவை மாநகருக்குப் பெரும் புகழ்தந்த மற்றொரு பெருமகன் டாக்டர் ரா. க. சண்முகம் செட்டியார் ஆவார்.

இந் நகராண்மைக் கழகத்திற்கு வருவாய் (1959–இல்) ஒரு கோடி 16 லட்சம் ரூபாய் ஆகும். இக்கழகம் இலவசக் கட்டாயக் கல்வி முறையை முதல்ஐந்து வகுப்பு களுக்கும் 1933 இலேயே ஏற்படுத்தியிருக்கிறது. குருடர் செவிடர்க்கென பள்ளி ஒன்றையும் நடத்தி வருகிறது. உயிரினக்கூடம் (Zoo) ஒன்றைத் தொடங்க ஆவன செய்து வருகிறது.

உடல் நலத்துறையில் கோவை நகராண்மைக்கழகம் ஆர்வம் காட்டி வருகிறது. ஒரு காலத்தில் பிளேக்

# கோவை மாநகர்



1. கலெக்டர் அலுவலகம்
2. கோவை தெற்கு ரயில் சந்திப்பு
3. கோவை வடக்கு ரயில் நிலையம்
4. அரசாங்கக் கலைக் கல்லூரி
5. காட்டியல் கல்லூரி
6. வேளாண்மைக் கல்லூரி
டாட்டாபாத்
கணபதி
அவிநாசிச் சாலை
வார்ப்படத் தொழிற்சாலைகள்
பீளமேடு
விமான நிலையம்
பஞ்சாலைகள்
வ
மே
கி
தெ
சர்க்யூட் ஹவுஸ்
ரேஸ் கோர்ஸ்
ராஜ வீதி
பெரிய கடை வீதி
வாலாங்குளம்
சின்னக்குளம்
பெரிய குளம்
பேரூர்க் கோயில்
திருச்சிச்சாலை
சிங்கா நல்லூர்
சூலூர் விமான நிலையம்

என்னும் கொடிய நோயினால் இந் நகர் வாழ்நர் துன்பப் பட்டனர். அந்த நிலை இப்போதில்லை. 1957 இல் 23,000 பேர் இன்புளுயன்சா நோயினால் வருந்தினர்.

இடையிடையே தெருவில் உலவும் நாய்கள் மக்களுக்குத் தொல்லை தருவதால், அதற்குரியமருத்துவ வசதிகளைச் செய்யவும் நாய்களை மின்சாரக் கருவியால் கொல்லவும் இக் கழகம் ஏற்பாடு செய்திருக்கிறது.

காந்தி பூங்காவில் நீந்துகுளம் ஒன்றை இக்கழகம் அமைத்திருக்கிறது. 1871 முதல் இக்கழகம் லங்கர்கானா (பிச்சைக்காரர் விடுதி) ஒன்றை நடத்தி வருகிறது.

கோவை நகரில் சிறந்த குடி தண்ணீர் கிடைக்கிறது. இந்நீரைத் தரும்தேக்கம், நகரிலிருந்து 16மைல் (25 கி.மீ) தொலைவிலுள்ள கேரள எல்லைக்குள் மேற்குத்தொடர்ச்சி மலையின் கிழக்குப் பகுதியில் இருக்கிறது. அங்கு முத்துக் குளம் பள்ளத்தாக்கில் சிறுவாணி ஆற்றின் குறுக்கே அணை கட்டியுள்ளனர். அணை, தேக்கம் இவற்றின் பரப்பு இரண்டு சதுரமைல். இந்த 5 சதுர கி.மீ. பரப்பைத்தமிழ் நாட்டுடன் சேர்க்க வேண்டுமென்று இந் நகராண்மைக் கழகம் அரசாங்கத்தைக் கேட்டுக்கொண்டிருக்கிறது. ஏனெனில், சிறுவாணியில் ஒன்றரைக்கோடி செலவுசெய்து பிறிதோர் அணை அமைத்தால் வளர்ந்துவரும் கோவை நகரின் வறட்சி தீர வழி பிறக்கும்; தண்ணீரைக் குடிநீருக்கு மட்டும் தருவதாகவும் பாசனத்துக்கு அதைப் பயன்படுத்தகூடாது என்றும் இந்நிபந்தனைக் குட்பட்டுச் சிறு வாணியில் இரண்டாவது அணையைத் தமிழ்நாடு அரசாங்கம் கட்டிக்கொள்ளலாம் என்று கேரள அரசாங்கம் அறிவித்திருக்கிறது.

இந்தியாவிலேயே வேறு எந்த நகரத்திலும் சிறுவாணி நீர் போன்ற தூய்மையான தெளிவான குடிநீர் கிடைப்பதில்லை. சிறுவாணி தேக்கமும் அதற்காக மலைக்

குள் ஒரு மைல் நீளத்துக்குக் குடையப் பெற்றுள்ள சுரங்கமும் காணத்தக்கவை; பொழுது போக்கி மகிழ்தற்கு இது இனிய இடம்.

கோவையில் இருப்பவை :- 12 திரைப்பட மாளிகைகள், தமிழ் நாட்டிலேயே சிறந்த முறையில் நடைபெறும் கோவை மாவட்ட நூலகம், குறுகிய தெருக்களில் ஊர்ந்து செல்லும் 110 நகர பஸ்கள், ஏராளமான பஞ்சாலைகள்.

## கோணியம்மன் கோயில்

இங்கே கோயில் கொண்டிருக்கும் அம்மன், இன்றைய கோவையில் எல்லோருக்கும் பொதுவான ஊர்த்தேவதை ஆகும். இதை, கொங்கணி அம்மன் கோயில் (கொங்கு நாட்டுக்கு அணி செய்யும் அம்மன் கோயில் என்ற பொருளில்) என்றும் கூறுவர். இக்கோயில் இருளர்களால் பல நூற்றாண்டுகளுக்குமுன் கட்டப்பட்டது. இருளர், காட்டில் வேட்டையாடி தினை விதைத்தும் தேன் எடுத்தும் வாழ்ந்தனர். மயிற்பீலி, பாசி மணி, புலிப்பல் ஆகியவை அவர்களுடைய அணிகளாக இருந்தன. ஆடு, எருமை, பன்றி ஆகிய மூன்றும் இருளர் அருமையாக மதித்துப் போற்றும் சொத்துக்கள்; அவற்றையே முப்பலியாக வழங்க அவர்கள் அமைத்துக் கொண்ட அம்மனே கோணியம்மன்.

அம்மனின் கல் உருவம், மேடையொன்றின்மீது நிறுத்தப்பெற்றது. ஒருநாள் அவ்வுரு சாய்ந்திருக்கக் கண்டனர். சாய்ந்தவாறு இருப்பதே அம்மனின் திருவுள்ளம் என்றெண்ணி, மக்கள் அதை அவ்வாறே விட்டுவிட்டனர் பிற்காலத்து மக்கள் இந்த அம்மனைக் கோண அம்மன், கோணி அம்மன் என்று கூறுவாராயினர்.

## 24. கோயம்புத்தூர் வட்டம்

கோயம்புத்தூர் வட்டம், கோவைமாநகரைத் தன்னகத்தே கொண்டிருப்பதால், இம்மாவட்டத்தின் முக்கியமான பகுதியாக இருக்கிறது.

இவ்வட்டத்தின் சில பகுதிகள் கடல்மட்டத்திலிருந்து 1300 அடிமுதல் 1400 அடிவரை உயர்ந்துள்ளன, இதனாலும் பாலக்காட்டுக் கணவாய்வழியாக அடிக்கும் தென்றல் காற்றாலும் இவ்வட்டத்தில் எப்போதும் இன்பந்தரும் இயற்கைநிலை இருக்கிறது. தமிழ்நாட்டின் ஏனைய பகுதிகளில் நிலவும் வெப்பத்தின் கொடுமையைக் கோவைவட்டத்தில் காண இயலாது.

கல்வி, தொழில், போக்குவரத்துத் துறைகளில் இவ்வட்டம் மாவட்டத்தின் ஏனைய வட்டங்களுக்கெல்லாம் வழிகாட்டியாக இருக்கிறது. இங்கு மக்கள் நெருக்கம் மிகுதி. மாவட்டத் தலைநகரம் இருப்பதால், நாகரிகத்தின் அறிகுறிகளாக உள்ள புத்தம் புதிய தொழில்கள், உயர்ந்து வளர்ந்த கட்டிடங்கள், திரைப்பட மாளிகைகள், தொழில்தகராறுகளால் விளையும் கொலைகள் ஆகியவற்றாலும் இவ்வட்டம் புகழ்பெற்றிருக்கிறது.

கோவையிலிருந்து பாலக்காடு செல்லும் வழியில் 18 மைலிலுள்ள வளையாறு அணை, காணத்தக்க இடங்களில் ஒன்று.

### பூளை மேடு

மாரியம்மன் கோயிலுக்கும் பெருமாள் கோயிலுக்கும் இடைப்பட்ட ஒரு மேட்டில் பூளைப்பூக்கள் பூத்த வண்ணமாக இருந்தன. இதுதான் 1890 அளவில் இவ்வூரின் நிலை. அப்போது ஏற்பட்ட காரணப் பெயரே

பூளை மேடு. பூளை மேடு இன்று செல்வம் நிறைந்த மேடாக, கோவைநகரை யொட்டிய தொழிற் பேட்டையாக, தனி ஊராட்சி மன்றமாக உள்ளது.

### துடியலூர்

இச்சிற்றூர் கோவைநகர எல்லையருகே இருக்கிறது. திங்கள் தோறும் இங்கே சந்தைகூடுகிறது. நீலகிரி மலை வாழ்நர் தங்கள் தேவைகளை இச்சந்தையிலேயே வாங்கிக்கொள்ளுகின்றனர். சிவந்திப் பூவும்காய்கறி களும் இங்கே மிகுதியாகக் கிடைக்கின்றன.

### சோமனூர்

இவ்வூரிலிருந்து ஐந்து கி. மீ. தொலைவிலுள்ள வாழைத்தோட்டத்து ஐயன்கோயில் காணத்தக்கது.

### பேரூர்



மேலைச் சிதம்பரம் என்று குறிப்பிடப்படுவதும் கொங்கேழு தலங்களுள் ஒன்ருக உள்ளதும் ஆகிய பேரூர் கோவை நகரத்திலிருந்து நான்கு மைல் (ஆறரை கி. மீ.) தொலைவில் நொய்யல் ஆற்றின் கரையில் வயல் சூழ அமைந்திருக்கிறது. இவ்வூருக்குத் தல புராணம் உண்டு.

பேரூர், சோழ கேரள மண்டலத்தின் ஒரு பகுதி யான பேரூர் நாட்டின் தலைநகரமாக இருந்தது. பேரூர் என்னுஞ் சொல், பெரிய ஊர் (அதாவது நகரம்) என்றும் பொருள்படும். ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன் ரோம் நாட்டிலிருந்து வந்த வணிகர் பேரூரில் தங்கித் தங்கத் தைக் கொடுத்து மிளகு வாங்கியனுப்பினராம். வர லாற்றுக் காலத்துக்கு முற்பட்ட நாணயங்கள் இப்பகுதி யில் கண்டெடுக்கப் பெற்றுள்ளன.

பட்டீசுவரன் கோவிலும் கரிகால் சோழன் காலத்தி லேயே கட்டப்பெற்ற பழமையுடைய கிராம தேவதைக்

கோயிலும் நால்வர் மடாலயமும் வேறு பல சிறு கோயில் களும் சாந்தலிங்க அடிகளாரின் மடமும் தமிழ்க் கல்லூரி ஒன்றும் இச்சிற்றூரில் உள்ளன. நொய்யல் ஆற்றில் ஈமக்கிரிகைகள் செய்யவும் அமாவாசை நாட்களில் நீரா டவும் மக்கள் பேரூருக்கு வருகின்றனர்.

பட்டீசுவரன் கோயில் பேரூர்க் கோயில் என்றும் பேரூர் முருகன் கோயில் என்றும் குறிப்பிடப்படுகிறது. சோழ அரசர் ஒருவர் அமைத்த கர்ப்பக்கிரகம், கொங்குச் சோழ அரசர் ஒருவர் கட்டிய அர்த்தமண்டபம், மைசூர் அரசர் ஒருவர் வெட்டிய தெப்பக்குளம், மதுரை நாயக்க அரசர்கள் நிறுவிய கனகசபை, ஒய்சாளர்களின் திருப் பணி-இவற்றையெல்லாம் இக்கோயிலில் ஒருங்கே காண லாம். கேரளத்துக் கோயில்களுக்கே சிறப்பாக உரிய தூய்மையான காட்சி இங்கே நிலவுகிறது.

திருநாவுக்கரச சுவாமிகளும் சுந்தரமூர்த்திசுவாமி களும் பேரூரில் வழிபட்டிருக்கின்றனர். பேரூரைப் பற்றி அவர்கள் இயற்றிய தேவாரங்கள் கிடைத்தில. பிற தலங்களின் தேவாரங்களில் அவர்கள் பேரூரைக் குறிப் பிட்டிருப்பது மட்டுமே நமக்குக் கிடைத்திருப்பதால், பேரூர் ஒரு "வைப்புத்தலம்" ஆகும். அருணகிரி நாதரின் திருப்புகழும் இத்தலத்துக்கு உண்டு.

இங்குள்ள முருகனுக்குப் பட்டீசுவரர் என்றும் அம்மனுக்குப் பச்சை நாயகி என்றும் பெயர்.

பேரூர்க் கோயிலிலுள்ள கல்வெட்டுகள் கொங்கு நாட்டு வரலாற்றை அறிய மிகவும் உதவியாக உள்ளன.

எத்துணைக்காலமாக இருந்துவருகிறது என்று யாரா லும் சொல்லமுடியாத பனை, முளை விடாத புளியைத் தரும் மரம், உழவுத்தொழில் செய்யும் ஏழைப்பள்ளனாகச் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குக் காட்சிதந்து பிறகு களி

நடனம் ஆடிய பட்டீசுவரன்-இம்மூன்றும் இருப்பதால் இறவாப் பனை, பிறவாப் புளி, பரம பள்ளன் ஆகிய மூன்றும் பேரூரில் காண வேண்டியவை என்று கூறுவர்.

ஆண்டுதோறும் இங்கே ஆனி மாதத்தில் நாற்று நடவு விழாவும் மார்கழியில் ஆருத்திரா தரிசனமும் பங்குனியில் உத்தரமும் நடைபெறுகின்றன. நாற்றுநடவு விழாவில் பட்டீசுவரன்-பச்சைநாயகி திருவுருவங்கள் பள்ளர் வேடத்தில் வயல்களுக்கு எடுத்துச் செல்லப்பட்டு, நடவு நடப்பதை அவர்கள் காணும் காட்சி இத்தலத்துக்குரிய தனிச்சிறப்பாகும்.

இக்கோயிலில், விரும்புபவர்க்குத் தமிழில் அர்ச்சனை செய்துதரப்படுகிறது.

### பேரூர்ச் சிற்பங்கள்

பேரூர்க்கோயில் சிற்பச்சிறப்பு நிறைந்தது. தாடிக்கொம்பு, தாரமங்கலம், பெரியபாளையம் ஆகிய ஊர்களிலுள்ள கோயில்களின் சிற்பங்களை உருவாக்கியவரே வேலை நுட்பத்தில் திறனடைந்து கடைசியாகப் பேரூர்க் கோயிலிலுள்ள சிற்பங்களை உருவாக்கினர் என்றும் பேரூரில்தான் அவருடைய கலை மிக உயர்ந்த நிலையை எய்தியது என்றும் பேரூர்க் கோயிலிலுள்ள சிற்பச் செல்வங்களின் பெருமைக்கு இதுவே காரணமென்றும் சிலர் கருதுகின்றனர்.

இச்சிற்பங்கள் யாவும் மருதமலையிலிருந்து கொண்டு வந்த கல்லில் செதுக்கப்பெற்றன. உறுப்புக்களில் தடித்த பகுதிக்கும் மெல்லியபகுதிக்கும் நிறம் வேறுபட்டிருப்பதை இச்சிற்பங்களில் காணலாம். இவ்வாறு நுண்ணிய வேலைப் பாடுகள் பல உள்ளன.

ஒவ்வொரு சிலையும் பெரும்பாலும் 6, 6½ அடி உயரம் உள்ளவை. எனவே, காண்பார் உள்ளத்தை ஈர்க்

கும் அமைப்பு இவற்றுக்கு உண்டு. நகச்சதை, நகத்தின் கூர்மை ஆகியவையும் தெளிவாகத் தெரிகின்றன.

பட்டீசுவரன் கோயிலின் உட்கோயிலாகிய கூத்தர் கோயிலில் காளியம்மன் உருவம் இருக்கிறது. ஓர் உருவம் ஒரு நிகழ்ச்சியை மட்டுமே சித்திரிப்பது உலக வழக்கு. இங்கேயோ எனில், காளியம்மனின் கவினுறு வடிவத்தில் வெற்றி தோல்வி என்னும் இருநிலைகளும் படம் பிடித்துக்காட்டப்பட்டுள்ளன. காளியம்மனின் வாய் இதழிற்கூட, புற நிறம் அகநிறம் இவற்றின் வேறுபாடு, நுனித்த நோக்குடையார்க்குத் தெரியும். கூத்தர் கோயிலின் கட்டிட அமைப்பும் உன்னி ஆராயத்தக்கது.

## வடவழி

கோவை நகரிலிருந்து ஆறு கி. மீ. தொலைவிலுள்ள இவ்வூரில் ஒரு பழமையான கோயில் இருக்கிறது. அருணசலக்கவிராயர் இக்கோயிலுக்குச் சதகம் பாடியிருக்கிறார். இங்கு ஓர் அரண்மனை இருந்ததாகத் தெரிகிறது. இவ்வூரிலிருந்துதான் பேரூர்க் கோயில் கட்டுவதற்குக் கல் எடுக்கப்பட்டது. வடவழி என்பது வடப்பள்ளி என்பதன் மரூஉ என்பர்.

## மருதமலை

கோயம்புத்தூருக்கு வடமேற்கே ஏறத்தாழ ஏழு கல் (11 கி. மீ) தொலைவில், மேற்குத் தொடர்ச்சி மலையில் மருதமலை இருக்கிறது. கோயம்புத்தூரிலிருந்து நான்கு கல் தொலைவிலுள்ள வடவழிவரை பஸ்ஸில் சென்று, பிறகு எஞ்சியுள்ள மூன்று கல் தொலைவு நடக்கலாம் அல்லது வண்டியில் சென்று மலையடிவாரத்தை அடையலாம். கார்த்திகை நாட்களில் மட்டும், மலையடிவாரம் வரை பஸ் செல்லுகிறது.

கோயில் இருக்கும் இடம் கடல்மட்டத்திலிருந்து 2500 அடி உயரம்; அடிவாரத்திலிருந்து 500 அடி உயரமானது. இதற்கு, ஒரு மைல் தொலைவுக்கு நடந்து மலைமீதேறி, குண்டுக்கற்களாலான இயற்கை மலைவழிப் பாதையில் செல்லவேண்டும்.

அடிவாரத்தில் தான்தோன்றிப் பிள்ளையார் கோயில் இருக்கிறது. மலைக்கோயிலின் மூலவர் ஆறுமுகக் கடவுள். மருதாசலமூர்த்தி என்பது அவர் திருநாமம். அருணைசலக் கவிராயர் இயற்றிய மருதாசலக் கடவுள் பிள்ளைத் தமிழும் அருணகிரிநாதர் பாடிய திருப்புகழும் இத்தலத்துக்கு உண்டு. இக்கோயிலைப்பற்றித் திருமுருகன் பூண்டிக்கல்வெட்டில் குறிப்பிடப்பெற்றிருப்பதால் இது 800 ஆண்டுகளுக்குமுன்னரே அமைந்திருக்கவேண்டும்.

### வெள்ளிங்கிரி மலை

இது சிறுவாணி தேக்கத்துக்கு அருகே உள்ளது. இம்மலையின் உச்சியில் மூன்று பாதைகள் உள்ளன. இம்மலைக்குத் தென்கைலாசம் என்றும் பெயர் உண்டு. வேனிற்காலத்தில் மக்கள் திரளாக வருவர். அடிவாரத்தில் கோயில் கொண்டிருக்கும் வெள்ளிங்கிரிநாதர் பெயரைக் குழந்தைகளுக்கு இடும் வழக்கம் கோவை மாவட்டத்தில் உண்டு. இம்மலையிலும் குருடிமலை, வரப்பாளையம், சின்னத் தடாகம், மருதமலை, சிறுவாணி மலை ஆகியவற்றிலும் பலமூலிகைகள் உள்ளன.

## 25. பொள்ளாச்சி வட்டம்

ஆனைமலைத் தோட்டங்களாலும், அமைந்துவரும் பரம்பிக்குளம் அணையாலும், செல்வம் கொழிக்கும் பொள்ளாச்சிச் சந்தையாலும் இந்நாளில் புகழ்பெற்றுள்ள பொள்ளாச்சி வட்டம் வரலாற்றுப் பெருமையும் உடையது. ஈராயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட வெளிநாட்டு நாணயங்கள் இங்கே கண்டெடுக்கப் பெற்றுள்ளன.

நேகமத்திலிருந்து 8 கி. மீ. தொலைவிலுள்ள பெரிய களந்தை என்னும் ஊரில் கல்வெட்டுள்ள சிவன்கோயில் இருக்கிறது.

தரைமட்டத்திலிருந்து 30 மீட்டர் உயரத்திலுள்ள கிணற்றுக்கடவுபொன்மலை என்ற பாறையில் ஒரு கோயில் இருக்கிறது. இக்கோயிலைப்பற்றி மைசூர் அரசர்கள் காலத்தில் ஏற்பட்ட செப்பேட்டிலிருந்து இவ்வூர்ச் சந்தைக்கு வரும் சரக்குகள் மீது வரி வசூலித்துக் கோவில் நிர்வாகம் நடைபெற்றதாகத் தெரிகிறது.

வால்பாறைக்குச் செல்லும் வழியில் ஆனைமலைத் தொடரின் அடிவாரத்தில் ஆற்றைக் கடந்ததும், சமணர் தவம் செய்த படுக்கைகள் காணப்படுகின்றன. இந்த வட்டத்தில் சில இடங்களில் சமணர் கோயில்கள் உள்ளன.

பொள்ளாச்சி என்றபெயரைக்கேட்ட அளவிலேயே எல்லாருக்கும் சந்தை நினைவுதான் வரும். ஆம், வியாபாரத்தில் தலை சிறந்து விளங்கும் நகரம் அது. இப்போது மட்டுமா? ஈராயிரம் ஆண்டுகட்கு முன்னரே

இப்பெருமையைப் பெற்றிருந்தது. பழங்காலத்துச் சவப் பானைகள் இவ்வூர் அருகே புதைந்து கிடக்கின்றன. வரலாற்றுக் காலத்துக்கு முந்திய திராவிட ஆடவர்-பெண்டிரின் வெண்கல உருவங்களும் கிடைத்துள்ளன. ரோமாபுரியை ஆண்ட அகஸ்டஸ் வெளியிட்ட வெள்ளி நாணயங்களும் இப்பகுதியில் தோண்டி எடுக்கப்பட்டுள்ளன.

தமிழ்நாட்டிலேயே—ஏன், இந்தியாவிலேயே—மிகப் பெரிய சந்தை பொள்ளாச்சிச் சந்தை. ஐம்பது தேயிலைத் தோட்டங்களுக்கு அருகே இருப்பதாலும், மக்கள் மிகுந்த மலையாள நாடு 20 கி. மீ. தொலைவிலுள்ள வண்ணமடையில் தொடங்குவதாலும் பொள்ளாச்சி இணையற்ற புகழ் பெற்றிருக்கிறது. வியாழக்கிழமையன்று இரயிலிலிருந்தும் பஸ்ஸிலிருந்தும் இறங்கி மக்கள் பெருந்திரளாகச் சந்தையை நோக்கிச் செல்லும் காட்சி தேர்த் திருவிழா அல்லது கும்பகோணம் மகாமகத்துக்கு மக்கள் கூடுவதைப்போல இருக்கும். இரயில் நிலையத்திலிருந்து சந்தைக்கு மக்கள் கூட்டம் என்னைக்கொண்டு போய்ச் சேர்த்துவிட்டது. அந்த வழியைக் காண்பிக்கும்படி யாரையும் கேட்கத் தேவை ஏற்படவில்லை. சந்தை நாள், முன்னும் பின்னும் உள்ள நாட்கள் இந்த மூன்று நாட்களிலுயே கூட்டம் மிகுதியாக இருப்பதால், அந்நாளில் உள்ளூர்க்காரர் வெளியே செல்லு வதைக் குறைத்துக் கொள்ளுவார்கள். இந்தச் சந்தையில் சில சமயம் பட்டாக் காட்டுக்குள் வரும் யானைகளைப் பிடித்து கொண்டு வந்து விற்பார்கள். அரசாங்கத்தாரின் யானைப் பயிற்சி நிலையம் இவ்வூருக்குச் சமீபத்திலேயே இருக்கிறது. தாயாரைத் தவிர எதை வேண்டுமாயினும் பொள்ளாச்சிச் சந்தையில் வாங்கலாம் என்பார்கள் !

இப்பகுதியில் தென்னந் தோப்புக்கள் ஏராளம். வண்டிக்கணக்காக, தேங்காய் வாங்கலாம். பூசணிக்காய், கரும்பு, மீன், கோழி, ஆட்டுத்தோல், பழம், காய் கனி இவற்றில் எதையும் எத்தனை லாரி வேண்டுமானாலும் வாங்கலாம், கையில் பணம் இருந்தால்! வாங்கும் பொருள்களை அனுப்ப மூங்கில் கூடை, கோணிப்பை ஆகியவற்றையும் பதினாயிரக் கணக்கில் வாங்கலாம். துணி வியாபாரமும் பெரிய அளவில் நடைபெறுகிறது. எப்பொருளையும் எத்தனை ஆயிரம் ரூபாய்க்கும் நொடிப் பொழுதில் வாங்கலாம். சந்தையைச் சுற்றிப் பெரியதொரு கோட்டைச் சுவர் இருக்கிறது. இதைத் தாண்டி உள்ளே வரும் வண்டிகள் ஏராளம். அதனால் வண்டிக் களிம்பு (கீல்) நிறைய விற்பனை ஆகிறது. சந்தைக்குள்ளேயே ஒரு காவல் நிலையமும் இருக்கிறது. இந்தச் சந்தையில் பொருள் வாங்குபவர் பெரும்பாலும் வெளியூர்ச் சந்தைகளில் வியாபாரியாக இருப்பவர்களே. சந்தையன்று, பொள்ளாச்சியில் மூன்று லட்சம் ரூபாய்க்கு அரிசி விற்பனை ஆகிறதாம். கருவேப்பிலையை 'வாகன் கணக்கில் வாங்கலாம்! தேக்கு மரம், மூங்கில் இவற்றையும் எவ்வளவு வேண்டுமானாலும் பெறலாம். மலையாளத்துத் தேக்கு விற்பனையாவதும் பொள்ளாச்சியில்தான்.

ஐரோப்பியர் சிலரும் பொருள்கள் வாங்குவதை இங்கே காணலாம். ஆனை மலையிலுள்ள தேயிலைத் தோட்டத் தொழிலாளர், காட்டிலாகாவில் வேலை செய்யும் தொழிலாளர் ஆகியோருக்கு உணவுப்பொருள் வழங்கும் காண்டிராக்டர்களும் அப்பொருள்களைப் பொள்ளாச்சியில் வாங்குகிறார்கள். அக்காடுகளில் மரம் தூக்கும் யானைகளின் பசியைத் தீர்க்கவும் பொள்ளாச்சிச் சந்தையால்தானே இயலும்?

இங்கு மொத்த வியாபாரம் நடைபெறும் பொருள்களில் நிலக்கடலை குறிப்பிடத்தக்கது.

100 ஏக்கர் பரப்பளவில் நிலக்கடலை விளைவிக்கும் நிலச்சுவான்தார் பலர் இருக்கிறார்கள். திடீரென்று நிலக்கடலை விலை குறைந்துவிட்டால், இப் பகுதியின் பொருளாதாரம் பாதிக்கப்படுகிறது. நிலக்கடலைக்கு கிராக்கி ஏற்பட்டால் அல்லது வெளிநாடுகளுக்கு ஏற்று மதியானால், இங்கு செல்வம் பொழியும். பருத்தி, சோளம், நெல், நவதானியம், மல்லி, வெங்காயம் ஆகிய வையும் பொள்ளாச்சிப் பகுதியில் நிறைய விளைகின்றன.

மண்பாண்டம், பச்சை நிறைச் சிகைக்காய்த் தூள், பட்டைக்காய், எண்ணெய், பாத்திரம், பலசரக்கு, மாடு களுக்காக வைக்கோலும் தட்டையும்—இவற்றையும் பொள்ளாச்சிச் சந்தையில் வாங்கலாம். தேயிலைத் தோட்டங்களின் விற்பனை நிலையங்களும் இச் சந்தையில் உள்ளன. இந்திய அரசாங்கத்துப் பரிசுப் பத்திரங் களும் விற்பனை செய்யப்படும் பெருமை இச் சந்தைக்கு உண்டு. கள்ள நூறு ரூபாய் நோட்டுக்களை அச்சிட்ட வர்கள் அவற்றைப் பரப்பியதும் இச் சந்தையில்தான்.

சந்தைக்கு வருவோர்க்கு வசதி செய்வது நகராண் மைக் கழகத்தின் முக்கியமான அலுவலாக இருக்கிறது. சந்தை மூலம் ஆண்டுதோறும் கிடைக்கும் இரண்டு லட்சம் ரூபாய்ச் வருவாயைப் பெருக்குவதற்காக,முப்பது லட்சம் ரூபாய்ச் செலவில் சந்தைக்கு உரிய கட்டடங் களை நகராண்மைக் கழகத்தார் திருத்தியமைத்தி ருக்கின்றனர். சந்தைக்கு வருபவர்களுக்காகச் சத்திரங் களும் குளிக்கும் அறைகளும் கட்டியிருக்கின்றனர். முன்னர், பரவியிருந்த தொத்து நோய்களையும் கட்டுப் படுத்தி இருக்கின்றனர். குடிதண்ணீர் வசதியும் செய் திருக்கிறார்கள். பாலாறும் ஆளியாறும் பொள்ளாச்சி யிலிருந்து 10 கி. மீ. தொலைவில் கூடுகின்றன. அங்கே தொகுப்புக் கிணறு வெட்டி அதிலிருந்து நீரைச் சேகரிக்க

உறிஞ்சிக் கிணறு நிறுவி நகரெங்குமுள்ள குழாய்களுக்கு நீர் வழங்கப்படுகிறது.

பொள்ளாச்சி சந்தையைப் பார்த்த பிறகு, இது போன்ற சந்தை வேறு எங்கேயாவது இருக்கிறதா என்று தக்கார் பலரிடம் கேட்ட வண்ணமாக இருக்கிறேன். இதற்கு ஓரளவு ஒத்ததாகப் பீகாரில் பாட்னுவிலிருந்து 65 கி. மீ. தொலைவில் ஜோன் என்னுமிடத்தில் கார்த்திக் மேளா (திருக் கார்த்திகைத் திருவிழா) நிகழும் போது ஓராண்டுக்கு ஒரு தடவை ஒரு சந்தை கூடி, ஒரு மாத காலத்துக்கு நடக்குமாம். இந்தியாவில் கிடைக்கும் எல்லாப் பொருள்களையும் ஜோன் சந்தையில் வாங்கலாம். ஆண்டுக்கொரு முறை கூடுவது சந்தை ஆகுமா?

**பொள்ளாச்சியில் இருப்பவை :**

பத்து லட்சம் ரூபாய் வருவாயுள்ள முதல் தர நகராண்மைக் கழகம், ஒரு கலைக் கல்லூரி, ஒரு தொழிற் கல்லூரி, மூன்று பஞ்சாலைகள், ஆண்டுதோறும் 84,000 அம்பர்சர்க்கா செய்யக்கூடிய அரசாங்கத் தொழிற்சாலை, இயந்திரக் கருவிகளைப் பழுது பார்க்கும் அரசாங்கத் தொழிற்சாலை, அரசாங்க மர விற்பனை டிப்போ, சந்தைப் பொருள்களை வெளியூர்களுக்கு அனுப்பும் லாரி போக்கு வரத்து அலுவலகங்கள், 150 வட்டைக்காரர்கள், மகாலிங்கபுரம் என்னும் புதிய குடியிருப்பு.

பொள்ளாச்சியில் நிலையாக வாழும் மக்கள் தொகை 50,000.

பொள்ளாச்சியில் பெரிய திருவிழா: மாரியம்மன் கோயிலில் 10 நாள் சரசுவதி பூசைத் திருவிழா.

"சந்தையைப் பற்றிய செய்தியே நிறைய உள்ளன. ஊரைப்பற்றி அவ்வளவாக ஒன்றுங் காணோமே" என்று வாசகர் நினைக்கலாம். ஜெர்மனியிலுள்ள கலோனைப்

பற்றி எழுதினுல் அது கத்தோலிக்க ஆலயத்தைப்பற்றி றிய கட்டுரையாகவே முடியும். நியூயார்க் நகர் பற்றிய கட்டுரை வானை முட்டும் மாடிகளைப்பற்றியே இருக்கும். ஏத்தன்ஸ் பிரயாணக் கட்டுரை அக்ரோபோலிஸ் பற்றிய விளக்கமாகத்தான் அமையும். இராமேசுவர ஊரும் கோயிலும் ஒன்றுதான். இவற்றை எடுத்துவிட்டால், அந்த நகரங்கள் உருமாறிவிடும், பொலிவிழந்து நிற்கும், அவற்றின் பெருமையும் போய்விடும். இப்படித்தான் பொள்ளாச்சியும் சந்தையும்.

கல் எல்லாம் மாணிக்கக் கல் ஆமோ ?

சந்தை எல்லாம் பொள்ளாச்சிச் சந்தை ஆமோ ?

## டாப்சிலிப்

இது இவ்வட்டத்தில் மிக உயர்ந்த பகுதி. கேரள எல்லைக்கு அருகே இவ்வூர் இருக்கிறது. மின்சார நிலையங்களையும் பரம்பிக்குளம் திட்ட அணைகளையும் அடர்ந்த காடுகளையும் (பார்க்க-பக்கம் 8) இங்கிருந்து போய்ப் பார்க்கலாம்.

## வால்பாறை

தேயிலை முதலிய தோட்டங்கள் (பார்க்க—பக்கம் 26) உள்ள இச்சிறு நகரம் செல்வம் கொழிக்கிறது.

## முடிஸ்

மலைப்பதியிலுள்ள இவ்வூரும் காணத்தக்கது; உள்ளத்துக்கு மகிழ்ச்சியும் உடலுக்கு உரமும் ஊட்ட வல்ல எழில் நிறைந்தது.

## 26. உடுமலைப்பேட்டை வட்டம்

அழகு நிறைந்த அங்காடிகள், வண்ண மாளிகைகள், தலம்—மூர்த்தி—தீர்த்தம் என்ற பெருமைகள், எழில் மிக்க இயற்கைக் காட்சிகள், கலைச் சிறப்பு—இவை போன்ற இயல்புகள் சிறிதும் இல்லாத ஊர் உடுமலைப் பேட்டை. வறட்சியின் வடிவமாக உள்ள இவ்வூர், வருங் காலத்தில் தமிழ்நாட்டில் தலைசிறந்து விளங்கும் என்ற கருத்து அங்கே சென்றிருந்தபோது எனக்கு ஏற்பட்டது.

பழநிமலை, ஆனைமலை, திருமூர்த்திமலை ஆகிய மூம் மலைகளுக்கு ஊடே இருப்பதால், இவ்வூரின் பெயர் 'உடுமலை' ஆயிற்றும். இவ்வூரில் ஒருமலையும் இல்லாவிட்டா லும், ஊரின் அமைப்பு கடல் மட்டத்துக்கு 395 மீட்டர். உயரத்தில் இருப்பதால் இதை 'மலை' என்று குறிப்பிடு வதில் தவறு ஒன்றுமில்லை. இங்குள்ள முக்கியமான சமூகமான கம்மவர்களின் உடல் இங்கிருந்தபோதிலும், சிந்தனை அனைத்தும் 'ஏழுமலை' வெங்கடேசுவரனிடம் இருப்பதும் குறிப்பிடத்தக்கது.

மக்கள் தொகை பெருகிவிட்டது என்ற கூக்குரல் உடுமலைப்பேட்டையில் இல்லை. 1961-இல் இருந்தவாறே 1961-இல் 23,000 மக்களே உள்ளனர். இவ்வளவுக்கும் இந்த 20 ஆண்டுகளில் புதிய தொழில்கள் பெருகி யுள்ளன. நூல் ஆலை இரண்டு, பருத்தி அறைக் கும் இயந்திரங்கள் பல, மாட்டு எலும்பைப் பொடியாக்கி உரம் செய்யும் தொழிற்சாலை, வார்ப்புப் பட்டறை, மின்சார மோட்டார்களும் பம்பு செட்டுகளும் செய்யும் தொழிற்சாலை, இரசாயனப் பொருள்களைப் பயன் படுத்திக் காடாத் துணிகளை அமராவதி ஆற்றில் சலவை (Bleaching) செய்யும் தொழிற்சாலைகள் ஆகியவை குறிப்

பிடக்கூடியவை. எனவே, உடுமலைப்பேட்டையில் மக்கள் தொகை குறைந்திருக்கிறது. இதற்குக் காரணங்கள் இரண்டு—ஒன்று குடிதண்ணீர்ப் பஞ்சம், மற்றொன்று இந்தச் செய்தி எல்லோருக்கும் தெரியும்படி விளம்பர மாகியிருப்பது !

பல ஆண்டுகளாக இவ்வூரில் மழை இல்லை; நக ராண்மைக் கழகத்தார் இப்போது குழாய்க் கிணறுகளைச் சில இடங்களில் நிறுவியிள்ளனர். இரயில்வேடாங்குகளி லும்நெருப்புஅணைக்கும் லாரிகளிலும் குடிதண்ணீர் வழங் கப்படுவது சாதாரணமான காட்சி.குழாய்க் கிணறுகளில் கையால் அடிக்கும் குழாய்மூலமே தண்ணீர் பிடிக்கவேண் டும். மின்சாரத்தால் இயங்கும் பம்புகளை உடுமலைப் பேட்டையில் வைத்தால் கிணற்று நீர் அனைத்தையும் அவை உறிஞ்சி எடுத்து விடுமாம். பிறகு, கிணற்றின் தரை மட்டத்தில் ஈரப் பசை இராது. அதனால் 'பம்பு' வேலை செய்வதில்லை. திருமூர்த்தி மலை (19 கி. மீ. தொலைவு)யிலிருந்து குடிதண்ணீர் கொண்டுவர 40லட்சம் ரூபாய்ச் செலவில் வேலை நடைபெற்று வருகிறது.

வேளாண்மைக்குத் தண்ணீர் வேண்டுமானால் குழாய்க் கிணறுகளை 200 அடி ஆழம் வரை செலுத்த வேண்டுமாம். அதற்கு ரூபாய் 5,000 ஆகுமாம். பிற மாவட்டங்களில் வெட்டுவதுபோல இங்கே கிணறு தோண்டுவதாயின் ஒரு கிணற்றுக்கு 20,000 ரூபாய் செலவு ஏற்படுமாம் ! இவ்வளவு செலவிட்டாலும் தண் ணீர் கிடைப்பது உறுதியில்லை. இதனால் இந்தப் பகுதி யில் நெல் வேளாண்மை குறைவு. பருத்தி, மல்லி, சீரகம், இவற்றை இவ்வட்டத்தில் அதிகமாகப் பயிரிடுகிறார் கள். கரும்பு, புகையிலை, மிளகாய், சோளம், ராகி— இவற்றையும் சிறிது பயிரிடுகின்றனர். இவற்றுக்கு வேண்டும் நீர் ஒழுங்காகக் கிடைக்க அமராவதி ஆற்றில்

உடுமலைப்பேட்டைக்கு அருகே 1958-ஆம் அணை கட்டப் பெற்றது. போதிய மழை இல்லாததால், அணையில் தேக்குவதற்கு வேண்டிய அளவு தண்ணீர் ஆற்றில் வர வில்லை. தேக்கப்பட்ட சிறிதளவு தண்ணீரே கால்வாயில் விடப்பட்டது. ஆனால் கால்வாய் பள்ளத்தில் இருப்பதா லும் தண்ணீர் வேகமாக வருவதாலும் தண்ணீர் கொப்பு ளித்துப் பருத்தி கெட்டுவிடுகிறதாம். அமராவதிக் கால் வாய்த் தண்ணீரை நெல் வேளாண்மைக்குப் பாய்ச்ச லாமா? கூடாதா? புன்செய்க்கு மட்டும்தான் அதைப் பயன்படுத்த வேண்டுமா? என்ற சிக்கல்கள் ஏற்பட் டுள்ளன.

உடுமப்லைபேட்டை வட்டத்து மக்கள் பரம்பிக்குளம் திட்டத்தின் பயனைக நலமடையும் நன்னாளை எதிர்பார்த் துக் கொண்டிருக்கின்றனர்.

மூன்று உயர்நிலைப்பள்ளிகள் இந்நகரில் உள்ளன. அவற்றில் ஒன்று 1859-இல் ஏற்பட்டது. அந்தக் கல்வி நிலையத்தின் ஆட்சி மாவட்டக் கழகம், நகராண்மைக் கழகம் என்னும் இரண்டு நிறுவனங்களிடமும் மாறி மாறிக்கொண்டு வந்திருக்கிறது. 1959 சனவரியில் யான் போயிருந்தபோது அது மாவட்டக் கழக ஆட்சியில் இருந்தது. உடுமலைப்பேட்டைக்குப் பெருவிளம்பரம் தரும் மற்றொரு கல்வி நிலையம் பெண்களுக்காக ஏற்பட்ட கல்லூரி. செலவு குறைவாக இருப்பதால், வெளியூர்ப் பெண்கள் இங்கு உணவுவிடுதியில் தங்கிப் படிக்கின்ற னராம்.

உடுமலைப்பேட்டையிலிருந்து காணத்தக்க இடங்கள் பரன்சேர்ப்பள்ளி என்று கல்வெட்டுக்கள் குறிப்பிடுவதும் இப்போது பரஞ்சேர்வலி என்று பொதுமக்கள் கூறுவது மாகிய சிற்றூர், குமணன் என்ற அரசர் வாழ்ந்ததும் வீரசோழர்கள் 12-ஆம் நூற்றாண்டில் கட்டிய சோழீ

சுவரர் கோயில் இருப்பதுமாகிய கொளுமம், ஆகியவை.

காணத்தக்க மற்றோர் இடம், உடுமலைப்பேட்டையிலிருந்து 19 கி. மீ தொலைவிலுள்ள திருமூர்த்திமலை. அடிவாரத்திலுள்ள பஞ்சலிங்கத்தை வழிபட்டுவிட்டு அருகேயுள்ள அழகிய மண்டபத்தில் சற்று இளைப்பாறி, ஐந்தாறு பேராக வெயிலுக்கு முன் மலைமீதேறினால், கரடு முரடான பாதையில் ஒன்றரை கி. மீ. தொலைவுக்கு நடந்து ஒரு குகையை அடையலாம். வழுக்குகின்ற பாறைகளுக்கிடையே, குளியலறை போன்று அமைந்த இந்த அருவியில் விரைந்தோடிவரும் நீரில் குளித்து மகிழ்வது ஒரு பேரின்பம் என்றுதான் சொல்லவேண்டும். சோலைகளும் இயற்கை எழிலும் நிறைந்த பகுதியின்மீது மேலும் உயரச்சென்றால், திருமூர்த்தி உருவத்தைக் காணலாம்.

இப்பகுதியில் மூங்கிலும் சந்தனமரமும் கிடைக்கின்றன. உடுமலைப்பேட்டை வட்டத்தில் மூன்றிலொரு பகுதி காடுதான். நரியும் குரங்கும் கலைமானும் காட்டெருமையும் இக்காடுகளில் காணப்படுகின்றன.

உடுமலைப்பேட்டைக் காற்று, ஆண்டுமுழுவதும் வாழ்பவர் உடலுக்கு உறுதி பயக்கும். சில வகை இளைப்பு (ஆஸ்த்மா) நோயாளிகள் இவ்வூரில் வாழ்ந்து உடல்நலம் பெற்றுவருகின்றனர்.

உடுமலையிலிருந்து கேரள எல்லை 22 கி. மீ. தொலைவிலேயே இருக்கிறது. மூணாறுக்குச் செல்லும்சாலையிலுள்ள காடுகளையும் அமராவதி நீரையும் பயன்படுத்தி, காகித ஆலை ஒன்றைச் சிறு அளவில் அமைக்கலாம்.

உடுமலைப் பேட்டையை அடுத்த மயிலாடிசாலை இரயில் நிலையத்துக்கு அருகே 1960இல் மாநில அரசாங்கத்தார்கூட்டுறவு முறையில்“அமராவதி சர்க்கரை ஆலை”

அமைத்துள்ளனர். 800 டன் கரும்பைப் பிழிந்து இங்கு நாள்தோறும் 1,000 மூட்டை சர்க்கரை செய்கிறார்கள். கிடைக்கும் கரும்பில் சாறு மிகுதி என்றும் வட இந்தியாவில் பயிராகும் கரும்பில் சாறு மிகக்குறைவு என்றும் வட இந்திய அனுபவம் மிக்கவரும் கன்னட நாட்டினருமாகிய இந்த ஆலையின் உயர் அலுவலர் என்னிடம் சொன்னார்.

'கொங்குநாட்டுச் செங்கரும்பே
தங்கச்சிலையே - அன்பு
பொங்கவரும் புத்தமுதே.'

என்ற திரைப்படப்பாட்டிலும் சீரிய பொருள் இருப்பதை அன்றிரவு (மிகச்சிறந்த முறையில் உடுமலைப்பேட்டையில் உருவாகியுள்ள) கல்பனா தியேட்டரில் படம் பார்த்த போது உணர்ந்து மகிழ்ந்தேன். மடத்துக்குளத்துக் கருகே கரும்புவிதைப் பண்ணையும், அமராவதி அணை அருகே குளுகோஸ் தொழிற்சாலையும் நிறுவப் பெற்றிருப்பதைக் கேள்விப்பட்டபோது என் மகிழ்ச்சி இரட்டிப்பாயிற்று.

## 27. பல்லடம் வட்டம்

இம் மாவட்டத்தில் இவ்வட்டம் மட்டுமே, தலை நகரான திருப்பூர்ப் பெயரால் அமையாது வேறு ஓர் ஊரின் பெயரால் அமைந்திருக்கிறது.

### திருமுருகன்பூண்டி

முருகன் பெயர்தாங்கிய இத்தலம் தேவாரப்பாடலை யும் அருணகிருநாதர் பாடலையும் பெற்றது; அவிநாசியி லிருந்து திருப்பூர் செல்லும் நெடுஞ்சாலையில் ஐந்தாவது கிலோமீட்டரில் இருக்கிறது. திருப்பூர் இரயில் நிலையத்தி லிருந்து எட்டு கி. மீ. வடக்கே சென்றால் இவ்வூரை அடையலாம். இவ்வூர் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் வரலாற்றுத் தொடர்புடையது. இங்கேதான் இறைவன் அவரை ஆட்கொண்டார். முருகன் சிவபெருமானை வழி பட்ட தலங்களுள் திருமுருகன் பூண்டியும் ஒன்று. ஆற லைக்கும் வடுக வேடர் பலர் இங்கே இருந்ததாகத் தேவாரம்கூறும். சந்நிதி மேற்கு நோக்கியிருக்கிறது. கோயில் வாயிலில் கோபுரம் ஒன்றும் இல்லை. உள்ளே செல்ல, பள்ளத்தில் இறங்கிச் செல்லவேண்டும்.

விக்கிரகங்கள் செய்வதில் இணையற்று விளங்கும் கல் தச்சர் இவ்வூரில் இன்றளவும் இருந்துவருகின்றனர்.

### இளவன்பதி

இது கழுமலம், பொய்கையார் என்று சங்ககாலத் தில் புகழ்பெற்றிருந்த ஊர். இங்கே அறுபது ஏக்கர்ப் பரப்பில் காணப்படும் அறிகுறிகளிலிருந்து பெரிய கோட்டை ஒன்று இருந்து அழிந்தது தெரிகிறது.

### பல்லடம்

பஞ்சாலைகள், பருத்தி அறைக்கும் தொழிற்சாலைகள், பஸ் சந்திப்பு நிலையம், இவை இவ்வூரின் சிறப்புக்கள். இசை அறிஞரான சஞ்சீவி ராவ், இவ்வூரின் பெயர் தமிழகமெங்கும் தெரியும்படி செய்திருக்கிறார்.

### சூலூர்

ஆகாயவிமான நிலையத்தாலும், கம்பள உரோம உற்பத்தி நிலையத்தாலும் இவ்வூர் முக்கியத்துவம் பெற்றிருக்கிறது.

### திருப்பூர்

தேசிய விடுதலைப் போராட்டத்தால் மட்டுமன்றி, தொழில் துறையிலும் திருப்பூர் புகழ் பெற்றிருக்கிறது. நகராண்மைக்கழக வருவாய்க் கணக்குப்படி, தமிழ் நாட்டின் முதல் 12 நகரங்களுள் திருப்பூரும் ஒன்று. 1958-இல் மட்டும் நாள்தோறும் ஐம்பது புது வீடுகள் கட்டப்பட்டுள்ளன. பத்து ஆண்டுகளுக்குமுன் ஏக்கர் ஓராயிரம் ரூபாய்க்கு விற்ற நன்செய் நிலம் 1960-இல் 15,000க்கு விற்பனையாகிறது. சென்னைக்கும் மதுரைக்கும் அடுத்தபடி ஒரு கோடிரூபாய்ச் செலவில் குடி தண்ணீர்த் திட்டம் அமைந்திருப்பது திருப்பூரிலேயே ஆகும். தமிழ்நாட்டில் சிறந்து விளங்கும் உயர்நிலைப் பள்ளிகளை தி. சு: அவினாசிலிங்கம் குடும்பத்தாரும் நகராண்மைக் கழகத்தினரும் நடத்திவருகின்றனர்.

இரயில் நிலையத்திற்கு அருகே கொடிகாத்த குமரனின் நினைவுத்தூணும் அதைச் சுற்றி ஒரு பூங்காவும் அரசாங்கத்தாரால் அமைக்கப்பட்டுள்ளன. மகாத்மா காந்தியடிகள் 1932-இல் ஒத்துழையாமை இயக்கம் தொடங்கியபோது "சுதந்தரம் எங்கள் பிறப்புரிமை" என்ற முழக்கத்தோடு மூவர்ணக் கொடி தாங்கிய

ஊர்வலத்தைக் காங்கிரசுத் தொண்டர்கள் ஏற்பாடு செய்தனர். போலீசார் தடை செய்துங்கூட, ஒருவரும் கலையவில்லை. தடியால் அடிபட்டு உயிர்நீத்து, தியாகி குமரன், இந்திய வரலாற்றில் திருப்பூருக்கு அழியாப் புகழ் தேடித்தந்தார்.

திருப்பூர் 1946வரை சிறு கிராமமாக இருந்தது இன்றுங் கூட, அந்த ஊரில் பத்திரம் எழுதும்போது **பல்லடம் தாலுகா திருப்பூர் கிராமம்** என்றே குறிப்பிடுவர். திருப்பூரின் உயிர்நாடி பனியன் செய்யும் தொழில். இந்தத் தொழிற்சாலைகளில் அண்டர் வேர், மப்ளர், சுவெட்டர் ஆகியவையும் செய்கின்றனர். பனியன் தொழிலால் புகழ்பெற்ற நகரங்கள் ஹாங்காங்கும், லூதியானவும். ஹாங்காங் சீன எல்லையிலுள்ள பிரிட்டிஷ் தீவு. அங்கே பெரிய இயந்திரங்களின் உதவியால் இத் தொழில் நடைபெறுகிறது. லூதியானு, குளிர்நிறைந்த பஞ்சாபில் இருப்பதால் அங்கே கம்பளி ஆடைகள் செய்கின்றனர். திருப்பூரின் உற்பத்தி அனைத்தும் பருத்தி ஆடைகளே.

திக்கெல்லாம் புகழும் திருப்பூர் பனியன் இந்தியா முழுவதும் வியாபாரமாகிறது, வெளிநாடுகளுக்கும் ஏற்றுமதியாகிறது. ஐந்து குதிரை வேகமுள்ள இயந்திரங்களை வீட்டிலேயே வைத்துக்கொள்வதற்கு லைசன்சு தேவையில்லையென்று அரசாங்கத்தார் ஆணையிட்ட பிறகு திருப்பூரில் பல வீடுகள் தொழில் நிலையங்களாக மாறின. 100 பெரிய தொழிற்சாலைகள் உள்ளன; ஏனைய 400 தொழிற்சாலையினர் நாள் தோறும் மூன்று குரோஸ் பனியன் வரை செய்து பெரிய நிலையங்களுக்கு விற்று விடுகின்றர்.

ஆஜாத்நிட்டிங் கம்பெனி உரிமையாளர் ஜனப்ஹாஜி எம். அப்துல் ரஹ்மான் சாஹிப் என்பவர் பனியன்

தொழிலின் தந்தை ஆவார். இவர் 1925-இல் பனியன் பின்னும் இயந்திரம் என்றால் என்னவென்று தமிழ் நாட்டில் எவரும் அறியாத காலத்தில் ஜெர்மன் இயந்திரங்களை வரவழைத்துப் பனியன் செய்து தலைச்சுமையாக அவற்றைத் தூக்கிச்சென்று தஞ்சாவூர் கும்பகோணம் மதுரை முதலிய இடங்களில் விற்றார். இன்று ஆண்டொன்றுக்குப் பத்துக்கோடி ரூபாய்க்கு விற்பனை நடைபெறுவதும். 12,000தொழிலாளர்க்கு வாழ்வளித்து வருவதுமான பனியன் தொழில் திருப்பூரில் இருக்கிறது.

பனியன் தொழிலையொட்டிப் பல சிறு தொழில்கள் வளர்ந்து வருகின்றன. நூல் வியாபாரம், தையற்கடை, சலவைத் தொழில், சலவை செய்யும் இடத்திற்குப் பனியன்களைக் கொண்டுபோவதற்காக லாரி கைவண்டித் தொழில்கள், பனியன்களில் பளபளப்பு இருப்பதற்காகத் துணிப்பசை செய்வது, தொழிற்சாலைகளின் வியாபார அடையாளத்தைக் குறிப்பிடுவதற்கான துணி லேபிள் நெசவு, சாயம் போடுதல், சாய அச்சுவேலை, பனியன்களை விற்பனைக்கு அனுப்ப அட்டைப்பெட்டி செய்வது போன்ற துணைத் தொழில்கள் பல உண்டு. பேல் போடும் இயந்திரம் வைத்தும், தேயிலைக் காண்டீன் வைத்தும் பலர் தொழில் நடத்துகின்றனர். சொந்தத் தோட்டம் உள்ளவர்கள் பெரிய கிணறு வெட்டி, 'பம்ப் செட்' வைத்துத் தொட்டிகள் கட்டிக் கொடுத்துப் பனியனைச் சலவை செய்யும் கம்பெனிகளுக்குக் குத்தகைக்கு விடுவர்; தோட்ட விவசாயம் செய்வதைவிட இதில் கூடுதலான வருவாய் கிடைக்கிறதாம்.

இப்பகுதியில் பஞ்சு விளைவு மிகுதி. தென்னிந்தியா முழுமைக்கும் பஞ்சு விலை இங்குதான் முடிவு செய்யப் படுகிறது. பருத்தி பயிரிடுவோர் திருப்பூருக்குக்

கொண்டுவந்து பருத்தியை விற்கிறார்கள். கள்ளத்தரா சில் நிறுத்தும், சரக்கைத் திருடியும், நல்ல பஞ்சை மட்ட மானதென்று சொல்லிக் குறைந்த விலைக்கு எடுத்துக் கொண்டும் கமிஷன் மண்டிகள் விவசாயிகளுக்குத் தீங்கு இழைத்தன. இதைப் போக்க, திட்டவட்டமான முறை யில் ஒரு பஞ்சு மார்க்கெட்டை அரசாங்கத்தார் திருப்பூரில் ஏற்படுத்தியிருக்கிறார்கள். (விவரம் 116-ஆம் பக்கத்தில் காண்க) பஞ்சை யார் விற்றாலும் அல்லது வாங்கினாலும் அந்த வியாபாரம் திருப்பூர் பஞ்சு வணிகக் குழுவின் வாயிலாக நடைபெறுகிறது. விற்பனைக்கு வரும் பஞ்சை வைத்திருப்பதற்குக் கிடங்கு கட்டி, பஞ்சைத் தரம் பிரித்துப் பருவ விலைக்குப் பலர் அறிய இந்தக் குழு ஏலம் போட்டு விற்கிறது. வண்டி நிறுத்தவும், மாடு கட்ட வும், விவசாயி படுத்து உறங்கவும் வசதி செய்துள்ளது. இக்குழுவின் மூலம் ஆண்டுதோறும் 15 கோடி ரூபாய்க்கு வியாபாரம் நிகழ்கிறது. பருவ விலை எப்படி இருந்தாலும் சில மாதங்களுக்குப் பின்னரும் இன்ன விலைக்கு இவ் வளவு பஞ்சு தருவதாக முன்கூட்டியே ஒப்பந்தம் செய்து கொள்ளும் வாய்தா பேர வியாபார முறை இங்கு உண்டு. இதன் விளைவாகப் பெருஞ்செல்வர்களானவர் பலர் இருக்கிறார்கள்; அதோகதியானவர்களும் உண்டு.

தொழில் வளரும் திருப்பூரில் ஐரோப்பிய வணிகர் சிலரின் அலுவலகங்கள் உள்ளன. வட இந்திய குஜராத்தி சேட்டுகளின் குடும்பங்கள் 200 இருக்கின்றன. அவர்கள் தொடங்கிய ஆலைகளும் உண்டு. திருப்பூர் நகராண்மைக் கழகத்தின் முதல் தலைவராக இருந்தவர் ராவ் சாகேப் வித்தல்தாஸ் ஆனந்தஜி சேட் என்ற குஜராத்திக்காரரே.

1920-இல் இப்பகுதியில் பஞ்சம் தாண்டவமாடிய போது, மக்கள் நூல்நூற்றுப் பிழைத்தனர். மகாத்மா காந்தியடிகளின் இயக்கம் பரவியபின், கதர் உற்பத்தி

பெரியதொரு குடிசைத் தொழிலாயிற்று. தமிழ் நாடு சாவோதய சங்கத்தின் தலைமை அலுவலகம் திருப்பூர் காந்தி நகரில் இருக்கிறது. பல இடங்களிலிருந்து வரும் கதர்த்துணியை விற்க இங்கு ஏற்பாடு நடைபெறுகிறது; ராட்டை, கையால் செய்யும் தாள், வர்தா செக்கு, வேப்ப எண்ணெய்ச் சவுக்காரம் செய்யும் தொழிற்சாலை ஆகியன இங்கு உள்ளன.

வர்தா செக்கு என்பது எண்ணெய் ஆட்டுவதற்குப் பயன்படும் புதுவகைச் செக்கு. இது வர்தாவில் கண்டு பிடிக்கப்பட்டது. இரண்டு செக்குகளை ஓர் ஆளே ஒரே நேரத்தில் கவனிக்க இந்தச் செக்கு உதவியாக இருக்கிறது. அதாவது இரண்டு ஆட்களும் நான்கு மாடுகளும் செய்யும் வேலையை வர்தா செக்கு வாயிலாக ஓர் ஆளும் இரண்டு மாடுகளும் செய்துவிடலாம். எண்ணெய்யைக் கைபடாமல் எடுக்க, செக்கின் அடிப்பகுதியில் ஒருகுழாய் இருக்கிறது. மாட்டிற்குப் பளுவைக் குறைப்பதற்கான (Ball bearing arrangement) அமைப்பு இந்தச் செக்கில் உண்டு. இந்தச் செக்கின் உருவம் சிறியதாக இருப்பதால் சிறுஇடத்தில் தகரக் கொட்டகை போட்டு இதை அமைத்துக்கொண்டு மழைக் காலத்திலும் இரவு நேரத்திலும்இந்தச் செக்கில் வேலை பார்க்கலாம்.

சர்வோதய சங்கத்தின் மற்றொரு பகுதியில் – திருப்பூரின் சுற்றுப்புறத்திலுள்ள வீரபாண்டியில்-நூற்பு ஆசிரியர்க்கும் தச்சர்க்கும் பயிற்சி நிலையங்கள் உள்ளன. அம்பர்ச் சர்க்கா கெட்டுவிட்டால் அதைச் சீராக்குதலும் அதன் உறுப்புப் பொருள்களைச் செய்தலும் கற்றுத்தரப் படுகின்றன. இங்கு பயிலுவோர் ஒரு மரம் வளர்க்க வெண்டும். அதற்காக, தமக்குரிய மரத்தின் அடியிலேயே ஒவ்வொருவரும் பல் தேய்ப்பர், கை கழுவுவர். அரி ஓம் ஈசா, புதிய காலை, ஓம் தத் சத் ஸ்ரீ என்ற பிரார்த்தனைகளுடன் இறைவழிபாடு நிகழ்கிறது. பயிற்சி பெறுபவர்

கட்கு உதவிச்சம்பளம் உண்டு. மாணவர் விடுதிக் கட்டிடச் செலவும், கதர்—கிராம கைத்தொழில் குழுவின் வாயிலாக இந்திய அரசாங்கத்தாரால் ஏற்றுக்கொள்ளப் படுகின்றன.

தமிழ்நாடுஅரசாங்கத்தார் திருப்பூரில் சரஞ்சன் காரியாலயம் என்ற அம்பர் சர்க்கார் உற்பத்தி நிலையத்தை நிறுவியுள்ளனர். சர்வோதய சங்கத்தின் முறைகளையே இவர்களும் பின்பற்றுகின்றனர். தொழில் துறையில் போலக் கதர் வேலையிலும் தனியாருக்கும் அரசாங்கத்தாருக்கும் போட்டி இருக்கவேண்டுமென்பது கருத்துப் போலும்.

இப்பகுதியில் கிடைக்கும் கொழுக்கட்டைப் புல்லில் கால்சியம் சத்து நிறைந்திருப்பதால் பால், மோர், தயிர், வெண்ணெய், நெய் இவை மணமாகவும் சுவையாகவும் இருக்கின்றன பருத்தி விலையும் மலிவு. சோளம், கேழ் வரகு வேளாண்மை மிகுதி. பரம்பிக்குளம் திட்டம் நிறைவேறிய பிறகு நெல் வேளாண்மையும் கூடுதலாக இருக்கும். திருப்பூரையடுத்த ஆலப்பாளையத்தில் வெண்கலத்தால் மணிகள் செய்கிறார்கள்.

வாழ வசதியான ஊர் திருப்பூர். ஈரமில்லாத காற்று அடிப்பதால் ஒருவருக்கும் காச நோயோ, நுரையீரல் நோயோ கிடையாது. காற்றின் வேகம் மணிக்கு 65 கி. மீ. ஆக இருப்பதால் மக்களின் உடல் நலம் நன்றாக இருக்கிறது. நாடகம், திருமண வரவேற்பு, பிற பொது நிகழ்ச்சிகளுக்கு நகராண்மைக் கழகத்தார் கட்டியுள்ள மன்றம் வாடகைக்கு விடப்படுகிறது. பெண்களுக்கெனத் தனியே ஒரு பூங்கா நிறுவியிருப்பதும் இந்நகரின் சிறப்பு.

திருப்பூரில் இருப்பவை: 9 நூல் நெசவு ஆலைகள், 32 பருத்தி அறைக்கும் இயந்திரங்கள் (Ginning Factory), 25 பேங்குகள். 300 டெலிபோன், 2000 கார், நகர பஸ்

வசதி, பாத்திரம் செய்யும் தொழில், பிளாஸ்டிக் பைகள் செய்யும் தொழிற்சாலை.

திருப்பூரில் இல்லாதவை: கொசு, பிச்சைக்காரர்.

திருப்பூரில் காணத்தக்கவை: பனியன் தொழிற்சாலைகள், குமரன் பூங்கா, செவ்வாய்க்கிழமைச் சந்தையில் கிராமங்களிலிருந்து வரும் பல நூறு பெண்கள் நெய் விற்பதும் அவற்றை வாங்கும் வியாபாரிகளும் ஈசுவரன் கோயில் வீதியில் நெய் உருக்குவதற்காக ஏராளமான அடுப்புக்களைப் போட்டிருப்பதும்.

திருப்பூரின் பெருமை : 25 ஆண்டுகளாக ஒருவரே (கே. என். பழநிச்சாமிக் கவுண்டர்) நகராண்மைக் கழகத் தலைவராக இருந்திருப்பது.

திருப்பூர் மக்களுக்கு இரண்டு குறை உண்டு. பெரும்பாலான இரயில்கள் கேரளத்திலிருந்து வருவதால் அவற்றில் நிற்கக்கூட இடமிருப்பதில்லை. நீலகிரி எக்ஸ்பிரசில் ஏர் கண்டிஷன் பெட்டி, முதல் வகுப்புப் பெட்டி, படையினருக்காக ஒதுக்கப்பட்ட பெட்டிகள் இருப்பதால் ஏறுவதற்குரிய பெட்டியைக் கண்டுபிடிப்பது பெரிய வேலையாகிவிடுகிறது.

நொய்யல் ஆறு, நகரின் நடுவே செல்லுகிறது. மேற்குத் தொடர்ச்சி மலையிலிருந்து திருப்பூருக்கு வரும் வழியிலுள்ள குளங்களிலும் ஏரிகளிலும் அந்த ஆற்றின் நீர் நிரப்பப்பட்டு விடுகிறது. திருப்பூருக்கு வந்துசேரும் போது நொய்யலில் தண்ணீர் இருப்பதில்லை. ஆற்றின் மட்டமும் கடல் மட்டத்தை அடைந்துவிடுகிறது. திட்டமிட்டு அமையாமல் திடீரென்று வளர்ந்திருப்பதால், தண்ணீர்ப் பற்றாக்குறை உண்டு; இதைப் போக்க, தோட்டமும் சொந்தக் கிணறும் இருப்பவர்கள், யார் வேண்டு

மானாலும் வந்து குளிப்பதற்காகக் குழாய் வைத்துள்ளனர். தண்ணீரில் குளிக்க 3 புதுக்காசு கொடுக்கவேண்டும். வெந்நீர், எண்ணெய், சிகைக்காய் முதலியனவும் கிடைக்கும். இது ஒரு தொழிலாகத் தனிப்பட்டவர்களாலும் கூட்டுறவுச் சங்கத்தாராலும் நடத்தப்படுகிறது. தண்ணீர் வசதியில்லாத வீடுகளில் வாழ்வோரும் வீட்டுக்கு விலக்காக இருக்கும் பெண்களும் இந்தக் குளியல் அறைகளைப் பயன்படுத்துகின்றனர்.

## 28. தாராபுரம் வட்டம்

இது, மதுரை-திருச்சி மாவட்டங்களின் எல்லையில் அமைந்திருக்கிறது. கோவை மாவட்டத்திலேயே பிற்பட்ட வட்டம் என்று சொல்லத்தக்கது இந்த வட்டமே. பஞ்சப்பகுதி என்று இதைக் குறிப்பிடுவது வழக்கம். பஞ்சம் ஏற்படும்போது மக்கள் வெளியூர்களுக்குச் சென்று விடுவர்; அவர்களை அங்கேயே இருக்கும்படிசெய்ய கதர் திட்டம் ஒன்றைப் பெரிய முறையில்* வகுத்து மக்களுக்கு அரசாங்கம் வேலை கொடுத்தது. இந்த வட்டத்தின் பொருளாதார நிலையையொட்டி, இந்திய அரசாங்கத்துச் சமூக நலக் குழுவின் நிதி உதவியுடன் ஈரோடு–தாராபுரம் சாலையில் **கஸ்தூரிபா கிராமம்** என்ற ஒரு சிற்றூரை கஸ்தூரிபாய், காந்தி அறநிலையக்குழுவினர் அமைத்துள்ளனர்; இங்கு கிராம சேவகி பயிற்சி, ஆசிரியர்களுக்கான உயர்தரப் பயிற்சி, தையல் வேலை முதலியன கற்றுக்கொள்ள வசதி செய்யப்பட்டிருக்கிறது.

இந்த வட்டத்தின் நிலையைக் கருதியே கீழ்பவானி கால்வாய் நீட்டி விடப்பட்டிருக்கிறது. நீட்டிவிடப்பட்ட பகுதியின் பெயர் தாராபுரம் கால்வாய். அதன் நீளம் 35 மைல் (55 கி. மீ.). அமராவதிக் கால்வாயும் இந்தத் வட்டத்துக்குப் பயன்படுகிறது. எனவே 1955 க்குப் பிறகு நெல்லும் கரும்பும் விளைந்து, இந்த வட்டம், ஓரளவு செழிப்பாக இருக்கிறது. பரம்பிக்குளத்திட்டம் நிறைவேறிய பிறகு, தாராபுரம் வட்டம் வளமான பகுதியாக மாறி விடும் என்று எதிர்பார்க்கலாம்.

---

*Dharapuram Intensive Khadi Scheme.

இரயில் வசதி இல்லாததால், இங்கு பஞ்சாலைகள் ஏற்படவில்லை; வேறு தொழில்களும் இல்லை. பிற வட்டங்களிலுள்ள பஞ்சாலைகளுக்கு வேண்டும் பருத்தி ஏராளமாக விளைந்து, தாராபுரத்திலிருந்து ஏற்றியனுப்பப்படுகிறது.

## தாராபுரம்

இது தாராபுரம் வட்டத்தின் தலைநகரம்; நகராண்மைக் கழகம் இருக்கிறது. இவ்வூரிலோ இந்தத் வட்டத்திலோ இரயில்வசதி கிடையாது. ஆனால் எந்தத் திக்கிலும் 60 கிலோமீட்டர் சுற்றளவுக்குள் இரயில்பாதைகள் உள்ளன. தாராபுரத்தைச் சுற்றியுள்ள இரயில் நிலையங்களாவன: திருப்பூர், ஈரோடு, கரூர், திருச்சி, திண்டுக்கல், பழநி, உடுமலைப்பேட்டை, பொள்ளாச்சி, கோயம்புத்தூர்.

கோவை, திருச்சி, மதுரை ஆகிய மூன்று மாவட்டங்களிலுமுள்ள முக்கிய ஊர்களுக்கு இங்கிருந்து பஸ் போக்குவரத்து இருக்கிறது. ஏழு சாலைகள் சந்திக்கும் இடமாக இவ்வூர் விளங்குகிறது.

கடல் மட்டத்திலிருந்து 300 மீட்டர் உயரத்தில் இவ்வூர் அமைந்திருக்கிறது.

**வரலாறு :** பழம்பெருமையுடைய ஊர் தாராபுரம். ரோமாபுரி நாணயங்கள் இங்கே அகப்பட்டுள்ளன.

விராடபுரம் என்ற பெயர் இவ்வூருக்கு உண்டு. விராட நாட்டின் தலைநகராக இவ்வூர் இருந்தது என்பர். கொங்கு மண்டல சதகம் இவ்வூரைக் காந்தபுரம் என்று குறிப்பிடுகிறது. தாரகபுரி, குந்தவை விண்ணகரம், ஸ்காந்தபுரம், என்ற பெயர்களும் இவ்வூருக்கு வழங்கிவந்திருக்கின்றன. தலைக்காட்டுக் கங்கர்கள் இங்கு ஆட்சிபுரிந்திருக்கின்றனர்.

திருமலைநாயக்கர் ஆதரவில் மதுரையில் கிறித்தவ சமயத்தைப் பரப்பியவர்கள் இவ்வூர்வழியே அடிக்கடி சேலம் மாவட்டத்திற்குச்சென்றனர். ரோமன் கத்தோலிக்கப் பாதிரிகள் 1608-இல் இவ்வூரில் ஒரு தேவாலயம் கட்டினர். கோவை மாவட்டத்தில் கிறித்தவம் முதலில் பரவியது இங்கேதான்.

இவ்வூரின் பழமையை உணர்த்தும் ஒரு மண் கோட்டை பாழடைந்த நிலையில் இருக்கிறது. இது 1792-இல் ஐதர் அலியால் அழிக்கப்பட்டதென்றும், 1799-இல் ஹார்டிஸ் என்ற வெள்ளைக்காரக் கலக்டரால் கோட்டையும் நகரும் மீண்டும் கட்டப்பட்டன என்றும் கூறுவர். 1799 முதல் 1804 வரை தென்கோவை மாவட்டத்துக் கலெக்டர் அலுவலகங்களும் 1828 வரை மாவட்ட நீதி மன்றங்களும் இவ்வூரில் இருந்துவந்தன.

இக்கோட்டையில் தில்லைபுரி அம்மன் கோயில் இருக்கிறது. இதுவும், கொற்கை மாரிகோயிலும், காட்டு ஆஞ்சநேயர் கோயிலும், குந்தவைப்பிராட்டியார் கட்டியதாகக் கருதப்படும் குந்தவை விண்ணகரப் பெருமாள் கோயிலும் பார்க்கத்தக்கன. இங்கிருந்து 16 கி. மீ. தொலைவிலுள்ள கொற்கை என்னும் ஊர், தென்னன்கரை நாட்டின் தலைநகராக இருந்தது என்பர். இப்பகுதியிலுள்ள கண்ணகி கோயிலில் (இதை மாரியம்மன் கோயில் என்றும் கூறுவர்) இன்றும் "காவலர்" எனப்படும் பாண்டிய இனமக்களுக்கு முதல் மரியாதை இருந்துவருகிறது.

வாணிகம் : பருத்தி, வெண்ணெய், நெய் ஆகியவற்றின் விற்பனைக்குத் தாராபுரம் ஒரு முக்கியமான ஊராக இருந்து வருகிறது. அமராவதிக் கால்வாய் வெட்டப்பட்ட பிறகு, நெல் வியாபாரமும் பெருகியிருக்கிறது.

தாராபுரம் வெண்ணெய்யும் நெய்யும் தமிழகமெங்கும் விற்பனையாகின்றன. இவ்வூர் வெண்ணெய் நெய் விலைகள் வாரந்தோறும் நாள் இதழ்களில் வெளியிடப்படுகின்றன.

இவ்வூரில் செய்யப்படும் வண்டிகள் மிக உறுதியானவை.

செழிப்பு. அமராவதிக் கரையில் இருப்பதால் தாராபுரம் செழிப்பாக இருக்கிறது. எதிர்க்கரையிலுள்ள கொழிஞ்சுவாடி என்னும் சிற்றூர் அதைவிடச் செழிப்பானது; தஞ்சை மாவட்டத்தின் பகுதிகளைப் போன்ற காட்சி நல்குவது; பிராமண மிராசுதார்கள் நிறைந்தது.

சின்ன தாராபுரம் என்ற ஓர் ஊர் திருச்சி மாவட்டத்துக் கரூரில் இருக்கிறது: அதற்கும் இந்த ஊருக்கும் ஒருவிதத் தொடர்புமில்லை.

**காங்கேயம்**

இவ்வூர் தாராபுரத்திலிருந்து 21 மைல் (34 கி. மீ.) வடக்கே இருக்கிறது. இங்கு புஞ்சை வேளாண்மை மிகுதி. அருகு நிறைய உண்டு. மழை குறைவாக இருந்தாலும் மாடுகள் மேயத்தகுந்த இடமாக இருக்கிறது. காங்கேயம் மாடுகளைப் பற்றிய விவரங்கள் இந்நூலின் பிறிதொரு பகுதியில் கூறப்பட்டுள்ளன.

19-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இவ்வூரில் ஒரு சப்கலக்டரின் அலுவலகங்கள் இருந்தன. காங்கேயத்தின் முக்கிய ஏற்றுமதி, நெய்.

## 29. ஈரோடு வட்டம்

கோவை மாவட்டத்தில் ஈரோடுவட்டம் முன்னுளி லும் இந்நாளிலும் புகழ்பெற்றது. இங்கு சமண சமயம் சிறந்து விளங்கியதற்குச் சான்ருக அரசண்ணமலை, வெள்ளோடு, பூந்துறை, சீனபுரம், திங்களூர் ஆகிய இடங்களில் இன்றும் சமணர் கோயில்கள் உள்ளன.

கங்கர்கள் சமண சமயத்திற்கு ஆதரவு நல்கினர். அவர்கள் காலத்தில் விசயமங்கலத்தைச் சுற்றிச் சமணர் குடியேறினர். அவர்கள் மகாத்மா காந்தியடிகள் பிறந்த போர்பந்தூரிலிருந்து மேற்குக் கடற்கரைத் துறைமுகங் களுக்கு வந்து, ஈரோடு கோவைப் பகுதிகளில் துணி வாணிபம் செய்தனர் என்று கோவைகிழார் சி. எம். இராமச்சந்திரன் செட்டியார் கருதுகிருர்.

இவ்வாறு வந்த சமணர்களின் முயற்சியாலேயே கோணியம்மன் கோயிலில் உயிர்ப்பலி நிறுத்தப்பெற்றது. அவர்கள் அமைத்த ஸ்ரீ ஸ்வேதாம்பர விமலநாத ஜைன கோயில் இன்றும் கோயம்புத்தூரில் இருக்கிறது.

சமணர்கள் இவ்வாறு கொங்கு நாட்டிலும் தமிழ் நாட்டிலும் தங்கள் சமயத்தை நிலைநிறுத்தும் முயற்சியில் அடைந்த வெற்றியைக் குறித்து "விஜயம்" (வெற்றி) மங்கலம் என்னும் பெயரில் அமைத்த ஊரே, இப்போது ஈரோடிலிருந்து 6 கி. மீ. தொலைவில், இரயில் நிலையம் உள்ள சிற்றூராக இருக்கிறது. இவ்வூரில் பல நூற் ருண்டுகளாக இருந்துவரும் சமணர் கோயில் "நெட்டைக் கோபுரம்" என்று பொதுமக்களால் குறிப்பிடப்படுகிறது. பாழடைந்த நிலையிலிருப்பினும், பெரும் பகுதி கல்லால் கட்டப்பெற்ற இப் பெரிய கோயிலும் இதன்கண்ணுள்ள

கல்வெட்டுக்களும் மண்டபங்களும் இன்றும் நாம் காண வேண்டிய கருவூலங்களாக உள்ளன.

## ஈரோடு நகரம்

முன்னூறு ஆண்டுகளுக்கு முன் ஈரோட்டில் 15,000 பேர்தான் வாழ்ந்தனர். பிறகு மகாராஷ்டிர, மைசூர், பிரிட்டிஷ் படையெடுப்புக்களால் மக்கள் ஊரைவிட்டு ஓடினர். ஈரோடு பாழடைந்த நகர் ஆயிற்று. பிரிட்டிஷ் ஆட்சி ஒரு நிலைக்கு வந்ததிலிருந்து, அதாவது சென்ற 150 ஆண்டுகளில் ஈரோடு நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்திருக்கிறது, செழிப்படைந்திருக்கிறது, பல்கிப் பெருகியிருக்கிறது. 1951-இல் ஈரோட்டின் மக்கள்தொகை 50,000. 1961-இல் ஏறத்தாழ ஓர் இலட்சமாகும். இருந்தபோதிலுங்கூட, வீட்டின் இலக்கத்தைக் குறிப்பிட்டு ஈரோட்டின் எந்த வீட்டையும் கண்டுபிடித்துவிட இயலாது. வீட்டுக்காரர் பெயர், அவர் பார்க்கும் வேலை இவற்றைச் சொன்னால் தான் வீட்டைக் காண்பிப்பார்கள். ஈரோட்டு மண்ணில் மிதித்ததும் பலருக்கு ஏற்படும் முதல்அநுபவம் இதுவே.

திருச்சி, சேலம், கோவை ஆகிய முப்பெரும் நகரங்களுக்கிடையே செல்லும் இரயில் பாதைகளில் ஈரோடு ஒரு முக்கியமான சந்திப்பு. அது ஒருவட்டத்தின் தலைநகரம். அது ஒரு ரெவின்யூடிவிஷனின் தலைநகரமும்கூட. இதைக் குறிப்பிட, "கோட்ட ஆட்சி அலுவலகம்" என்ற பலகையை இவ்வூரில் கண்டேன். வட கோவைப் பகுதிக்கென மாவட்ட அலுவலகங்கள்சிலவும் இவ்வூரிலுள்ளன. கீழ் பவானித் திட்டக் கால்வாய் அலுவலகமும் இவ்வூரிலேயே இருக்கிறது. ஈரோட்டுப் பகுதியில் விளைபொருள் ஏராளமாக இருப்பதால் அங்கு வியாபாரமும் அதையொட்டிப் போக்குவரத்தும் மிகுதி. ஈரோட்டிலிருந்து எந்தப்பககம் செல்லுவதாயினும் கூட்டத்திற்குக் குறை

வில்லை. மக்கள் மிகுந்த மலையாளத்துக்குச் செல்லும் அல்லது அங்கிருந்து வரும் கூட்டம் வேறு. இதனால்

"ஈரோடளவும் இனிமையில் சென்றதும்
தேரோ என்னத் திகழுமவண் கூட்டம்.
மறுவண்டியிற்கண் மாறிச் செல்லக்
குறுகிய இடமே குந்தக் கிடைத்தது.
கோவை செல்லும்வரை கொண்ட சங்கடம்
ஓகை முற்றும் உதறி விட்டுடிடுமே"

என்று கோவைகிழார் சி. எம். இராமச்சந்திரன் செட்டியார் ஈரோட்டில் ஏற்பட்ட இன்னல்களை இனிமையாக இயம்பியுள்ளார்.

கைத்தறித் துணி வாணிபத்தில் மிக்காரும் ஒப்பாருமின்றி விளங்கும் செங்குந்த முதலியார் சமூகத்தினர், மஞ்சள் வியாபாரத்திலும் (வனஸ்பதியின் மூலப் பொருளான) மணிலாக் கொட்டை வாணிபத்திலும் நிகரற்று விளங்கும் கொங்கு வேளாளக் கவுண்டர்கள், தோல் பதனிடும் தொழிலைத் தொன்று தொட்டுச் செய்துவரும் முஸ்லிம்கள், துணி வியாபாரத்தில் சான்பிரான்சிஸ் கோவிலிருந்து ஹாங்காங்வரை சிறந்து விளங்கும் சிந்தியர்கள், கல்வி நிலையங்கள்-மருத்துவ நிலையங்கள் நடத்தியும் அரசாங்க அலுவல்களிலும் ஈரோடு இரயில்வே லோகோ ஷெட்டிலும் வேலை பார்க்கும் கிறித்தவர்கள் இவ்வாறு பல இனத்தார் இன்றைய ஈரோட்டை உருவாக்கியுள்ளனர்.

கோவை மாவட்டத்தில் உணவுப்பொருள் விற்பனையில் முதல் இடம் பெறுவது பொள்ளாச்சி. அதற்கு அடுத்தபடி முக்கியமானது ஈரோடுதான். கோயம்புத்தூருக்கு அடுத்தபடி. ஈரோடுதான் இந்த மாவட்டத்தின் பெரிய நகரம்; கோவை மாவட்டம் இரண்டாகப் பிரிக்கப்பட்டால் புதிய மாவட்டத்தின் தலைநகராக

அமைவதற்கு எல்லாத் தகுதியும் உடைய ஊர் ஈரோடு தான். ஈரோடு காவிரிக்கரையில் அமைந்த ஊர். காளிங்க ராயன் வாய்க்காலும் வேறு சில ஓடைகளும் இவ்வூரின் ஊடே செல்லுகின்றன. அதனாலேயே, இவ்வூர் ஈரோடை (ஈர் ஓடை) எனக் காரணப்பெயர் பெற்று இப்போது ஈரோடு என்று மருவி வழங்குகிறது. இங்கே ஓடும் ஓடை எப்போதும் ஈரமாக இருப்பதால் ஊரின் பெயர் ஈர ஓடையாக இருந்திருக்கும் என்பது சிலரது கருத்து.

ஈரோடு நகரைச் சுற்றிலுமுள்ள பகுதி கைத்தறி நெசவில் புகழ்பெற்றது. பவானியில் நெசவாகும் சமக் காளம், குமாரபாளையத்தில் நெசவாகும் ரிப்பன், சென்னி மலையில் நெசவாகும் கைத்தறி வேட்டி, சேலைகள் ஆகியவை யாவும் ஈரோட்டு வணிகர் வாயிலாகத்தான் வெளியூர்களுக்குச் செல்லுகின்றன. தறிகாரர்க்கு வேண்டும் நூல்களை வழங்குவதற்காக இந்தியாவின் பெரிய நூல் ஆலைகள் யாவும் ஈரோட்டில் விற்பனை நிலையங்கள் வைத்துள்ளன.

கைத்தறியாளரின் கூட்டுறவு நிலையத்திலும் வேறு சில இடங்களிலும் காட்சி தரும் காலண்டரிங் இயந்திரம் என் உள்ளத்தை ஈர்த்தது. இதிலுள்ள ஈருருளைகளுக் கிடையே துணியைக் கொடுத்துப் பளபளப்பாக்குகிறார் கள். துணியின் இரு பக்கங்களையும் ஒரு நேரத்திலேயே பளப்பளப்பாக்கும் இயந்திரங்களும் உள்ளன. ஓர் உருளைக்கு ஆவி வருகிறது. அந்த ஆவிபிறிதொரு உருளை யுடன் தொடர்பு கொள்ளும்போது அழுத்தப்பட்டு (இஸ்திரிப் பெட்டி சலவைத் துணியைத் தேய்ப்பதால் ஏற்படுவது போன்று) துணிக்கு ஒரு பளப்பளப்பு உண்டாகிறது. துணியில் சுருக்கம் இருந்தால் அதை இந்த இயந்திரம் கிழித்து விடுகிறது. ஆகையால் சுருக்கங்களையெல்லாம் எடுத்துச் சரிபார்த்துத்தான் துணியை இந்த இயந்திரத்தில் நுழைக்கவேண்டும்.

மேட்டூரில் மின்சார நிலையம் ஏற்பட்டபிறகு ஈரோட்டில் மின்சாரப் பெருக்கமும் அதையொட்டிய நன்மைகளும் ஏற்பட்டுள்ளன. நீலகிரி மாவட்டத்திலிருந்தும் இவ்வூருக்கு மின்சாரம் வருகிறது. ஈரோட்டுக்குத் தெற்கேயுள்ள இடங்களுக்கு மின்சாரம் வழங்குவதற்கான ஒரு பெரிய நிறுவனமும் அலுவலகமும் ஏற்பட்டுள்ளன. கீழ்பவானி அணைக்கட்டு கட்டியபிறகு இவ்வூருக்கு அருகேயுள்ள நன்செய் நிலங்கள் ஏக்கர் 10,000 ரூபாய் வரை விலை போகின்றன. மஞ்சள் உற்பத்தியும் உச்சநிலையில் இருக்கிறது. கல்கத்தா கடைத்தெருவானல், ஏன், டில்லியின் சாந்தினி சவுக் ஆயினும் என்ன? அங்கே விற்பது ஈரோட்டு மஞ்சள்தான்! ஈரோட்டில் மேலோங்கி வரும் மற்றொரு தொழில் மரவள்ளிக் கிழங்கிலிருந்து மாவகைகள் செய்தல்.

1957 முதல் ஈரோட்டில பல புதிய தொழில்கள் ஏற்பட்டுள்ளன. தொழில் வளர்ச்சிக்கான மாதிரித் திட்டம் ஒன்றை இந்திய அரசாங்கத்தார் 26 இடங்களில் செயலாற்றி வருகின்றனர். அவற்றுள் தமிழ் நாட்டில் ஓரிடத்தில்...ஈரோட்டுப் பகுதியில்...இத்திட்டம் தொடங்கப்பட்டிருக்கிறது. கீழ் பவானித் திட்டத்தால் பயனடையும் ஊர்களில் வாழும் ஆறு லட்சம் பேருக்கு நலம் ஏற்படுமாறு இத்திட்டம் உருவாக்கப் பெற்றிருக்கிறது. மாவட்ட அடிப்படையில் அமையாது காவிரி ஆறு பாய்ந்தும் அதே சமயத்தில் கீழ்பவானித் திட்டம் ஏற்பட்டும் உள்ள இடங்களை (அவை கோவை மாவட்டத்திலிருந்தாலும் சரி, திருச்சி மாவட்டத்தில் இருந்தாலும் சரி) இணைத்து முக்கியமான பல தொழில்களைத் தொடங்கியுள்ளனர். இவற்றைப் பல்வேறு குழுவினர் அமைத்துள்ளனர். கைக்குத்தல் அரிசி, வர்தா செக்கு, வேப்பெண்ணெய்ச் சோப்புப் போன்ற குடிசைத் தொழில்களை, கிராமக் கைத்தொழில குழுவினர் பரப்பியுள்ளனர்.

இந்திய அரசாங்கச் சிறு தொழில் குழுவினர் தொடங்கியுள்ள தொழில்கள் பல. கைத்தோலுக்குப் பதிலாக இயந்திரத்தோலைப் பயன்படுத்தலை அருந்ததியருக்குப் பயிற்சிதரும் மாதிரிச் செருப்புத் தொழிற்சாலை பூட்டு, ஆணி, கதவுக்கீல், லாடம் ஆகியவை செய்யக் கொல்லருக்குப் பயிற்சிதரும் தொழிற்சாலை, எத்தகைய எண்ணெய்களை எந்த அளவில் தோல் பதனிடுவதற்குச் சேர்க்கலாம் என்பதையும் புதிய இயந்திரங்கள் மூலம் தோலைப் பயன்படுத்தும் முறைகளையும் புகட்டும் பயிற்சி நிலையம் ஆகியவை எனக்கு முக்கியமாகத் தெரிந்தன.

தையல்,பூவேலை, பின்னல் வேலை,மரப் பொம்மைகள் செய்தல் போன்ற பயிற்சிகளை அனைத்து இந்தியக் கைத் தொழில் குழுவினர் கொடுக்கின்றனர். கயிற்றால் பின்னப் படும் பாய்கள், மிதி, கிணற்றுக்கயிறு போன்ற தொழி லில் ஈடுபடுவோர்க்குக் கூட்டுறவு நிலையம் அமைத்துக் கடன் வழங்குகின்றனர். மூங்கிலால் செய்யப்படும் தூக்குப் பெட்டி, மின்சார விளக்கு மூடி, வெற்றிலைப் பெட்டி, சந்தனக்கிண்ணம், மணப்பந்தலுக்கு வேண்டும் தட்டு வகைகள் இவற்றைச் செய்யும் தொழிற் சாலையும் இருக்கிறது.

ஈரோடு தொழில் பேட்டையில் ஆல்கத்தின் என்னும் ஒருவகைக் கண்ணடித்தாள் செய்யப்படுகிறது. சென்டிரி பியூகல் இயந்திரங்களுக்கு வேண்டிய வார்ப்பு வேலை களைச் செய்யும் தொழிற்சாலையும், மெட்ரிக் அளவு முறைக்கு உரிய எடை கல் செய்யும் தொழிற்சாலையும் நடைபெற்று வருகின்றன.

சில ஆண்டுகட்கு முன்வரை ஈரோட்டில் சுகாதார நிலை மோசமாக இருந்தது. அடிக்கடி பரவிவந்த அம்மை நோயினின்றும் பாதுகாத்துக்கொள்ள மக்கள் ஏராள மான அம்மன் கோயில்களை அமைத்து வழிபட்டு வரு

கின்றனர். ஈரோடு தெய்வ நம்பிக்கையில் சிறந்த மக்களைக் கொண்ட ஊர் என்றால் வியப்பாக இருக்கிறதோ?

மலேரியா என்னும் முறைக் காய்ச்சல் நோயை ஒழிக்க நகராண்மைக் கழகத்தினர் ஊரெங்கும் கெமக்சீன் கலப்பினைத் தெளித்து வருகின்றனர். காச நோயாளிகளை, அருகேயுள்ள பெருந் துறைக்கு அனுப்புகின்றனர். காளிங்கராயன் வாய்க்கால் நீரால் பரவக்கூடிய வாந்தி பேதியைத் தடுக்க விரிவான சாக்கடைத் திட்டமும் ஏற்பட்டு விட்டால் ஈரோட்டில் தொத்துநோய்க்கு இனி இடமில்லை, பள்ளிகளில் பயிலும் சிறுவர்களை மருத்துவர் மூலம் சோதிக்க வேண்டும். 1923-லேயே கட்டாயக் கல்வியை அமலுக்குக் கொண்டுவந்த பெருமை ஈரோடு நகரத்துக்கு உண்டு என்பதை ஆணையர் என்னிடம் சொன்னபோது மகிழ்ச்சியடைந்தேன். ஆனால் இன்னும் பள்ளிப் பிள்ளைகளுக்கு மருத்துவச் சோதனை முறை ஏற்படாதது பெருமை தரவில்லை. மிகப் பெரியதொரு மருத்துவ நிலையம் 1959–இல் அரசாங்கத்தாரால் கட்டிமுடிக்கப் பெற்றிருப்பது, நம்பிக்கை ஊட்டுவதாக இருக்கிறது.

ஈரோட்டில் இருப்பவை: ஏராளமான நெல் அறைக்கும் இயந்திரங்கள், ஒரு பஞ்சாலை, ஏழு உயர்நிலைப்பள்ளிகள், பெரியார் ஈ. வே. ரா. ஆட்சிக்குழுத் தலைவராக உள்ள மகாசனக் கல்லூரி, 300 டெலிபோன்கள், டவுன்பஸ்.

ஈரோட்டில் காணத்தக்கவை: சிந்திக்காரர்களுடைய கிருஷ்ணன் கோயில், தமிழில் வழிபாடு நடைபெறும் ஈசுவரன் கோவில், திருமணங்களுக்கும் பொதுக்கூட்டங்களுக்கும் வாடகைக்கு விடப்படும் பெரியார் மன்றம், அழகுற அமைக்கப்பெற்ற சிதம்பரனார் பூங்காவும் அதைச்

சேர்ந்த உடற்பயிற்சி நிலையமும் பொதுமக்களுக்குச் செடிகள் விற்பதற்கான தோட்டமும்.

ஈரோட்டில் மலிந்தது காய்கறி.

ஈரோடு இந்தத் தலைமுறையில் இரு பெரியார்களைத் தந்திருக்கிறது. ஒருவர் பெரியார் ஈ. வே. ரா. என்பது எல்லோருக்கும் தெரிந்ததே; மற்றொருவர் கும்பகோணத்தில் குடியேறி, சென்னைத் துறைமுகத்தில் எழுத்தராகப் பணியாற்றிக் கேம்பிரிட்சுப் பல்கலைக்கழகத்தில் போய் உலகப் புகழ்பெற்ற கணித மேதை இராமானுசம்.

இந்நகர்ப் பெண்களின் கற்புச் சிறப்பை.

'பூவா ரதிகா லையிலெழுந்து
பொன்னி படிந்து நீர்க்குடமும்
புடைந்திட் டெழுந்து மார்பதனில்
பொலியும் இரண்டு பொற்குடமும்
ஆவா வென்ன இடைசுமந்திட்
டசைந்து மெலிந்து கமலமுறும்
அன்ன நடையும் ஞானியராம்
அறிஞர் நடையும் தடுமாறப்
பூவால் அமைத்த தாளதினால்
புற்றே யாம நடை நடந்து
போயிற் சென்று தங்கணவர்
பூசா விதிக்கும் புனல் கொடுத்து
தேவா லயமும் தேவதையும்
தேவா நீயே எனத் தொழுது
திகழு மடமார் கற்பதினால்
செருக்கும் ஈரோர்டு எனும்பதியே'

என்ற திருவரங்கப் பதிகப் பாடல் நன்கு விளக்குகின்றது.

நில வருவாய்த்துறை, நீதித்துறை, போலீசுத் துறை ஆகியவை தவிர அரசாங்கத்தாரின் ஏனையத்

துறைகளுக்கு உரிய மாவட்ட அலுவலகங்கள் ஈரோடு நகரில் அமைந்துள்ளன.

## கொடுமுடி:

கரூரிலிருந்து 17 மைல் (27 கி. மீ.); தொலைவிலும் ஈரோடிலிருந்து 24 மைல் (40 கி. மீ.) தொலைவிலும் திருச்சி, சேலம், கோவை ஆகிய மூன்று மாவட்டங்களின் எல்லைகளுக்கு அணித்தே இந்த ஊர் இருக்கிறது. காவிரிக் கரையில் அமைந்து வளமாக இருக்கிறது. கரும்பும் நெல்லும் மஞ்சளும் இப்பகுதியில் பயிரா கின்றன.

ஊரின் முழுப்பெயர் திருப்பாண்டிக்கொடுமுடி. மூவ ராலும் பாடப்பெற்ற தலம்; ஒரு சுற்றுச் சுவருக் குள்ளேயே மகுடேசுவரர்க்கும் அரங்கநாதர்க்கும் தனித் தனிக் கோவில்களும் வன்னி மரத்தடியில் பிரமாவின் விக்கிரகமும் இருப்பது இத்தலத்தின் சிறப்பு. நம்மாழ் வாரும் இத்தலத்தைப் பாடியுள்ளார்.

கொடுமுடி நாத ஈசுவரர் கோயில், சிற்பச் சிறப் புடையது. சித்திரா பௌர்ணமியன்று பெரியதொரு தேர்த் திருவிழா நடைபெறும்.

'பரந்திழி காவிரிப் பாங்கர்ப்
பாண்டிக் கொடு முடியாரே'

என்று சம்பந்தரும்

'கற்றவர் தொழு தேத்தும் சீர்க்கறை
யூரில் பாண்டிக் கொடுமுடி'

என்று சுந்தரரும்

'கறையூர் கருப்பறியல் கன்றாப்பூரும்
கயிலாய நாதனையே காணலாமே'

என்று அப்பரும் பாடியுள்ளனர்.

பக்திச்சுவை சொட்டத் தமிழிசை பாடும் கே. பி. சுந்தராம்பாள் இவ்வூரினரே.

### பெருந்துறை

நுரையீரல் நோயைப் போக்கும் மருத்துவ நிலையத்தால் புகழ்பெற்ற இவ்வூர் பருத்தி பயிராவதாலும், கருப்புக் கட்டி விற்பனையாவதாலும் தொழில் துறையில் சிறந்து விளங்குகிறது. இங்கே கிறித்தவர் மிகுதியாக வாழ்கின்றனர். இது, கல்வித்துறையில் வளர்ச்சியடைந்த ஊர் என்று கூறலாம்.

### ஊற்றுக்குழி

ஈரோடு திருப்பூர் இரண்டுக்கும் இடைப்பட்ட ஊர் வெண்ணெய் விற்பனை இவ்வூரின் சிறப்பான தொழில்.

### சென்னிமலை

மலைமீதுள்ள சென்னிமலை ஆண்டவர் கோயிலால் சுப்பிரமணியர் தலமாகவும், தறி நெசவாளர் சிறப்புறும் வணிக நகரமாகவும், செங்குந்தர் வாழும் பேரூராகவும் உள்ள சென்னிமலை கொங்கு நாட்டின் காணத்தக்க இடங்களுள் ஒன்று.

ஈரோடுக்கு மேற்கே 18 மைல் (29 கி. மீ.) தொலைவிலும் ஈங்கூர் இரயில் நிலையத்திற்குத் தெற்கே 4 மைல் (6 ½ கி. மீ.) தொலைவிலும் இவ்வூர் இருக்கிறது.

நெடுங்காலமாக இங்கு மழை குறைவு. தெப்பக்குளமும் பல மாதங்கள் வறண்டுவிடும். அதனுள்ளே அமைந்த கிணற்றில் இரவு நேரத்தில் சென்று நீர் எடுக்கும் நிலையும் 1930 வரை இருந்தது. அப்போது 20, 30 பெண்கள் - காவலுக்குச் சில ஆடவர் தடியும் அரிக்கன் விளக்கும் தாங்கி வர - நள்ளிரவில் நீர் மொண்டுவருவர்.

கீழ்பவானி அணைக்கட்டு அமைந்த பின்னர், பஞ்சப் பகுதி என்னும் நிலை மாறி இப்போது இங்கே சோளம், அமெரிக்கப் பருத்தி, கம்பு போன்ற தானியங்களைப் பயிரிடுகின்றனர். விசையினால் பருத்தி அறைக்கும் 6 இயந்திரங்கள் உள்ளன. கருப்பட்டி காய்ச்சுதலும் இங்கு ஒரு பெரிய தொழில்.

இவ்வூர்க்குப் பெருமை தருபவர்கள் இங்கு வாழும் 4, 000 தறிகாரர். இவர்கள் மலிவான சேலைகள் நெய்து அவற்றை இலங்கையிலுள்ள தோட்டத் தொழிலாளர்க்கு விற்று வந்தனர். 1950க்குப் பிறகு இலங்கைக்கு ஏற்றுமதி குறைந்துவிட்டது. இப்போது மெத்தை விரிப்புக்கள் நெசவில் இவர்கள் சிறந்து விளங்குகின்றனர். ஆப்பிரிக்க நாடுகளும் அவற்றை வாங்குகின்றன. இவ்வூர் நெசவாளர் கூட்டுறவு நிலையத்தில் நெசவாகும் 'சென்டக்ஸ்' விரிப்புக்கள் உலகப்புகழ் பெற்றவை. மேசை, நாற்காலி ஆகியவற்றின் மீது பயன்படுத்தப்படும் துணிகள் செல்வர் தம் இல்லங்களை அழகுபடுத்தும் திரைச் சேலைகள் (Furnishings and Household linens) ஆகியவையும் கவர்ச்சியான கோலங்களிலும் பல வண்ணங்களிலும் நெசவாகின்றன. ஊரையடுத்து, நெசவாளர்க்கென குடியிருப்பு ஒன்று கட்டப்பெற்றிருக்கிறது. இவ்வூரினர் பலர் வாணிபத்தில் தேர்ச்சியடைந்து சென்னையிலும் பிற இடங்களிலும் சவுளி வியாபாரத்தில் சிறந்து விளங்குகின்றனர்.

திருப்பூர்க் குமரன் பிறந்தது சென்னிமலையிலேயேயாம்.

சென்னிமலையிலிருந்து மூன்று கிலோமீட்டர் தொலைவில் நொய்யல் ஆறு செல்லுகிறது.

சென்னிமலை என்னும் மலையின் அடிவாரத்தில் இருப்பதால், இவ்வூர்க்கும் மலையின் பெயரே வழங்கி வருகிறது.

அடிவாரத்தில் ஊரின் நடுவே ஒரு சிவன் கோயில் இருக்கிறது. அங்குள்ள கைலாசநாதர், சுப்பிரமணியர் உற்சவ விக்கிரகங்கள் காணத்தக்கவை.

மலை, பாம்பு படுத்தாற்போல நீளமாக இருக்கிறது. அதன் சுற்றளவு 10 மைல் (16 கி. மீ. ); பரப்பு 1700 ஏக்கர்; மலை உச்சி கடல் மட்டத்திலிருந்து 1749 அடி உயரம். மலைமீது, அழகான முருகன் கோயில் அமைந்திருக்கிறது. இம்மலையில் ஏறுவது எளிது. இம்மலையில் 108 தீர்த்தங்களும் 12 ஆண்டுக்கு ஒருமுறை பொங்கும் மாமாங்கச் சுனையும் எட்டி, கருநொச்சி முதலிய மூலிகைகளும் உள்ளன. தை, ஆடி அமாவாசைகளில் ஏராளமானவர் வருவதுண்டு.

சென்னி—தலை, சென்னிமலை—தலையான மலை; வடமொழியாளர் இவ்வூரைச் சிரகிரி என்று குறிப்பிடுகின்றனர்.

சிவாலயச் சோழன் என்ற சோழ மன்னன் 10—ஆம் நூற்றாண்டில் வந்து இம்மலைமீதுள்ள முருகனை வழிபட்டதாகக் கூறுவர். அப்போது 'சோழநாட்டுச் சிற்பிகளை அனுப்பி இக்கோவிலைப் புதுக்கி அமைத்தான், மலை ஏறுவதற்கான பாதையைச் செப்பனிட்டான், பூசைகளைக் கவனிக்கத் திருக்கடையூரிலிருந்து ஒரு குடும்பத்தை அனுப்பிவைத்தான், அடிவாரத்தில் ஓர் ஊரை உண்டாக்கி அங்கு கைலாயநாதர் கோவிலைக் கட்டினான்' என்பர். முருகனுக்கு உரிய முகூர்த்தங்கள் 16ம் இக்கோயிலிற் காணப்பெறுகின்றன. சிறு தொலைவில் அம்மனுக்கு ஒரு தனிக் கோயில் இருக்கிறது; 'சென்னிமலை வேலவர்க்குச் சேர்ந்த கொம்பு இரண்டு உண்டு' என்று இக்கோயிலைப் பற்றிக் காளமேகப் புலவர் பாடியிருக்கிறார்.

## 30. கோபிச்செட்டிபாளையம் வட்டம்

மைசூர் மாநிலத்து எல்லையருகே உள்ள இவ் வட்டம் கோவை மாவட்டத்தின் நெற் களஞ்சியம் என்ற பெயர் பெற்றது. சத்தியமங்கலத்துக்கு அருகே மைசூர் அரசர்களால் கொடுவேரி என்ற அணைக்கட்டு, சில நூற்றாண்டுகளுக்கு முன் கட்டப்பெற்றதன்பயனாக இப்பகுதியில் 40,000 ஏக்கர் விளைகிறது. பவானி சாகர் அணைக்கட்டால் இந்தப்பகுதி மேலும் நன்மையடைந்திருக்கிறது. மொத்தமாகப் பார்க்கும்போது, 80 கி. மீ. "சமசதுரத்தில்" இரண்டு லட்சம் ஏக்கர் நிலத்தில் நெல் விளைகிறது. இரண்டு போகம் விளையக்கூடிய நன்செய் நிலங்களும் இருக்கின்றன. ஏக்கர் 7,000 ரூபாய்வரை இவற்றுக்கு மதிப்பு உண்டு.

தோட்டங்களில் குழாய் இயந்திரம் வைத்து மிளகாயும் பருத்தியும் மிகுதியாகப் பயிரிடப்படுகின்றன.

இப்பகுதி பச்சை வாழைப்பழத்துக்குப் புகழ் பெற்றது.

### கோபிச்செட்டிபாளையம்

நகராண்மைக்கழகம் உள்ள இவ்வூர் இவ்வட்டத்தின் தலைநகராக இருக்கிறது. இவ்வூரை, "கோபி" என்று சுருக்கமாகச் சொல்லி வருகிறார்கள்.

பட்டு நெசவுத் தொழில் இந் நகரில் சிறந்து விளங்குகிறது.

கோபியின் வரலாற்றில் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி 1958 டிசம்பரில் பெருஞ் சிறப்புடன் நடைபெற்ற தமிழ் நாடு காங்கிரசு அரசியல் மாநாடு. அப்போது, இவ்வூருக்குப் பல புதிய சாலைகளும் குடிதண்ணீர் வசதியும் ஏற்

பட்டன. இரயில் வசதியும் ஏற்படவேண்டுமென்பது கோபி மக்களின் ஆசை.

**பச்சைமலை**

சிறுகுன்று; இது கோபியிலிருந்து பாரியூர் செல்லும் வழியில் இருக்கிறது. இதன் மீது ஒருமுருகன் கோயில் இருக்கிறது.

**பவளமலை**

பச்சைமலையிலிருந்து பாரியூர் செல்லும் வழியில் 2 கி. மீ. தொலைவில் இருக்கிறது. இம்மலை மீதும் ஒரு முருகன் கோயில் இருக்கிறது.

**பாரியூர்**

கோபியிலிருந்து 6 கி. மீ. தொலைவிலுள்ள பாரியூர் பழமைப் பெருமையுடையது; பாரியின் தொடர்புடையது என்று கொங்குநாட்டில் சிலர் கருதுகின்றனர். இவ்வூரில் சிவன் கோயிலும் பெருமாள் கோயிலும் சோலைகளுக்கிடையேயுள்ள கொண்டத்துக் காளியம்மன் கோயிலும் அங்கு பளிங்குக் கல் சிற்ப வேலைகளும் உள்ளன. இவ்வூர் காணத்தக்க சிற்றூர்.

**சத்தியமங்கலம்**

இம்மாவட்டத்தின் வடகோடியிலுள்ள இவ்வூர் வரலாற்றுச் சிறப்புடையது. மைசூர் மாநிலத்திலுள்ள சாம்ராஜ்நகருக்கு இங்கிருந்து பஸ்போக்குவரத்துஉண்டு. சத்தியமங்கலத்திலிருந்து 32 கி. மீ. தொலைவில்தமிழ்நாடு-மைசூர் எல்லை இருக்கிறது.

வரலாறு: மைசூர் மாநிலத்துக்கு அண்மையில் இருப்பதால், இவ்வூர் இராணுவ முக்கியத்துவமும் உடையது. மைசூர்ப்படைகள் தமிழகத்தைப் படையெடுத்தது சத்தியமங்கலம் வழியாகத்தான். எனவே, அவற்றைத்

தடுக்க, திருமலைநாயக்கர் இவ்வூரில் காவல்கோட்டை ஒன்றைக்கட்டி, தம் மருமகனையே இவ்வூரில் இருக்கச் செய்தார். இக்கோட்டை இப்போது பாழ்பட்டிருக்கிறது.

1653-இல் இவ்வூர் மைசூர் ஆட்சிக்குட்பட்டது. பின்னர் ஆங்கிலேயர் வயப்பட்டது. 1768-இல் இப்பகுதியை ஐதர் அலி பிடித்துக்கொண்டார். 1790இல் திப்புவின் குதிரைப்படை பிரிட்டிஷ் இராணுவவீரர்களை முறியடித்து வாகை சூடிக்கொண்டது. அப்போது திப்பு சுல்தான்கட்டிய கோட்டையின் சிதைந்த நிலையே இப்போது பவானி ஆற்றோரத்தில் காணப்படும்கோட்டை என்பர். தன நாயகன் கோட்டை என்ற புகழ்பெற்ற போர்க்களம் இங்கிருந்து 10 கி. மீ. தொலைவில் அமைந்திருந்தது. திப்புசுல்தான் காலத்திற்குப் பிறகே இப்பகுதியில் பிரிட்டிஷ் ஆட்சி ஏற்பட்டது.

ஆட்சி நிலை: பிரிட்டிஷ் ஆட்சி தொடங்கியபோது, மைசூர் எல்லையிலுள்ள முக்கிய நகரங்களிலெல்லாம் ரெவினியூ டிவிசன் தலைமை அலுவலகங்கள் ஏற்படுத்துவது வழக்கமாக இருந்தது. கொள்ளேகாலம், சத்தியமங்கலம் என்ற இரண்டு வட்டங்கள் அடங்கியதாகச் சத்தியமங்கலம் ரெவினியூ டிவிசன் இருந்துவந்தது. பிறகு, இது ஒரு வட்டத் தலைநகராக மட்டும் இருந்தது. இப்போது கோபிச்செட்டிபாளையம் வட்டத்துக்கு உட்பட்ட சிறு வட்டத்தின் தலைநகரமாக இவ்வூர் இருந்து வருகிறது.

சமயத்துறை: சமயத்துறையிலும் சத்தியமங்கலம் சாலச்சிறப்புடையது. "சத்தி" (இவ்வாறுதான் இவ்வூர் குறிப்பிடப்படுகிறது)யில் 250 அடி உயரமுள்ள முருகன் குன்றின்மீது முருகன் கோயில் இருக்கிறது. சில நூற்றாண்டுகளுக்குமுன் வைணவமும் சைவமும் சமணமும் இங்கே சிறந்து விளங்கின. மதுரை நாயக்கர்கள் ஆதர

வால், இயேசுசபைப் பாதிரிகள் 17 ஆம் நூற்றுண்டில் இப்பகுதியில் செல்வாக்குப்பெற்றுக் கத்தோலிக்கத்தைப் பரப்பினர். ஐதர், திப்பு சுல்தான் ஆகியோர் காலங்களிலிருந்து இஸ்லாமிய மதமும் இங்கே பரவி ஓரளவு நிலைத்து வருகிறது. பெரிய மசூதி ஒன்றும் இருக்கிறது.

மொழி: கன்னட மொழி பேசும் லிங்காயத்துச் சமூகத்தினர் பலர் மைசூரிலிருந்து குடிவந்து இங்கேயே நிலைத்துவிட்டனர். கன்னடம் பேசும் நாட்டின் அருகேயிருந்துங்கூட, இந்நகரில் தூய தமிழ் ஒலிக்கக்கேட்டு மகிழ்ந்தேன்.

இயற்கை நிலையும் வளமும்: இயற்கை எழில் நிறைந்தவூர் சத்தி. ஊருக்கு வடக்கே 8 கி. மீ. தொலைவில் கம்பத்தராயன் மலை இருக்கிறது. இதன் உயரம் 5,000 அடி. ஊருக்கு மேற்கே பிளிகிரிரங்கன் மலையின் தொடர்ச்சியைக் காணலாம். எனவே இந்தக் குறிஞ்சி நிலப்பகுதி, தமிழகத்துக்கும் மைசூருக்கும் இயற்கையாக அமைந்தஎல்லை எனலாம்.

காட்டுவளம்: ஊர் அருகே காடுகளும் மிகுதி. 13 கி. மீ. தொலைவிலுள்ள பன்னரிக் காட்டில் கடுக்காய், சந்தனக்கட்டை, கிராம்புப்பட்டைகள் கிடைக்கின்றன. சத்தியமங்கலத்தில்ஆறுமாதத்துக்கு ஒருமுறை, அரசாங்கக் காட்டியல் துறையினர் சந்தனக்கட்டைகளை ஏலம் போடுகின்றனர். ஒரு டன் 13,000 ரூபாய் விலையுள்ள சிறந்த சந்தனக் கட்டைகள் கூட இப் பகுதியில் உண்டு.

விவசாயமும் தொழிலும்: பொருளாதார அடிப்படையில் இது ஒரு பிற்பட்ட பகுதியே. மழை மிகக் குறைவு. கோவையிலிருந்து அன்னூர் வழியாகச் சத்திக்குச் செல்லும் பாதையில் பாலைவனம் போன்ற இடங்கள் உள்ளன.

பவானி கால்வாயை நெருங்க நெருங்க, பாலைவனம் சோலைவனம் ஆகிறது. சத்தியில் புது வாய்க்கால் பகுதியில் சோளமும் நெல்லும் புகையிலையும் ஏராளமாகப் பயிரிடப்படுகின்றன.

வாணிகம்: அகலமான வாய் உள்ள மூங்கில் கூடைகள் சத்திக்கு அருகே செய்யப்படுகின்றன. நூல் ஆலைகளில் "பாப்பின்" அள்ளுவதற்கு, இவை லட்சக்கணக்கில் விற்பனையாகின்றன. சத்திநகரில் தோல் பதனிடும் சிறு தொழிற்சாலைகள் உள்ளன. மைசூர் மாநிலத்துப்பொருள்கள் தமிழ் நாட்டுக்கு இவ்வூர் வழியே வருகின்றன. கேழ் வரகு, பலா, மைசூர்ப் பெரிய தேங்காய் ஆகியவை மைசூரிலிருந்து இங்கே விற்பனைக்கு வருகின்றன.

போக்குவரத்து: ஈரோட்டிலிருந்து இவ்வூர் வழியாக மைசூர் மாநிலத்துக்கு இரயில்பாதை போடவேண்டுமென்ற பேச்சும் திட்டமும் 1930 முதல் இருந்து வருகின்றன. இத்திட்டம் விரைவில் நிறைவேற்றப்பட வேண்டும். அதற்கிடையே, திருச்சி—ஈரோடு—சாம்ராஜ் நகர்—மைசூர், கோயம்புத்தூர் - உதகமண்டலம் - மைசூர் ஆகிய பாதைகளில் தமிழ்நாடு அரசாங்கம் பஸ்களையேனும் விடுவது நன்று.

## பன்னாரி

சத்தியமங்கலத்திலிருந்து மலையேறும்போது, மலைவாயிலில் பன்னாரி இருக்கிறது. இவ்வூரில் இம் மலைக்குரிய தேவதையான மாரியம்மனுக்கு ஒரு கோயில் இருக்கிறது. மலையேறுமுன் பொதுமக்களும் வாகனம் ஓட்டுபவர்களும் இந்த அம்மனை வழிபடுவது வழக்கம். சேலம், கோவை மாவட்டங்களிலுள்ள மக்கள் இரண்டு இலட்சம்பேர், பங்குனிப் பவுர்ணமியில் இக்கோயிலில் நடைபெறும் திருவிழாவுக்கு வருகின்றனர். இதனால், இக்கோயில் கோவை

மாவட்டத்தில் மிகுதியான வருவாய் உள்ள கோயில் களுள் ஒன்ருக இருக்கிறது.

பவானிசாகரிலிருந்து 10. கி. மீ. தொலேவிலேயே இருப்பதால், இவ்வூருக்குக் கோவையிலிருந்தும் பஸ் போக்குவரத்து உண்டு.

### திம்பம்

சத்தியிலிருந்து சாம்ராஜ்நகருக்குச் செல்லும் வழியில் 19 கி. மீ. (12 மைல்) தொலேவில் கடல் மட்டத்திலிருந்து 3,000 அடி உயரத்தில் திம்பம் என்னும் இடம் இருக் கிறது. இது காணத்தக்க இடம். இவ்வூருக்கும் சத்திக் கும் இடையே 21 திருப்பங்கள் இருப்பதிலிருந்து மலேப் பாதையின் அமைப்புத் தெரியவரும். இரவில் மலேமீது பஸ்கள் செல்லும் காட்சி கவினுறு தோற்றமாக இருக்கும். இவ்வழியில் புலி மிகுதி. லாரிகளே யானைகள் தூக்கி வீழ்த்துவதும் உண்டு. திம்பத்தில் கட்டப்பட்டுள்ள தங்கும் விடுதி (Rest House) யிலிருந்து பள்ளத்தாக் கைப் பார்த்தால், உதகமண்டலத்துக் காட்சி நம் நினே வுக்கு வரும்.

சத்தியமங்கலத்திலிருந்து திம்பம் வழியாகத்தான் கொள்ளேகாலத்துக்குப் பஸ்கள் செல்லுகின்றன.

திம்பம் காட்சியும் காடுகளும் அயல்நாட்டு அறிஞர் சிலரின் உள்ளத்தை ஈர்த்து, அரிய நாவல்கள் ஆங்கிலத் தில் அமைவதற்குக் காரணமாக இருக்கின்றன.

### தாளவாடி

மைசூர் மாநிலத்து எல்லேயில் திம்பம்–சாம்ராஜ் நகர் வழியில் தாளவாடி மலேப்பகுதி இருக்கிறது. இதன் பரப்பளவு 200 சதுர கி. மீ. இங்கு 26,000 மக்கள் வாழ் கின்றனர். திம்பத்திலிருந்து தாளவாடிக்கு 12 லட்சம் ரூபாய்ச் செலவில் மலேச்சாலே போடவும், சிறிய நீர்ப்

பாசனத் திட்டங்களை இப்பகுதியில் நிறைவேற்றவும், மலைவாழ் மக்களுக்கான தொழில்களைத் தொடங்கவும் மூன்றும் ஐந்தாண்டுத் திட்டத்தில் வகை செய்யப் பட்டிருக்கிறது. தாளவாடி கிராமத்தில் பட்டுப்பூச்சிச் செடியைப் பயிரிட்டு 500 குடும்பங்கள் பிழைக்கின்றன. இத்தகையவர்களுக்கு உதவும் கூட்டுறவுச் சங்கம் இந்தியாவில் இங்கு மட்டுமே உண்டு.

தாளவாடிக் காடுகளில் மருந்துக்கு உதவும் பெரிய நெல்லிக்காய் காய்க்கும் மரங்கள் உள்ளன.

தாளவாடிப் பகுதியில் வாழும் லிங்காயத்துக்களும் கன்னட மொழி பேசும் ஏனைய சமூகத்தாரும் இப் பகுதியை மைசூர் மாநிலத்தில் சேர்த்துவிட வேண்டு மென்று கிளர்ச்சிசெய்து வருகின்றனர்.

## பவானி சாகர்

மழையின்றி மக்கள் துன்பப்படும் இடங்களில் சத்திய மங்கலம், ஈரோடு போன்ற பகுதிகள் குறிப் பிடத்தக்கன. தொடர்ந்து சில ஆண்டுகளுக்கு மழை தவறிவிட்டால், பச்சை மரங்கள் பட்டுப்போய், கட்டை யும் காம்புமாகக் காட்சிதரும். மல்லுக்கட்டும் வீரர்களும் புல்லுக்கட்டைப்போல் ஆவர்; கல்லுடைக்கும் வன்மை யுடையவரும் கருவாடாய்ப் போவர்; 10 வகைப் பட்சண மும் பாயசத்தோடு உண்பவர் சொத்தைப் புளி விதையும் சோளத் தவிடும் உண்பர்.

பவானியும் மோயாறும் சேரும் இடத்தில் 5½ கோடி ரூபாய் செலவில் ஓர் அணையும் 5 கோடி ரூபாய் செலவில் கால்வாய்களும் 1955-இல் கட்டி முடிக்கப்பெற்றன. அதன்பிறகு,

'வித்துப் போட்டால் சொத்தை-என்னும்
வெறும் நிலங்களெல்லாம்
சத்து நிறைந்து போச்சு- தானியக்
கத்தைக் கதிர்களாச்சு
தொத்து நோய்கள் பஞ்சம்-யாவும்
தூர விலகிப் போச்சே'.

இந்த அதிசயத்துக்குக் காரணமான அணைக் கட்டைக்காண நண்பரொருவரும் நானும் கோயம்புத்தூரி லிருந்துபுறப்பட்டோம். சிறிது நேரத்தில் எங்கள் கார் பவானியை நோக்கி விரைந்தது. நாங்கள் செல்ல விரும்பி யது பவானிசாகர். பவானிக்கும் பவானி சாகருக்கும் ஏறத்தாழ 80 கி. மீ. இருக்கலாம். பவானி ஆறு காவிரி யோடு கூடும் இடம் பவானி. அது சேலம் மாவட்டத்தின் எல்லையில் உள்ளது; சமுக்காளத் தொழிலால் புகழ் பெற்றது. அணை உள்ள இடம் நீலகிரி மாவட்ட எல்லை அருகே உளது. 'நீர்ப்பெருக்கு உள்ள இடம்' என்ற பொருளில் 'சாகர்' என்ற இந்திச் சொல்லைப் பிணைத்த தால், தனக்குப் புரியவில்லை என்று காரோட்டி தெரி வித்து, பிறகு அணைக்குச் செல்லும் வழியில் திருப்பினார்; நாங்கள் அப்போது ஆனந்த சாகரத்தில் மூழ்கினோம்.

பவானி சாகரில் மூழ்கிவிட்ட பவானி அம்மனின் உருவங்களுக்குத் தனிக் கோயில் கட்டியிருப்பதை முதலில் பார்வையிட்டோம். அந்த ஊரில் அணையும் கோயிலும் மட்டும் கட்டிவிடவில்லை. முன்பு அங்கு உப்புத் தண்ணீரே கிடைத்ததாம். அணை கட்டிய பிறகு, 15 கி. மீ. சுற்றளவில் எங்கு கிணறு வெட்டினாலும் உப் பில்லாத நல்ல தண்ணீர் கிடைக்கிறது. தண்ணீர் வசதி யும் காலி இடங்களும் ஏராளமாக இருந்தால், ஆக்க வேலைகள் என்னென்ன செய்ய இயலும் என்பதையும் தெரிந்துகொண்டோம்.

பவானி சாகர் கோயம்புத்தூரிலிருந்து 45 மைல் (72 கி. மீ.) சத்தியமங்கலத்திலிருந்து 9 மைல் (15 கி. மீ.) மேட்டுப்பாளையத்திலிருந்து 22 மைல் (35 கி. மீ.) தொலைவில் இருக்கிறது.

வரலாற்றுப் புகழ் மிக்க தனநாயகன் கோட்டையும் கோயிலும் இருந்த இடத்தில்தான் இப்போது அணை கட்டப்பெற்றிருக்கிறது. நீரில் மூழ்கிப்போன அந்தக் கோயிலுக்குப் பதில் புதிய கோயில் ஒன்று கட்டப்பட்டிருப்பதைத் தவிர, பவானி அம்மனின் திரு உருவங்கள் அணைக்கட்டின் மேல் தளத்திலும், புதிய கால்வாய் தொடங்கும் இடத்திலும் வைக்கப்பட்டுள.

கல் அணையின் இரு பக்கங்களிலும் 5½ மைல் (9 கி.மீ.) நீளம் உள்ள ஒரு மண் அணை போடப்பட்டிருக்கிறது. உலகிலேயே நீளமான மண் அணை இதுதானும். 16 கோடி கன அடி மண் போட்டு இது கட்டப்பட்டதாம். கூலி ஆட்கள் தலையில் தூக்கி மண் கொட்டுவதானல் 40 ஆண்டுகள் ஆகும். நெடுந் தொலைவில் மண்ணை வெட்டவும் அங்கிருந்து கொண்டுவரவும் மிகப் பெரிய இயந்திரங்கள் பயன்படுத்தப்பட்டதால், இந்த வேலை நான்கே ஆண்டுகளில் நடந்து முடிந்தது. தண்ணீரில் வழிந்தோடும் பாகம் மட்டும் சிமிண்டால் கட்டப்பட்டிருக்கிறது. இந்த அணையின்மீது நடந்தோ, வாகனத்திலோ சென்றால், நீர்த்தேக்கம், வளர்ந்துவரும் பவானிசாகர் நகர், வானுற உயர்ந்த மேற்கு மலைத்தொடர் ஆகியவற்றை மூன்று திக்குகளில் காணலாம்.

கால்வாயின் நீளம் 121 மைல். இதனல் கோபி, பவானி, தாராபுரம் வட்டங்களில் 2,07,000 ஏக்கரும் திருச்சி மாவட்டத்துக் கரூர் வட்டத்தில் 4,000 ஏக்கரும் விளைகிறது. இந்தக் கால்வாய் தொடங்கும் இடத்தில் ஒரு பூங்கா இருக்கிறது. மைசூரில் கிருஷ்ணராஜசாகர்

அணைக்கட்டுக்கு அருகே 'பிருந்தாவனம்' என்ற பூங்கா இருக்கிறது. பிருந்தாவனத்தைப் பார்ராதவன் பிறவி எடுத்தும் பயனில்லை என்ற சொற்றொடரிலிருந்து அதன் அழகை உணரலாம். அந்த அணையும் பூங்காவும் ஏற்பட்ட பிறகு, எல்லா இடங்களிலும் முதலில் பூங்காவை அமைத்துவிட்டுப் பின்னரே அணை கட்டத் தொடங்குகிறார்கள் என்று என் நண்பர் சொன்னார். இப்பகுதியில் போட்டோ எடுப்பது தடை செய்யப்பட்டிருக்கிறது. குறிப்பிட்ட சில காட்சிகளையாவது படம் எடுத்து அழகிய வண்ண அட்டைகளாக விற்று அரசாங்கத்தார் வருவாய் அடைந்து எங்களைப் போன்றவர்களின் ஆசையையும் நிறைவேற்றலாம்.

அணைக்கட்டால் மூழ்கி மறைந்துவிட்ட ஊர்களில் வாழ்ந்த மக்களுக்காக அரசாங்கத்தார் புதிதாக 7, 8 கிராமங்களை அமைத்துள்ளனர். இதற்கெனச் சில காடுகளை அழித்துள்ளனர். வேறு சில காடுகளில் நீலகிரித் தைல மரங்களை நட்டிருக்கின்றனர்; முந்திரிக் கொட்டையையும் பயிரிட்டிருக்கின்றனர். எஞ்சிய காடுகளில் வரிப்புலியும் சிறுத்தையும் வாழ்ந்து, வேட்டையாடிப் பொழுது போக்குவோரின் வெறிக்கு இரையாகின்றன.

அணைக்கட்டு மேற்பார்வை வேலையில் அங்கே நிலையாக இருப்பவர்களுக்காக வசதி நிறைந்த ஒருபுது நகரம் உண்டாக்கப்பட்டிருக்கிறது. இந் நகரத்துச் சாலைகளுக்குப் பெயர் கிடையாது; "எண்" தான் உண்டு. ஞாயிற்றுக் கிழமை தோறும் சந்தை கூடுசிறது. தக்காளி, கத்திரிக்காய், வெண்டைக்காய் முதலியவை அங்கு வாழ்பவருக்கு மலிவாகக் கிடைப்பதற்காக, 25 ஏக்கர்ப் பரப்பில் காய்கறித் தோட்டம் போடப்பட்டிருக்கிறது.

வீடுகள் அச்சில் வார்த்து எடுத்தது போல ஒரே உருவமாக உள்ளன. வீடுகளில் குடியிருப்பவர்களின்

பதவிக்கும் சம்பளத்திற்கும் ஏற்றவாறு அவற்றின் அளவிலும் அவற்றுக்கு ஏற்பட்ட கட்டுச் செலவிலும் வேறுபாடு இருக்கிறது. மேஸ்திரி, சூப்பர்வைசர், ஜே. ஈ., ஏ. ஈ., ஈ. ஈ. ஆகியவர்கள் இங்கு வாழ்கின்றனர்.

இங்குள்ள வீடுகளில் சுவர் கட்டுவதற்கு ஏழு பங்கு மண்ணும் ஒரு பங்கு சிமெண்டும் கலந்து புது விதமான உறுதியான கற்களைப் பயன்படுத்தியிருக் கிறார்கள். தோற்றத்தில் இவை, பச்சை வெட்டுக்கல் போன்று இருக்கும்; சன்னல்களில் மரச் சட்டங்களுக்குப் பதிலாகச் சிமெண்டுச் சட்டங்களைப் பயன்படுத்தி யுள்ளனர்.

இங்கு அணை கட்ட நிலத்தைத் தோண்டியபோது எடுத்த மாக்கல்லால் சமையலுக்கு உதவும் கல் சட்டிகள் செய்யப்பட்டுள்ளன. இந்த மாக்கல்லைப் பொடியாக்கி சிலவாசனைப் பொருள்களைக் கலந்து முகப்பூச்சு (டால்கம் பவுடர்) என்று சொல்லி விற்கிறார்கள்!

இங்குள்ள தோட்டம் அரசாங்க விவசாயப் பண்ணை யைச் சேர்ந்தது. இதன் பரப்பு 400 ஏக்கர்: கால் வாயின் கிளைகள் இந்தப் பண்ணைக்கு வருவதால் பல ஆராய்ச்சிகள் செய்ய இயலுகிறது. 180 நாளில் விளையக் கூடிய சின்ன சொர்ணவாரி நெல், கடலை விதைகள் உற்பத்தியாகின்றன. பருத்தி சாகுபடி ஆராய்ச்சி நிகழ் கிறது. ஜப்பானிய முறையில் கேழ்வரகு பயிராகிறது.

வட்டக் கப்பல், வாழைக்கப்பல் முதலிய ஒவ்வொரு வகைப் புகையிலைக்கும் பலவகை ஆராய்ச்சி நடை பெறுகிறது. ஓரிடத்தில் கிணற்று நீரைப் பாய்ச்சி, ஒரு வகைப் புகையிலை பயிரிடுவர். பிறிதோரிடத்தில் பவானி கால்வாய்த் தண்ணீரை அதே வகைப் புகையிலைக்குப் பாய்ச்சுவர். இன்னும் ஓரிடத்தில் கால்வாய்த் தண்ணீ ரோடு உப்பு (ஏக்கருக்கு 112 பவுண்டு வீதம் பொடரிசிக்

சால்ட்), மாட்டுச்சாணம், அமோனியம் சல்பேட், கடலைப் பிண்ணுக்கு ஆகியவற்றைப் போட்டுப் பார்க்கிறார்கள்.

மழைக்காலத்தில் காற்றடித்து மலைகளிலிருந்து மண் சரிவதைத் தடுத்து, பயனற்ற நிலங்களை மீண்டும் விவசாயத்துக்கு ஏற்ற நிலமாக்குவது, விஞ்ஞான முறைப் படி கழிவு நீரைப் பேணுவது, பசுந்தழையைப் பயன் படுத்துவது, அவரைக்கு ஏற்படும் இலைப்புள்ளி நோயை யும் கத்திரிச்செடிக்கு ஏற்படும் அம்மை நோயையும் போக்குவது, பருத்தி-பருப்பு—புஞ்சை தானியங்கள் ஆகியவற்றை மாறிமாறி விதைத்துப் பார்ப்பது, தண்ணீர் இறங்கிக் கீழே சென்றுவிடும் தன்மையுடைய நிலங்களில் வேளாண்மை செய்வது போன்ற ஆராய்ச்சிகள் விவசாய ஆராய்ச்சி நிலையத்தில் செய்யப்படுகின்றன. இந்த நிலையம் 1-3-1955 இல் தொடங்கப்பெற்றது.

பாம்பும் மலேரியா நோயும் இங்கு மிகுதி. இவற்றைப் போக்க, அரசாங்கம் முயன்று வருகிறது. ஒரு சிறந்த நகர் உண்டாக்கவும் பல ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன. காற்றும் நீரும் காலி இடங்களும் ஏராள மான வீடுகளும் இருப்பதால் இங்கு இராணுவ அதிகாரி களின் மாநாடுகள், மாணவர் படையின் அணிவகுப்பு, லோக் சகாய சேனையின் பயிற்சி ஆகியவை நடைபெறு கின்றன.

அணைக்கட்டு வேலை நடைபெற்றபோது இங்கு இருந்த தொழிற்சாலை, இன்னும் இயங்கி வருகிறது. பிற அணைக்கட்டுகளுக்கு வேண்டும் மதகு மூடுகதவுகள் (Shutters) உத்தரங்கள் (Girders) இங்குதான் செய்யப் படுகின்றன. மின்சாரத் துறையினர்க்கு வேண்டும் கம்பங்களும் (Electric posts) இங்கு உருவாகின்றன.

கிராமிய விரிவுப்பணிப் பயிற்சி (Rural Extension Training Center) நிலையம் ஒன்றையும் இங்கு அரசாங்கத்

தார் நிறுவியுள்ளனர். கிராமங்களில் சேவகர்களாகப் பணி புரிய விரும்பும் இளைஞர்கள் – ஆடவரும் பெண்டிரும் – இங்கு படிக்கின்றனர். அவர்களுக்காக ஒரு சமுதாய மண்டபம் கட்டப்பட்டிருக்கிறது. மாணவர்களின் வாழ்க்கை கிராமப் பஞ்சாயத்துப் போல நடைபெறு கிறது. மாணவர்கள் வார்டுகளாகப் பிரிக்கப்பட்டு, ஒவ் வொரு வார்டில் உள்ளவர்களும் சில பொறுப்புக்களை ஏற்றுக் கொள்ளுகின்றனர். விவசாயம், கிராம வாழ்க்கை இவற்றோடு தொடர்புள்ள பாடங்கள் பின்னர்ப் பயன் படும் முறையில் இங்கே கற்பிக்கப்படுகின்றன.

மீன் ஆராய்ச்சி நிலையம் : சென்னை சேத்துப் பட்டிலிருந்து இது 1955-இல் பவானி சாகருக்கு மாற்றப்பட்டது. இந்த நிலையத்தார் 75 சதுர கி. மீ. பரப்புள்ள நீர்த் தேக்கத்தைப் பயன்படுத்தி மீன் செல் வத்தைப் பெருக்க முயன்று வருகின்றனர். இந்த ஆராய்ச்சிக்கு உறுதுணையாக ஆய்வுக்கூடம், பொருட் காட்சி நிலையமும், மீன்காட்சிக் கூடம், நூல் நிலையம், குளங்களில் மீன் வளர்ப்பது பற்றிச் சோதனைகள் செய்து பார்க்கும் மீன் பண்ணை ஆகியன உள்ளன. ஆய்வுக் கூடத்திலுள்ள படகில் சென்றால் பயனுள்ள செய்திகளை அறிந்து கொண்டு பொழுது போக்கலாம்.

பவானி சாகரத்தில் பர்கூர் காளைமாடு என்ற மாட்டு இனத்தையும் வளர்க்கிறார்கள். மலைப்பகுதிகளில் வளர் வதால் இவற்றின் கால் குளம்புகள் தேய்வதில்லை. நஞ்சை உழவுக்கும் கவலை இழுக்கவும் ஏற்ற இனம் பர்கூர் காளைகள்.

கோழிப்பண்ணை ஒன்றும் பவானி சாகரில் இருக் கிறது. அடைகாக்காத சிவப்புக்கோழிகள் (Rhode Island Variety) இங்கு உள்ளன. இவற்றின் முட்டைகள் குஞ்சு பொறிக்க 25 நயா பைசா வீதமும் சாப்பிட 12நயா

பைசா வீதமும் விற்கப்படுகின்றன. சாப்பிடுவதற்கு விற்கும் முட்டைகளில் குண்டூசியால் ஓட்டை போட்டுக் கொடுக்கிறார்கள்.

இங்குள்ள கோழிகளுக்குக் கடலைக்கொட்டை, சிறு தானியங்கள், மீன் எண்ணெய் (Codlivcr oil) ஆகிய வற்றை நாள்தோறும் ஊட்டுகிறார்கள். அவைகள் நல்ல உடற் கட்டோடு தளதளவென்று அழகாகக் காட்சி தரு கின்றன. அவற்றைக் கண்டு "நானும் ஒரு கோழியாகப் பிறக்கக் கொடுத்துவைக்கவில்லையே?" என்று எங்கள் காரோட்டி ஏங்கினார்.

## 31. அவிநாசி வட்டம்

### அவிநாசி

பாடல்பெற்ற தலத்தாலும் பணம் பல்கித்தரும் பஞ்சாலும் புகழ்பெற்றது அவிநாசி.

இவ்வூர் அவிநாசி வட்டத்தின் தலைநகராக இருந்து வருகிறது.

பெயர்க்காரணம்: அவிநாசி என்றால் விநாசம் இல்லாது இருப்பவர், என்று பொருள். அத்தகைய கடவுள் கோயில் கொண்டிருக்கும் இடம் இது.

தலப்பெருமை: கொங்குநாட்டில் தேவாரப் பதிகம் பெற்ற ஏழு தலங்களில் இதுவும் ஒன்று. மூன்றாண்டுகளுக்குள் முதலையால் விழுங்கப்பெற்ற ஒரு சிறுவனை, தேவாரம் பாடிச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் அழைப்பித்துத் தந்த அரிய நிகழ்ச்சி இந்த ஊரில் நடந்தது என்பர். முதலையுண்ட தாமரைக்குளம் இவ்வூரில் இருக்கிறது.

இத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் மூர்த்தி அவிநாசி ஈசுவரர் என்றும் அவிநாசி அப்பர் என்றும் அவிநாசி லிங்கம் என்றும் குறிப்பிடப்படுகிறார். இப்பெயர்கள் கோவைமாவட்டத்தில் பெரிதும் பரவியுள்ளன. தேவியாரின் பெயர் பெருங்கருணைநாயகி. இந்த அம்மனின் பெயராலேயே கருணைப்பாளையம் என்ற சிற்றூர் அமைந்திருக்கிறது.

அவிநாசிப்பெருமானைப்பற்றி திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள், மாணிக்கவாசகர், திருமூலர், சேக்கிழார் ஆகியோர் பாடியுள்ளனர். இவ்வூர்க்கோயிலில் 70 நாயன்மார்களின் உருவங்கள் செப்பில் செய்யப்பட்டிருக்கின்றன.

அவிநாசி அப்பரின் இரத உற்சவம் ஆண்டுதோறும் சித்திரை மாதத்தில் பெருஞ்சிறப்புடன் நடைபெறும். கொங்குநாட்டில் இவ்வூர்த் தேரைப் போலச் சிறந்த சித்திரவேலைப்பாடுடன் கூடிய தேர் வேறு எங்கும் இல்லை என்பர். மிகுதியான மக்கள் சேர்ந்து இழுத்தால் தான் இத்தேர் நகரும். திருவிழாவுக்கும் பிற நாட்களி லும் வருபவர்கள் தங்குவதற்கு இவ்வூரில் அன்னசத்திரங் களும் மடங்களும் உள்ளன.

ஊரின் அமைப்பு: ஓர் ஆற்றின் கரையில் அமைந்து, செந்நெல் வயல்களும் கரும்பும் வாழையும் விளையும் தோட்டங்கள் சூழ்ந்த ஊர் அவிநாசி. சென்னை-கோயம்புத்தூர் நெடுஞ்சாலையிலிருப்பதால் இவ்வூரில் சாலைப் போக்குவரத்து மிகுதி. இவ்வூருக்கு மிக அண்மையிலுள்ள இரயில் நிலையம் 10 கி. மீ. தொலைவி லுள்ள மங்கலம் என்பது.

பல உயர்நிலைப்பள்ளிகளும், ஓர் ஆதாரப் பயிற்சிப் பள்ளியும், கொட்டை நீக்கிப் பருத்தி அறைக்கும் தொழிற்சாலைகளும் இவ்வூரில் உள்ளன.

விவசாயமும் தொழிலும்: ஆற்றுப்பாசனம் இல்லா திருந்தும் இவ்வூரைச் சுற்றிய பகுதி வளமாக இருக் கிறது. அவிநாசிப் பருத்தி பெயர் பெற்றது; விலை கூடியது. பருத்தி வேளாண்மையால் பணம் நிறையக் கிடைப்பதால், இவ்வூரினர் தங்களுடைய சொந்தச் சாப்பாட்டுத் தேவைக்கு மட்டும் நெல் பயிரிட்டு எஞ்சிய நிலமெல்லாம் பருத்தியைப் பயிரிடுகின்றனர். கரும்பு வேளாண்மையும் உண்டு. வெல்லம் காய்ச்சும் தொழிலும் நடைபெறுகிறது.

**மேட்டுப்பாளையம்**

இது நீலகிரி மலையின் அடிவாரத்திலுள்ள சிறு நகரம். தென்பகுதி இரயில் போக்குவரத்தின் அகலப்

பாதைப் பிரிவில் இதுதான் கடைசி நிலையம். மலைப் பகுதியிலுள்ள குன்னூர், வெலிங்டன், உதகமண்டலம் முதலிய இடங்களுக்குச் செல்ல விரும்புவோர் இங்கிருந்து (குறுகிய அகலமுள்ள) மலை இரயிலில் செல்ல வேண்டும்.

இங்கிருந்து ஐந்து கிலோமீட்டர் தொலைவில் முயல், கவுதாரி, சிறுத்தை, புள்ளிமான் ஆகியவற்றைக் காணலாம்.

மேட்டுப்பாளையம், தண்ணீர் வசதிநிறைந்த ஊர். அதனால், தோல் பதனிடுதல் இங்கு ஒரு முக்கியமான தொழிலாக இருக்கிறது. கோயம்புத்தூரிலுள்ள பல நெசவாலைகளில் உற்பத்தியாகும் காடாத்துணிகளைச் சலவை செய்ய இங்கே கூட்டுறவு முறையில் தொழிற் சாலைகள் உள்ளன.

தண்ணீர் தட்டின்றிக் கிடைத்துங்கூட, இவ்வூரில் விவசாயம் செழிப்பாக இல்லை. நிலங்கள் மேடான பகுதியில் இருப்பதால் ஆற்றுநீரைப் பாசனத்திற்குப் பயன்படுத்த இயலுவதில்லையாம். மழையை நம்பியே விவசாயம் நடைபெற வேண்டியதிருக்கிறது. புகையிலை: பருத்தி வேளாண்மைகள் மிகுதியாக நடைபெறு கின்றன. இவ்வூரருகே பவானியின் மீது ஓர் அணை (Upper Bavani Dam) கட்டவேண்டுமென்ற கருத்து 1961-இல் பவானியில் ஏற்பட்ட வெள்ளத்துக்குப் பிறகு வலியுறுத்தப்பட்டு வருகிறது.

மாடு முதலிய உயிரினங்களின் எலும்பை நொறுக்கி உரமாக்கும் தொழில் இவ்வூரில் ஸ்டேன்ஸ் கம்பெனியா ராலும் பியர்ஸ் லெஸ்லி கம்பெனியாராலும் நடத்தப் படுகிறது.

போர்க்காலத்தில் படையினருக்கு அவ்வப்போது அனுப்புவதற்காக, உருளைக்கிழங்கு சீமைக்காய்கறிகள்

வெங்காயம் பூசணிக்காய் ஆகியவை கெட்டுப்போகாதவாறு அவற்றின்மீது ஒருவகைப் பொடியைத்தூவி நல்ல முறையில் தகரத்தில் அடைத்துவைத்திருந்து விற்பனை செய்யும் தொழில் (Dehydrated Foodstuff Industry) இவ்வூரில் ஏற்பட்டது.

பவானிசாகர் அணை, செயற்கை வைரத்தொழிற்சாலை, செயற்கைப் பட்டுக்கூழ்த் தொழிற்சாலை ஆகியவற்றால் 1957க்குப் பிறகு மேட்டுப்பாளையம் மேம்பட்ட நிலையை அடைந்திருக்கிறது. கடிகாரத் தொழிற்சாலை ஒன்றை நிறுவுவதற்கு ஏற்ற இடமென்று இவ்வூர் கருதப்படுகிறது.

நீலகிரிமலையின் விளைபொருள்கள் இவ்வூர்வழியாகத்தான் வெளியூர்களுக்குச் செல்லவேண்டும். எனவே கிடங்குகளும் லாரி போக்குவரத்தும் இவ்வூரில் மிகுதி.

பாக்குத்தோப்புகளும் உருளைக்கிழங்கு மண்டிகளும் ஏராளமாக இருப்பதால் இவ்வூரைச் சுற்றிலும் கூலியாட்களுக்குக் கிராக்கி மிகுதியாக இருக்கிறது.

**காரைமடை**

கொங்குநாட்டில் தனித்திருமால் கோயில்கள் சிலவே இருக்கின்றன. அவைகளில் முக்கியமானதொன்று காரைமடையிலுள்ள ரங்கநாதசாமி கோயில்.

இவ்வூர், சுற்றிலும் உள்ள மலைப் பள்ளத்தாக்குகளுக்கு நடுவே மேடான பாகத்தில் அமைத்திருக்கிறது. காரை மரங்கள் நிறைந்த காடுகளிடையே, நீர் நிலைகள் (மடைகள்) இருந்தமையால் காரைமடை என்ற பெயர் ஏற்பட்டதாகக் கூறுவர்.

இவ்வூர், கோயம்புத்தூருக்கு வடக்கே 18 மைல் (29 கி. மீ.) தொலைவில் உதகமண்டலத்திற்குச் செல்லும், சாலையிலிருக்கிறது. மக்கள் தொகை 10,000. இங்குள்ள

வைணவக் கோயிலில் மாசிமகத் திருவிழா பெரிய அளவில் நடைபெறுகிறது. 'சாமியாடி' என்ற வாழைப் பழத்தை மக்கள் வாங்கித் தின்னும் மூடபக்தியை அத் திருநாளில் காணலாம்.

அந்தத் திருவிழாவில் இழுக்கப்படும் தேரில் இராமா யணக்கதை சிற்பமாகச் செதுக்கப்பட்டிருக்கிறது. மீன் உருவங்கள் பொறிக்கப்பெற்ற படிகளுடைய தெப்பக் குளம் ஒன்று இவ்வூருக்கு அருகேயிருக்கிறது. ஊரை அடுத்த ஒரு பாதையில் திருமலை நாயக்கர் காலத்துக் கல்வெட்டுக் காணப்படுகின்றது. இவற்றிலிருந்து இந்த ஊர் பல நூற்றாண்டுகளாக மதுரை அரசர்களின் செல் வாக்குக்கு உட்பட்டு இருந்து வந்ததென நினைக்க இடமுண்டு. இவ்வூர் அருகே திப்புசுல்தான் கட்டிய மண் கோட்டையின் சிதைவுகளும் பல பாறைகளும் உள்ளன.

ஊதுபத்தித் தொழிற்சாலையும், வாட்டில் பார்க் மரப் பட்டை சேமித்து வைத்திருக்கும் நிலையங்களும் இவ் வூரில் உள்ளன. பழங்காலத்துச் சவக்குழிகள் இவ்வூரில் கண்டு பிடிக்கப்பட்டிருக்கின்றன. குந்தா மின்சாரத் திட்ட வேலை தொடங்கியதிலிருந்து இவ்வூரின் முக்கியத் துவம் பெருகியிருக்கிறது.

நீலகிரி மாவட்டத்திலுள்ள தோட்டத் தொழி லாளருக்கு வேண்டும் பொருள்கள் இங்கிருந்து செல்லு வதாலும், அந்தத்தோட்டங்களின் உற்பத்திப் பொருள் கள் இங்கு வருவதாலும், காரைமடையில் 'லாரி' போக்கு வரத்து மிகுதி.

இங்கிலிருந்து 28 கி. மீ. தொலைவில் இந்தியாவி லுள்ள கனேடியத் தூதுவர் பெயரால் அமைந்த 'ரன்னிங் டவுன்' என்னும் ஊர் இருக்கிறது.

## தோகை மலை

காரைமடைக்கு அருகே இந்த மலை இருக்கிறது. அழகிய தோகைகள் கொண்ட மயில்கள் இருந்ததால், இம்மலை தோகைமலை எனப் பெயர்பெற்றது. இம்மலையின்மீது ஒரு சிறு கோயில் இருக்கிறது.

திருச்சி மாவட்டத்திலும் ஒரு தோகைமலை உண்டு.

## அன்னூர்

இவ்வூர் அவிநாசி - சத்தியமங்கலம் சாலையில் இருக்கிறது.

இவ்வூருக்கு மன்னியூர், அன்னியூர், அன்னூர் என்ற பெயர்கள் வழங்குகின்றன. இங்குள்ள கோயிலுக்கு "மன்னீசுவரர் கோயில் தலபுராணம்" உண்டு. இது, கல்வெட்டுக்களுள்ள பழமையான சிவன்கோயில். சங்க நூல்களில் கூறப்படும் அன்னி என்ற புலவர் இவ்வூரிலேயே வாழ்ந்தார் என்பர். இங்கு முக்கிய விளைபொருள்கள் கரும்பு நெல் புகையிலை ஆகியவை. சுற்றுப்புற ஊர்களுக்கு இவ்வூர்ச் சந்தை பெரிதும் பயன்படுகிறது.

## 32. பவானி வட்டம்

1860 வரை, இது ஆண்டியூர் வட்டம் என்ற பெயரில் இருந்து வந்தது.

### பவானி

ஈரோடு நகரிலிருந்து 16 கி. மீ. தொலைவிலுள்ள பவானி, வான் பொய்ப்பினும் தான் பொய்யாக் காவிரிக் கரையில் அமைந்து, ஊரைச்சுற்றிலும் வாய்க்கால்கள் இருப்பதால் வளமும் வாழ்வும் பெற்று இலங்குகிறது. காவிரிக் கரையில் கணக்கற்ற சிற்றூர்களும் பேரூர்களும் இருப்பினும், பவானி ஒன்றிலேயே ஊரெங்கும் படித் துறைகள் உள்ளன. காவிரியின் மறுகரையில் சேலம் மாவட்டம் தொடங்குவதால், பவானி கோவை மாவட் டத்தின் எல்லையாகவும் இருந்து வருகிறது.

சம்பந்தர் தேவாரம், அருணகிரிநாதர் திருப்புகழ், வேதநாயகி பிள்ளைத் தமிழ், பவானிகூடற் புராணம் ஆகிய பழமைப் பெருமைகளோடு, திருநணைச் சிலேடை வெண்பா (புலவர் குழந்தை ஆக்கியது) என்ற புதுமைச் சிறப்பும் உடைய தலம் பவானி.

காவிரி பவானி ஆகிய இரண்டு ஆறுகளும் இவ்வூரில் கூடுகின்றன. அமுத நதி என்ற மூன்றுவது ஆறும் அவற் றுடன் கலப்பதாக நெடுங்காலமாக இப்பகுதி வாழ்நர் நம்பிவருகின்றனர். இவ்வாறு மூன்றுறுகள் கூடும் "திரி வேணி சங்கமம்" ஆக இருப்பதால், இவ்வூருக்கு, "திருமுக் கூடல்" என்றும் பெயர் உண்டு.

இத் தலத்துக்கு வந்து இங்கே கோயில் கொண் டுள்ள சிவபெருமானை வழிபடுவோர்க்குத் "தீங்கு நண்ணாத நல்ல தலம்" என்ற கருத்தில் "திரு நணா"

என்ற பெயர் இவ்வூருக்கு ஏற்பட்டிருக்கிறது. "திருநணா" என்ற பெயர் தேவாரத்தில் ஆளப்பட்டிருக்கிறது; கல்வெட்டிலும் காணப்படுகிறது. நண்பகல் என்ற சொற்றொடரில் போல, திருநணா என்பதிலும் "நண்" என்பது நடு என்ற பொருளையுடையது. இரண்டு ஆறுகளுக்கு இடையே அல்லது நடுவே அமைந்தமையால், இங்குள்ள சிவபெருமானுக்கு, "திருநணாதர்", "நட்டாற்றீசர்", "சங்கமேசுவரர்" என்ற பெயர்கள் உண்டு. நணா என்பது தலமரத்தின் பெயராக இருக்கக்கூடும். பவானிக்கு இரண்டுமைல் வடக்கேயுள்ள ஊராட்சிக் கோட்டைமலை, எவரும்எளிதில் ஏற இயலாதவாறு செங்குத்தாக அமைந்திருப்பதால், "நாணிணாமலை" (நண்ணா - நண்ண முடியாத)என்று பெயர் பெற்றது. அதனால், அதன் அடிவாரத்திலுள்ள ஊர் "நண்ணாவூர்", "திருநணா" என்று வழங்கிற்று என்பர்.

சங்கமேசுவரம் என்று இப்போது வடமொழியாளர் வன்மையாக வழங்குவதை "கூடுதுறை" என்றே இவ்வூர் மக்கள் குறிப்பிட்டு வருகின்றனர். கூடுதுறையில், சிறுவர்களும் பெண்டிருங்கூட அச்சமின்றி நீராடுவதற்கேற்ப, கரையோரச் சுவர்களும்படிக்கட்டுகளும் அரசாங்கத்தாரால் கட்டப்பட்டிருக்கின்றன. மலையாள நாட்டிலிருந்தும் வட இந்தியாவிலிருந்தும் இங்கே நீராட வரும் மக்கள் தொகை மிகுதியானதாகும். ஆடி பதினெட்டிலும், கிரகண நாட்களிலும் திரளான மக்கள் வருகின்றனர்.

வானி கூடல் என்ற பெயரும் இவ்வூருக்கு உண்டு. இது, பவானி கூடல் என்று மருவி இப்போது பவானி என்று சுருங்கிவிட்டது. "பவானி கூடல்" என்ற பெயர் இங்குள்ள அர்பன் பாங்கு, இரயில்வே அவுட் ஏஜன்சி ஆகிய இரண்டிலும் வழங்கிவருகிறது. வாணி என்னும்

சொல், கோவை நகரையடுத்துள்ள சிறுவாணி என்னும் ஆற்றின் பெயரில் இருப்பதும் கீழ் வாணி, மேல் வாணி என்னும் இரு ஊர்கள் பவானி நகரிலிருந்து 19 கி. மீ. தொலைவில் ஆற்றின் கீழ்க்கரையிலும் மேல் கரையிலும் இருப்பதும் குறிப்பிடத்தக்கன.

இவ்வூரைச் சுற்றி சங்ககிரி, திருச்செங்கோட்டு மலை, பெருமாள்மலை என்னும் மங்கலகிரி, ஊராட்சிக் கோட்டைமலை, பத்மகிரி ஆகிய ஐந்து மலைகள் உள்ளன.

ஊராட்சிக் கோட்டைமலை 150 மீட்டர் உயரமானது. சோலைநிறைந்த அடிவாரத்தில் குகை ஒன்றினைத் தாண்டி நான்கு கிலோ மீட்டர் தொலைவுள்ள மலைப்பாதையில் சென்றால் சுனைகளையும் பெருமாள் வடிவத்தையும் காணலாம். சிறு தொலைவுக்கு "ஏட்டியும் சாட்டியுமான" படிகளும் அதன்பிறகு "மேடு பள்ளமான பாதை"யும் உண்டு.

மலையைச்சுற்றித் தேர் ஓடியதாகவும், மலைமீது ஒரு கோட்டை இருந்ததாகவும், ஒன்பதாம் நூற்றாண்டு முதல் 16–ஆம் நூற்றாண்டுவரை இப்பகுதியின் வரலாற்றில் பொற்காலமாக இருந்ததாகவும் கூறுவர். அக்காலத்தில், கட்டி முதலியார்கள் இப்பகுதியை ஆண்டனர்.

கொங்குநாட்டுச் சிற்றரசர்களாகவும் பெருவள்ளல்களாகவும் திகழ்ந்தவர்கள் கட்டி முதலியார்கள். அவர்கள் கி. பி. 880 முதல் 1642வரை பெரும்புகழுடன் ஆட்சி செலுத்தினர். அவர்களுடைய பெருமையைப் பறை சாற்றும் சின்னங்களாக இருப்பன இரண்டு – ஊராட்சிக் கோட்டைமலையும், சங்கமேசுவரர் கோயிலும். மலையிலிருந்து கோயிலுக்கும் கூடுதுறைக்கும் செல்ல அவர்கள் தரைக்குக் கீழே தனிப்பாதை அமைத்திருந்தனர். எதிரி

களிடமிருந்து தங்களைக் காத்துக்கொள்ளவும் தங்கள் நகைகளைப் பேணிவைத்திருக்கவும் குகைகளை ஏற்படுத்திக் கொண்டிருந்தனர்.

கட்டி முதலியார் கெட்டியாகவும் அழுத்தமாகவும் கருங்கல்லில் ஓராயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்க் கட்டிய சங்கமேசுவரர் கோயிலில், அவருடைய திருவுருவம் ஒரு தூணில் காணப்படுகிறது. காலப்போக்கில் வெள்ளத்தின் கொடுமையாலும் தேடுவாரின்மையாலும் இக் கோயிலின் பெரும்பகுதி சீர்குலைந்து உத்தரங்கள் ஒடிந்தும் சுவர்கள் சாய்ந்தும் வெடித்தும் விட்டன. கோயில் முழுவதையும் பிரித்து, ஏழு லட்சம் ரூபாய்ச் செலவில் புதுக்கஅமைத்து அழகிய வேலைப்பாடுகளுடன் திருப்பணி செய்யும் வேலை 1959இல் தொடங்கியிருக்கிறது.

இக்கோயிலுள் ஆதிகேசவப்பெருமாள் சந்நிதியும் உண்டு. 300 ஆண்டுகளுக்குமுன் இக்கோயிலுக்கு வந்துவழிபட்ட மைசூர் மன்னர் ஒருவர் நிறுவிய வேணு கோபாலர், நரசிம்மர் ஆகிய மூர்த்திகளின் அழகுப் பிழம்புகள் உள்ளன.

இவ்வூர் 18–ஆம் நூற்றுண்டில் கோயம்புத்தூர், சேலம் ஆகிய இரண்டு மாவட்டங்களுக்கும் தலைநகராக இருந்தது. அப்போது வில்லியம் காரோ (William Garrow) என்பவர் கலெக்டராக இருந்தார். வெள்ளையராக இருந்த காரணத்தால் (ஆட்சியாளராக இருந்த அவரைக்கூட) அக்காலத்தினர் கோயிலுக்குள் செல்ல அவரைவிடவில்லை. ஆனல், அவருக்கோ அங்குள்ள வேதநாயகி அம்பிகையை வழிபட வேண்டுமென்ற ஆர்வம் மிக்கிருந்தது. அதன் விளைவாக, அம்பிகையின் சந்நிதிக்கு நேரே அம்மையின் உருவம் அவருக்குத் தெரியும்படியாகத் திருமதிலில் துளைகள் போடப்பட்டன. அதைப்பார்த்த துரையின்

உள்ளம் உருகியது. ஒருநாள், அவர் உறங்கிக் கொண்டிருந்தபோது அங்கிருந்து வெளியே எழுந்து செல்லும்படி அம்பிகை அவரிடம் வந்து கூறியதாக அவருக்கு ஒரு கனவு ஏற்பட்டது. உடனே அவர் அக்கட்டிடத்தினின்றும் வெளியேறியபோது அவர் படுத்திருந்த இடத்தின் மேலிருந்த விட்டம் ஒடிந்துவிழ, மேல்கூரை இடிந்தது. அம்பிகையின் அருளாலேயே தாம் உயிர் தப்பியதாக எண்ணி, கலெக்டர்துரை தந்தத்தால் ஒரு கட்டில் செய்து அதை இக்கோயிலுக்கு அன்பளித்துள்ளார். அவர் பெயர் இக் கட்டிலில் தமிழிலும் ஆங்கிலத்திலும் பொறிக்கப்பட்டிருக்கிறது; அவர் அதை வழங்கிய நாள் 1804 சனவரி 11 என்பதும் கட்டிலிலிருந்து தெரிகிறது. கோயிலின் பள்ளியறையில் இக் கட்டிலை இன்றுங்காணலாம்.

பவானியில் வாழும் மக்களில் கன்னடமொழி பேசும் பிராமணர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். விசயநகர அரசர்களும் மைசூர் அரசர்களும் தங்கள் ஆட்சிக் காலங்களில் இவர்களுக்குக் காவிரிக்கரையில் நிலம் வழங்கினர் என்றும், அதனுல் இவர்கள் கன்னட நாட்டிலிருந்து இங்குவந்து புதுக்குடியிருப்புக்களை உண்டாக்கிக் கொண்டனர் என்றுங் கூறுவர்.

காளிங்கராயன் வர்ய்க்கால் ஓரத்திலுள்ள நிலங்கள் மூன்றுபோகம் விளைகின்றன. அவற்றின் விலை ஏக்கர் ஒன்றுக்கு ஆருயிரம் முதல் பத்தாயிரம் வரையில் ஆகும். 1955 முதல் இவ்வூர் அருகே மேட்டூர்க் கால்வாயும் செல்லுகிறது.

வேளாண்மைக்கு அடுத்தபடி இவ்வூரில் சிறந்து விளங்கும் தொழில் சமுக்காள நெசவு. தண்ணீர் வசதியும் தறிபோட விசாலமான இடமும், சாயம் போடுவதிலும் தறி நெசவிலும் பயிற்சிபெற்ற தொழிலாளர்களும்

இருப்பதால் இவ்வூர் இத்தொழிலில் முன்னேறியிருக்கிறது. தேவாங்கச் செட்டியார்கள், கைக்கோளர்கள்: செங்குந்த முதலியார்கள் ஆகியோர் இத் தொழிலில் ஈடுபட்டிருக்கின்றனர். இவர்கள் இரண்டு பெரிய தொழிற்சாலைகளையும் 75 சிறு தொழிற்சாலைகளையும் நடத்தி வருகின்றனர்.

பவானி சமுக்காளங்கள் வேலைப்பாடு மிக்கவை. அவற்றை நெய்வதற்குத் தனிப்பயிற்சி வேண்டும். எந்தெந்தப் பகுதியில் எத்தகைய வண்ணத்தைத் தீட்டலாம் என்பதைக்காட்டும் ஒரு படத்தை வைத்துக் கொண்டு கரை அழகும் கண்கவர் தோற்றமும் உள்ள சமுக்காளங்களை உரிய இடங்களில் "சாக்" கட்டியினால் சில வடிவங்களில் ஊடை நூலில் வரைந்துகொள்வார்கள். நெய்துமுடிந்த சமுக்காளத்தின் இரு புறத்தையும் ஒரே தோற்றமாக இருக்குமாறு அமைப்பார்கள். இந்தியாவின் பல பகுதிகளிலும், இலங்கை பர்மா மலாயா ஆகிய நாடுகளிலும் பவானி சமுக்காளங்கள் விற்பனையாகின்றன. பிற நாடுகளுக்கு, பவானி சமுக்காளம் பம்பாய் வணிகர் வாயிலாகச் செல்லுகிறது. பவானி சமுக்காள வணிகரின் ஆட்கள் தென்னிந்தியாவெங்கும் சென்று பொதுமக்களைக் குடைந்து "ஆர்டர்" வாங்குகிறார்கள்; அவற்றுக்குரிய சமுக்காளங்கள் அஞ்சல்வழியே பார்சலில் அனுப்பப் படுகின்றன.

பவானியின் பிற தொழில்களாவன – மெத்தை விரிப்புச் செய்தல், விளக்குத்திரி செய்தல், இரும்புத்தகடுகளும் சன்னல் கம்பி வலைகளும் செய்தல்.

1961-இல் பவானியின் மக்கள்தொகை 22,000 ஆக இருந்தது. 1961 ஜூலையில் காவிரியில் ஏற்பட்ட பெரு வெள்ளத்தால் இவ்வூர் மக்கள் அனைவரும் சில நாட்களுக்கு ஊரைக் காலிசெய்ய நேர்ந்தது. அவர்கள்

எல்லோரும் இங்கிருந்து 7 கி. மீ. மேற்கேயுள்ள சித்தோடுக்கு அரசாங்கத்தாரால் கொண்டுப்போகப்பட்டனர்.

பவானி வட்டத்திலுள்ள கவுந்தப்பாடியில் 20 ஆம் நம்பர் நூலில் பல கைத்தறித்துணிகள் நெய்யப்படுகின்றன; இவ்வூரில் சர்க்கரை ஆலை ஒன்று அமைக்கப்பட்டு வருகிறது.

பவானியிலிருந்து 32 கி. மீ. தொலைவிலுள்ள பருகூர் காட்டில் கரடி, புலி, யானை ஆகிய உயிரினங்கள் மிகுதியாக உள்ளன. விறகும் தேனும் கிடைக்கின்றன.

# 33. பிற்சேர்க்கை

## சில புள்ளி விவரங்கள்

### மாவட்டத்தின் இருப்பிடம்

76°39', 77°56' கிழக்கு நெடுக்கைக்கும்
10°12', 12°20' வடக்குக் குறுக்கைக்கும்
இடையே அமைந்துள்ளது.

### மாவட்டத்தின் எல்லைகள்

வடக்கே—மைசூர் இராச்சியம், சேலம் மாவட்டம்
கிழக்கே—சேலம், திருச்சி மாவட்டங்கள்
தெற்கே—மதுரை மாவட்டம், கேரள இராச்சியம்
மேற்கே—நீலகிரி மாவட்டம், மைசூர், கேரள இராச்சியங்கள்

### பரப்பளவு

மாவட்டம்—6014 சதுர மைல் (15,395 சதுர கி. மீ.)
கோயம்புத்தூர் நகரம் — 25 சதுர கி. மீ.

**மக்கள் தொகை**

| | | |
|---|---|---|
| மாவட்டம் — | 1951 | 31,54,296 |
| | 1961 | 35,41,401 |
| (ஆடவர்...... | | 18,02,585 |
| பெண்டிர்...... | | 17,38,816 |

மக்கள் நெருக்கடி சதுரமைலுக்கு சராசரி 500

**கோயம்புத்தூர் நகரம்**

| | | | |
|---|---|---|---|
| 1800 | 15,000 | 1941 | 1,30,353 |
| 1866 | 24,241 | 1951 | 1,97,755 |
| 1931 | 95,198 | 1960 | 2,66,208 |

**சராசரி மழை**

மாவட்டத்தில் 694 மில்லிமீட்டர் (33.61 " )
கோவை நகரில் 596 மில்லிமீட்டர் (23.23 " )

## ஆட்சித்துறைப் பிரிவுகள்

### அபிவிருத்தி மாவட்டங்கள்

சமுதாய நலத்திட்டங்களை நிறைவேற்றவும், மாவட்டக் கழகங்களின் பொறுப்புக்களை ஏற்கவும், தொகுப்பான கிராமங்களுக்குச் சில அதிகாரங்களை வழங்கவும் அரசாங்கத்தார் தமிழ் நாட்டை 375 வட்டாரங்களாகப் பிரித்துள்ளனர். இவற்றுள் 20 வட்டாரங்கள் கொண்டது கிழக்குக் கோயம்புத்தூர் அபிவிருத்தி மாவட்டம்; 21 வட்டாரங்கள் கொண்டது மேற்குக் கோயம்புத்தூர் மாவட்டம். ஒவ்வொரு வட்டாரத்திலும் ஏறத்தாழ 75,000 மக்கள் வாழ்கின்றனர்.

### கிழக்குக் கோயம்புத்தூர் அபிவிருத்தி மாவட்டம்

| வட்டம் | வட்டாரங்கள் |
|---|---|
| கோபிச்செட்டி பாளையம் | 1. பவானி சாகர் |
| | 2. நம்பியூர் |
| | 3. சத்தியமங்கலம் |

| | |
|---|---|
| | 4. கோபிச்செட்டி பாளையம் |
| | 5. துக்கநாயக்கன்பாளையம் |
| | 6. தாளவாடி |
| பவானி | 7. ஆண்டியூர் |
| | 8. பவானி |
| | 9. அம்மாபேட்டை |
| தாராபுரம் | 10. தாராபுரம் |
| | 11. கண்டடம் |
| | 12. மூலனூர் |
| | 13. காங்கேயம் |
| | 14. வெள்ளக் கோயில் |
| ஈரோடு | 15. பெருந்துறை—1 |
| | 16. ஊத்துக்குழி |
| | 17. ஈரோடு |
| | 18. கொடுமுடி |
| | 19. மொட்டக் குறிச்சி |
| | 20. பெருந்துறை-2 |

## மேற்குக் கோயம்புத்தூர் அபிவிருத்தி மாவட்டம்

| | |
|---|---|
| கோயம்புத்தூர் | 1. பேரூர் |
| | 2. சிங்கா நல்லூர் |
| | 3. சர்க்கார் சமக்குளம் |
| | 4. பெரிய நாயக்கன் பாளையம் |
| | 5. தொண்டா முத்தூர் |
| | 6. மதுக்கரை |
| அவினசி | 7. அவினசி |
| | 8. அன்னூர் |
| | 9. காரைமடை |

| | |
|---|---|
| பொள்ளாச்சி | 10. பொள்ளாச்சி |
| | 11. ஆனைமலை |
| | 12. வால் பாறை |
| | 13. கிணத்துக் கடவு |
| திருப்பூர் | 14. சூலூர் |
| | 15. பல்லடம் |
| | 16. லெட்சுமிநாயக்கன்பாளையம் |
| | 17. திருப்பூர் |
| | 18. பொங்கலூர் |
| உடுமலைப் பேட்டை | 19. மடத்துக்குளம் |
| | 20. குடி மங்கலம் |
| | 21. உடுமலைப் பேட்டை |

| ரெவின்யூ டிவிசன் (கோட்டம்) | அதைச் சேர்ந்த வட்டங்கள் |
|---|---|
| கோயம்புத்தூர் | கோயம்புத்தூர், அவிநாசி. |
| பொள்ளாச்சி | பொள்ளாச்சி, பல்லடம், உடுமலைப் பேட்டை. |
| ஈரோடு | ஈரோடு, தாராபுரம். |
| கோபிச்செட்டி பாளையம் | கோபிச்செட்டிபாளையம், பவானி. |

| வட்டங்கள் | பரப்பளவு சதுர மைல் | மக்கள் தொகை (1951) |
|---|---|---|
| 1. கோயம்புத்தூர் | 528 | 5,62,522 |
| 2. பொள்ளாச்சி | 709 | 3,84,677 |
| 3. உடுமலைப்பேட்டை | 555 | 1,90,442 |
| 4. பல்லடம் | 585 | 3,51,734 |
| 5. தாராபுரம் | 854 | 3,23,307 |
| 6. ஈரோடு | 599 | 4,39,641 |

| | | |
|---|---|---|
| 7. கோபிச்செட்டிபாளையம் | 1,129 | 3,94,267 |
| 8. அவினசி | 493 | 2,72,536 |
| 9. பவானி | 572 | 2,35,170 |

## நகராண்மைக் கழகங்கள்

**செலக்சன் கிரேடு**

1. கோயம்புத்தூர்

**முதல் தரம்**

2. ஈரோடு
3. பொள்ளாச்சி
4. திருப்பூர்

**இரண்டாம் தரம்**

இம் மாவட்டத்தில் இரண்டாம் தர நகராண்மைக் கழகம் ஒன்றுமில்லை.

**மூன்ரும் தரம்**

5. உடுமலைப்பேட்டை
6. கோபிச்செட்டிப்பாளையம்
7. தாராபுரம்
8. மேட்டுப்பாளையம்

**டவுன் ஷிப்**

9. பவானிசாகர்.

**நகராண்மைக் கழகமாக இருந்து ஊராட்சி மன்றமாகிய ஊர்:**

குறிச்சி (1–10–1960)

## பாராளுமன்றத் தொகுதிகள் (3)

1. கோயம்புத்தூர்
2. கோபிச்செட்டி பாளையம்
3. பொள்ளாச்சி

## சட்டசபைத் தொகுதிகள் (21)

1. அவிளுசி
2. சென்னிமலை
3. திருப்பூர்
4. தாராபுரம்
5. ஈரோடு
6. கோபிச்செட்டிபாளையம்
7. காங்கேயம்
8. கோயில் பாளையம்
9. மேட்டுப்பாளையம்
10. உடுமலைப்பேட்டை
11. நம்பியூர்
12. சூலூர்
13. பல்லடம்
14. பெருந்துறை
15. கோயம்புத்தூர் – 1.

16/17 கோயம்புத்தூர் – 2
18/19 பவானி
20/21 பொள்ளாச்சி
} இம்மூன்றும் இரட்டை உறுப்பினர் தொகுதிகள்

## கோவை மாவட்டத்தில் தொடங்க இயலுமென பொருளாதார நிபுணர்கள் தெரிவித்துள்ள தொழில்கள்

**கோயம்புத்தூரில்**

Pig Iron
Grey Iron Castings
Ball and Roller Bearings
Bolts, Nuts, Rivets
Shot Chiselled Iron

Tea Processing Machinery
Power Station Equipment
Machine Tools
Diesel Engines
Handmade Paper from Textile Mill Waste
Cellulose Acetate
Cotton Seed oil
Caffeine

பவானி சாகரில்

Rayon Pulp
Paper Pulp

ஆதாரம்-Techno Economic Survey of Madras State: Nationa. Council for Applied Economics Research

| ஆறுகள் | அவற்றால் பயனடையும் வட்டங்கள் |
|---|---|
| *காவிரி* | *பவானி, ஈரோடு* |
| *பவானி* | *அவிநாசி, கோபிச் செட்டிபாளையம், பவானி, ஈரோடு.* |
| *அமராவதி* | *உடுமலைப்பேட்டை, தாராபுரம்* |
| *நொய்யல்* | *கோயம்புத்தூர், பல்லடம், தாராபுரம்* |
| *ஆளியாறு* | *பொள்ளாச்சி.* |

நீர்ப்பாசனத்திட்டங்கள்

| பெயர் | ஆண்டு | செலவு | பயனடைந்த நிலப்பரப்பு ஏக்கர் |
|---|---|---|---|
| *காளிங்கராயன் அணைக்கட்டு* | *1893* | *ரூ. 1,80,000* | *14,000* |
| *கொடிவேர் அணைக்கட்டு வாய்க்கால்கள்* | *1893* | *ரூ. 3,00,000* | *20,000* |
| *கீழ்பவானி அணை* | *1955* | *ரூ. 10½ கோடி* | *2,00,000* |

| | | | |
|---|---|---|---|
| அமராவதி அணை | 1958 | ரூ. 3½ கோடி | 32,000 |
| மேட்டூர்க்கால்வாய்த் திட்டங்கள் | 1959 | — | 11,000 |
| பரம்பிக்குளம் திட்டத்து அணைகள் | 1963 | | 3,00,000 |

## கோவை மாநகரத்து அஞ்சல் எண்கள்*

| | | |
|---|---|---|
| கோயம்புத்தூர் தலைமை அஞ்சலகம் | கோயம்புத்தூர் | 1 |
| இரத்தின சபாபதிபுரம் (ஆர்.எஸ்.புரம்) | ,, ... | 2 |
| லாலி ரோடு | ,, ... | 3 |
| பூளைமேடு | ,, ... | 4 |
| சிங்காநல்லூர் ... ... | ,, ... ... | 5 |
| கணபதி | ,, ... | 6 |
| கரும்பு ஆராய்ச்சி நிலையம் | ,, ... | 7 |
| குணியமுத்தூர் | ,, ... | 8 |
| ராம்நகர் ... ... | ,, ... ... | 9 |
| பேரூர் | ,, ... | 10 |
| சாய்பாபா மிசன் | ,, ... | 11 |
| டாடாபாத் | ,, ... | 12 |

### பாடல் பெற்ற தலங்கள்:

'திரு முருகன் பூண்டியொடு திருநல் அவி நாசி
திருநணாவுங் கொடுமுடியும் திருச்செங்கோடிவைகள்
கருவுரு வா நிலைவெஞ்சன் கூடலிவை ஏழும்
கவின் பேரூர் முதல் வைப்புத்தளி நகர்கள் எமதே'

என்று குறமகளிர் பாடுவதாகக் கொங்கு நாட்டுத் தலங்களைப் பற்றி சி. எம். இராமசந்திரன் செட்டியார் ஒரு பாடலை இயற்றியுள்ளார்.

* தெரிவித்தவர் : Senior Superintendent of Post Offices Nilgris Division, Coimbatore 2.

**தாண்டவச் சிறப்புள்ள தலங்கள் :**

| | | |
|---|---|---|
| தில்லைச் சித்திரக்கூடம், பேரூர் | | ஆனந்த தாண்டவம் |
| திருமுருகன் பூண்டி | — | பிரம்ம தாண்டவம் |

**திருப்புகழ் பெற்ற தலங்கள் :**

பேரூர்
விசயமங்கலம்
விசயபுரம் (திருப்பூர் அருகே)

**வைப்புத் தலங்கள்:**

| | | |
|---|---|---|
| சேவூர் (அவிநாசி வட்டம்) | | (சுந்தரர் தேவாரம்) |
| மொக்கணீச்சுரம் | ,, | (திருவாசகம்) |

## குறிப்பிடத்தக்க அம்மன் கோயில்கள்

| | | |
|---|---|---|
| கோவை | — | கோணியம்மன் |
| ஈரோடு, சிக்கரசன் பாளையம், ஊஞ்சலூர் கருவலூர் (அவிநாசி வட்டம்) | — | மாரியம்மன் |
| பேரூர், மஞ்சக்கோல நல்லி, பாரியூர் | — | காளியம்மன் |
| மதுக்கரை | — | சல்லாண்டியம்மன் |

## மசூதிகள்

அத்தர் ஜமத் மசூதி, ஒப்பணைக்காரத்தெரு, கோவை
ஹஜரத் ஜமேஷா ஔலியாக தர்கா, கோயம்புத்தூர்
சத்திய மங்கலத்திலுள்ள மசூதி.

## கிறித்தவக் கோயில்கள்

**கத்தோலிக்கர்.**

தூய மைக்கேல் சவேரியார் கோயில்,
பெரிய கடைத்தெரு, கொயம்புத்தூர்
தாராபுரத்திலுள்ள தேவாலயம்

**பிராடஸ்டண்டுகள்**

இங்கிலீஷ் சர்ச்சு, பந்தய மைதானம்
கோயம்புத்தூர்
தூய மார்தோமா சர்ச்சு, பாம்குரோவ்சாலை
கோயம்புத்தூர்
அருள்புரம் (திருப்பூருக்கு அருகே)

## சமணர் கோயில்கள்

ஸ்ரீ ஸ்வேதாம்பர விமலநாத ஜைன கோயில், கோவை.
நெட்டக் கோபுரம், விஜயமங்கலம், ஈரோடு வட்டம்.

| தலம் | சுவாமி அம்மன் | பாடியோர் | இரயில்நிலையம் | தலச்சிறப்பு |
|---|---|---|---|---|
| அவிநாசி | அவிநாசியீசுவரர் கருணாம்பிகை. | சுந்தரர் | திருப்பூர் | சுந்தரர் முதலை வாயி னின்றும் அந்தணப் பிள்ளையை மீட்ட தலம். |
| திருநணா (பவானி) | சங்கமுகநாதேசு வரர், வேதாம் பிகை. | சம்பந்தர் | ஈரோடு | குபேரன், விசுவாமித்தி ரர், பராசரர் முதலி யோர் வழிபட்ட தலம். ஆதிகேசவப் பெருமாள் சந்நிதி இருக்கிறது. |
| திருப்பாண்டிக் கொடுமுடி. | கொடுமுடிநாதர் பண்மொழி நாயகி. | சம்பந்தர், அப்பர், சுந்தரர் | கொடுமுடி | சுந்தரர் நமச்சிவாயத் திருப்பதிகம் பாடி யருளிய தலம். ஸ்ரீ ரங்கநாதர் சந்நிதி இருக்கிறது. |
| திருமுருகன் பூண்டி | முருகநாதேசுவரர் முயன்குபூண்முலை யம்மை. | சுந்தரர் | திருப்பூர் | சுந்தரருக்கு இறை வன் இருக்குமிடத் தைக் காண்பித்த கூப்பிடு பிள்ளையார் சிறு தொலைவில் இருக்கிறார், |

## குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகள்

*1768* ஹைதர் அலி கோவை நகரத்தைப் படையெடுத்தார்.

*1779* பிரிட்டிஷாருக்கும் ஹைதருக்கும் போர் நடைபெற்றது.

*1784* கோயம்புத்தூரின் பெயரை 'சலாம்–ஆ-பாத்' என்று திப்புசுல்தான் மாற்றினார்.

*1799* திப்பு சுல்தானின் தோல்வி; ஆங்கில ஆதிக்கம் ஆரம்பம்.

*1800* கோயம்புத்தூர் மாவட்டம் அமைக்கப்பட்டது. காவிரிக்குத் தெற்கேயும் மேற்கேயும் உள்ள பகுதிகள் கோவை மாவட்டத்தில் சேர்க்கப் பெற்றன.

*1805* கோயம்புத்தூரில் மாவட்ட அலுவலகங்கள் ஏற்பட்டன*

*1810* கோயம்புத்தூரில் குதிரைப் பந்தய மைதானம் ஏற்பட்டது.

*1819* முதல் தடவையாகக் கோவை மாவட்டத்தில் பருத்தி பயிரிடப்பெற்றது.

*1830* 'வின்செண்ட்' திரைப்பட மாளிகை ஏற்பட்டது.

*1834* பவானி ஆற்றின்மீது ஓர் அணையை (நீலகிரி மாவட்டத்தில்) கட்டலாமென்று சர் அர்தர் காட்டன் யோசனை கூறினார்.

---

* அன்றைய கோயம்புத்தூரில் வைசிய தெரு, ரங்கை, கவுண்டர் தெரு, ராஜா தெரு, சுக்ரவார்ப்பேட்டை, ஆகிய நான்கு தெருக்களில் மட்டும் ஒவ்வொரு தெருவிலும் மாடிவீடு ஒன்று இருந்தது.

*1843* கோவையில் நீதி மன்றங்கள் ஏற்பட்டன.

*1852* ஆங்கில மொழி கற்பிக்க ஆங்கிலோ வெர்ணகுலர் ஸ்கூல் தொடங்கப்பெற்றது; இதுவே பிற்காலத்தில் அரசாங்கக் கலைக் கல்லூரியாயிற்று.

*1860* காங்கேயம் வட்டம் தாராபுரம் வட்டத்துடனும், பெருந்துறை வட்டம் ஈரோடு வட்டத்துடனும் இணைக்கப்பெற்றன.

*1861* ராபர்ட் ஸ்டேன்ஸ் என்ற ஆங்கிலேய வணிகர் கோயம்புத்தூருக்கு வந்தார். காப்பிக்கொட்டையைச் சுத்தம் செய்து விற்பனைக்கு ஏற்றவாறு அமைக்கும் தொழிற்சாலையை (Coffee Curing works) கோயம்புத்தூரில் ஏற்படுத்தினர். கோவை நகராண்மைக் கழகத்தின் முதல் தலைவராக இருந்தவரும் கோவையில் முதலாவதாக கார் வைத்திருந்தவரும் இவரே; பஞ்சாலை தொடங்கியவரும் இவரே.

கோவை நகரின் மக்கள் தொகை *30,000* ஆயிற்று.

*1862* இம்மாவட்டத்தில் இரயில் பாதை ஏற்பட்டது. மத்திய சிறைச்சாலை கட்டப்பட்டது. ஆங்கிலோ இந்தியருக்காக ஸ்டேன்ஸ் உயர்நிலைப்பள்ளி கட்டப்பட்டது.

*1866* கோயம்புத்தூர் நகராண்மைக் கழகம் நிறுவப்பட்டது.

*1888* ஸ்டேன்ஸ் மில் எனப்படும் கோயம்புத்தூர் ஸ்பின்னிங் அண்டு வீவிங் மில் அமைய கோயம்புத்தூரில் அடிக்கல் போடப்பட்டது. இதுதான் இம் மாவட்டத்தில் ஏற்பட்ட முதல் பாஞ்சாலை.

1890 (ஆகஸ்டு 18) முதல் தடவையாக இம்மாவட்டத்தில் ஒரு பஞ்சாலை வேலை செய்யத் தொடங்கியது.

1892 மாட்டு எலும்பு உரத்தொழிற்சாலை துடியலூரில் அமைக்கப்பட்டது.

1893 காளிங்கராயன் அணைக்கட்டும் கொடிவேர் அணைக்கட்டு வாய்க்கால்களும் ஏற்பட்டன.

1907 கோயம்புத்தூரில் வேளாண்மை ஆராய்ச்சி நிலையம் தோன்றியது.

1908 அவிநாசித்தேர் சாய்ந்தது.

1912 பருத்தி அறைக்கும் இயந்திரம் பலப்படத்தில் நிறுவப்பட்டது.

1913 நெல் ஆராய்ச்சிப் பண்ணை கோயம்பத்தூரில் ஏற்பட்டது.

1920 பொள்ளாச்சி நகராண்மைக் கழகம் அமைக்கப்பட்டது.

1922 - 1928 பஞ்சாலைத் தொழிலுக்கு உலகப் புகழ் பெற்ற மான்செஸ்டர் நகரில்போல, கோயம்புத்தூரிலும் நடுநகருக்குள் தொழில்கள் பெருகி ஊரின் தோற்றமே கெட்டுவிட்டதால் பல பகுதிகள் இடித்துப் புதிதாகக் கட்டப்பட்டன.

1928 பொள்ளாச்சி திண்டுக்கல் இரயில் பாதை போடப்பட்டது.

1931 பைக்காரா மின்சாரா நிலையம் கட்டி முடிக்கப் பெற்று, இம்மாவட்டத்தில் மின்சாரம் வழங்கப் பெற்றது. மின்சாரத்தால் இயங்கும் பஞ்சாலைகள் தோன்றலாயின. இதற்குமுன் கோவை நகரில் இருந்த எட்டு ஆலைகளும் நீராவியாலேயே இயங்கிவந்தன.

1932 பொள்ளாச்சி-பாலக்காடு இரயில்பாதை போடப்பட்டது.

1934 மதுக்கரை சிமிண்டுத் தொழிற்சாலை தொடங்கப் பெற்றது. 1920 இல் தீட்டப்பெற்ற சிறுவாணி குடிநீர்த்திட்டம் 39 லட்சம் ரூபாய்ச் செலவில் நிறைவேற்றப்பட்டது.

1939 இரண்டாம் உலகப்போர் மூண்டது. ஆலைகள் பெருகின. சீரும் சிறப்பும் பெற்றுக் கோயம்புத்தூர் நகரம் நாளும் வளர்ச்சியடைந்து நாட்டின் உயிர்நாடியாக இயங்கத் தொடங்கிற்று.

1940 கடற்படையின் விமானத்தளம் கோயம்புத்தூரில் ஏற்படுத்தப்பட்டது. போர்ப் படையினருக்காக உருளைக் கிழங்கு, நெல்லிக்காய், வாழைக்காய், ஆகியவை கெடாமல் அவற்றைத் தகரத்தில் அடைக்கும் தொழில் தொடங்கப் பெற்றது.

1942 ஜப்பானியர் குண்டு வீசியதால் சென்னை நகரத்தை விட்டு மக்கள் ஓடினர். அலுவலகங்கள் வெளியூர்களுக்கு மாற்றப்பட்டன. சென்னை உயர் நீதி மன்றம் தற்காலிகமாகக் கோயம்புத்தூரில் நடைபெற்று வந்தது.

1944 பஞ்சாலைத் தொழிலுக்கு ஒரு பள்ளிக்கூடம் ஏற்பட்டது.

1945 போர்க்காலத்தில் பெரும் பொருளீட்டிய ஆலை முதலாளிகள் இனி இத்தொழிலின் நிலை என்ன ஆகுமோ என அஞ்சி, தங்கள் லாபத்தைக் கொண்டு புதிய தோழில்கள் தொடங்க முனைந்தனர்.

1946 கோவை நகரில் உள்ளூர் பஸ் போக்குவரத்து ஏற்பட்டது.

| | |
|---|---|
| 1947 | இந்தியா சுதந்தரம் பெற்றது. இம் மாவட்டத்தவரான டாக்டர் ரா. க. சண்முகம் செட்டியார் இந்தியாவின் நிதி அமைச்சர் ஆனார். |
| 1953 | கீழ் பவானி அணை கட்ட அடிப்படைக் கல் நாட்டப்பெற்றது. |
| 1956 | கோள்ளேகாலம் வட்டம் மைசூர் இராச்சியத்துக்கு மாற்றப் பட்டது. |
| ,, | இந்தியாவிலேயே முதல் தடவையாக, கோயம்புத்தூரில் ஸ்டேன்ஸ் கம்பெனியரால் புதுமுறையில் காப்பிக்கொட்டை வறுக்கும் இயந்திரங்கள் (Instant coffee plant) பொருத்தப்பட்டன. |
| 1957 | கீழ் பவானி அணை கட்டி முடிக்கப்பெற்றது. |
| 1958 | அமராவதி அணை கட்டி முடிக்கப்பெற்றது. இந்திய அரசாங்கத்து விவசாய ஆராய்ச்சி நிறுவனம் தொடங்கப்பெற்றது. சவுளி ஆராய்ச்சிநிலையம் வேலைசெய்யத் தொடங்கிற்று. |
| ,, | கோபிச்செட்டி பாளையத்தில் தி. மு. க., காங்கிரஸ் மாநாடுகள் நடைபெற்றன. |
| 1959 | பரம்பிக்குளத் திட்ட வேலை தொடங்கிற்று. ஈரோடு நகரில் பெரிய மருத்துவ நிலையம் கட்டப்பெற்றது. |
| 1960 | கோவையிலிருந்து நாகர்கோயிலுக்கு அரசாங்க பஸ் விடப்பட்டது. |
| 1961 | சவுத் இந்தியா விஸ்கோஸ் கம்பெனி தொடங்கப்பெற்றது. |
| ,, | காவிரியில் மிகப் பெரிய வெள்ளம். இதன் விளைவாகப் பவானி நகரம் சில நாட்களுக்குக் காலி செய்யப்பட்டது. |

## BIBLIOGRAPHICAL DATA

Author's Name: S.M.L. Lakshmanan Chettiar, Somalay Pseud. b.1921

Title: Koimbuttur Maavattam
Vol. No. 2 in a Series of books entitled ''Namathu Tamilnadu''.

Language: Tamil
Edition: First
Place of Publication: Madras
Publisher's Address: Paari Nilaiyam,
59, Broadway, Madras-1

Price: Rs. 4-00
Pages: 280
Size of the book. 18 cm
Month of Publication: September, 1961
Brief Indication of Contents:

This is a Book giving encyclopaedic information on geography, history, educational institutions, textile and other industries, development projects, mineral resources, cultural trends, local dialects and places of tourist interest in the COIMBATORE District of Madras State. Maps of Coimbatore City and District, photographs, travel information and statistical tables are appended.

Library Classification No.

Colon V. 44136. N 6
KO

Dewey 915. 482
L 234 C

# ‘சோமலெ’ நூல்கள்

## பிரயாண நூல்கள்

நான் கண்ட வெளிநாட்டுக் காட்சிகள்
அமெரிக்காவைப் பார்!
ஆஸ்திரேலியாவில் ஒரு மாதம்
என் பிரயாண நினைவுகள்
பிரயாணம் ஒரு கலை
பிரயாண இலக்கியம்
நமது தலைநகரம்
நான் கண்ட விழாக்கள்

## வாழ்க்கை வரலாறு

பண்டிதமணி

## மொழி

செட்டிநாடும் தமிழும்
வளரும் தமிழ்




## அரசியல்

நீங்களும் தூதுவர் ஆகலாம்

## பிற

நெய்வேலி
பல்சுவைக் கட்டுரைகள்

## உலக நாடுகள் வரிசை

கனடா
சுவீடன்
குவாயிட்
தாய்லாந்து
பிரான்ஸ்
பீஜித் தீவுகள்
வாட்டிகன்
மொரிசியஸ்
இந்தோனேசியா
ஜப்பான்

## நமது தமிழ்நாடு வரிசை

சேலம் மாவட்டம்
கோயம்புத்தூர் மாவட்டம்
கன்னியாகுமரி மாவட்டம்
வட ஆர்க்காடு மாவட்டம்
தஞ்சாவூர் மாவட்டம்



